# இந்து மலையாளி இனமக்களின் வாழ்வியல் முறைகள்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (Ph.D) பட்டத்திற்குப்

பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்

மு.கலா

(பதிவு எண். 1526)

நெறியாளர்

முனைவர் இரா. குமார்




தமிழ்த்துறை

அழகப்பா பல்கலைக்கழகம்

(தேசியத் தரமதிப்பீட்டுக் குழுவின் ‘A’ மதிப்புப் பெற்றது)

காரைக்குடி - 630 003

தமிழ்நாடு

தமிழ்த்துறை

ஆகஸ்ட் - 2013

**பேரா. முனைவர் இரா.குமார்,**
*உதவிப் பேராசிரியர்*
*தமிழ்த்துறை,*
*அழகப்பா அரசு கலைக்கல்லூரி,*
*காரைக்குடி - 630 003.*

*நாள்:*

## நெறியாளர் சான்றிதழ்

"**இந்து மலையாளி இனமக்களின் வாழ்வியல் முறைகள்**" *என்னும் தலைப்பில்* **திருமதி மு.கலா** *அவர்கள் முனைவர் பட்டத்திற்காகச் செய்த இந்த ஆய்வு, அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப் பெற்றது என்றும், இந்த ஆய்விற்காக வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.*

**(முனைவர் இரா.குமார்)**

*நெறியாளர்*

**மு. கலா,**
*முனைவர்பட்ட பகுதிநேரஆய்வாளர்,*
*தமிழ்த்துறை,*
*அழகப்பா அரசு கலைக்கல்லூரி,*
*காரைக்குடி - 630 003.*

*நாள்:*

## ஆய்வாளர் உறுதிமொழி

"**இந்து மலையாளி இனமக்களின் வாழ்வியல் முறைகள்**" *என்னும் தலைப்பில் முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக அளிக்கப் பெறும் இவ்வாய்வேடு எனது சொந்த முயற்சியினால் உருவானதென்றும், இவ்வாய்வேடு இதற்கு முன்னர் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.*

**(மு. கலா)**

*ஆய்வாளர்*

*உறுதிக் கையொப்பம்*

**பேரா. முனைவர் இரா.குமார்,**
*உதவிப் பேராசிரியர்,*
*தமிழ்த்துறை,*
*அழகப்பா அரசு கலைக்கல்லூரி,*
*காரைக்குடி - 630 003.*

## நன்றியுரை

**இந்து மலையாளி இன மக்களின் வாழ்வியல் முறைகள்** என்னும் தலைப்பில் இந்த ஆய்வினை மேற்கொள்ள எனக்கு அனுமதியளித்த அழகப்பா பல்கலைக்கழகத் துணைவேந்தர், பதிவாளர் ஆகியோருக்கும், தமிழ்த்துறைத் தலைவர் **முனைவர் மு.பாண்டி** அவர்களுக்கும் என் உளமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்விற்குத் தேவையான கருத்துக்களையும், விளக்கங்களையும் கொடுத்து இமைப் பொழுதும் இடைவெளியின்றி ஆசிரியப் பணியோடு, ஆராய்ச்சிப் பணியும் செய்யும் என் நெறியாளர், அழகப்பா அரசு கலைக்கல்லூரித் தமிழ்த்துறைப் பேராசிரியர் **முனைவர் இரா.குமார்** அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றியினை உரித்தாக்குகின்றேன்.

ஆய்வு செவ்வனே நிறைவு பெற எனக்குப் பல்லாற்றானும் துணைநின்ற என் கணவருக்கும், என் பெற்றோர்க்கும், மாமனார், மாமியாருக்கும், தம்பி ரமேஷ்க்கும், குடும்ப உறுப்பினர்கள் அனைவருக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுத் தொடர்பாக என் களப்பணியில் பேருதவியாக இருந்த இந்து மலையாளி இன மக்களுக்கும் இத்தருணத்தில் நன்றி தெரிவித்துக் கொள்ள கடமைப்பட்டுள்ளேன்.

ஆய்வுப் பணியின் போது நல்ல கருத்துக்களைத் தெரிவித்ததோடு, ஆய்வு சிறப்பாக நிறைவு பெற தோள் கொடுத்துதவிய தோழிகள், நண்பர்கள் அனைவருக்கும் நன்றிகள் பற்பல.

இவ்வாய்வேட்டினைச் செம்மையுற கணினியில் அச்சாக்கம் செய்து, கட்டமைப்பும் செய்தளித்த **காரைக்குடி நிதிஷ்பிரபா கம்ப்யூட்டர்ஸ்** நிறுவனத்தாருக்கும் என் நன்றிகள் பல.

மு. கலா

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | - | அகநானூறு |
| ஆ.கோ. | - | ஆசாரக்கோவை |
| இன்னா. | - | இன்னா நாற்பது |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| கலித், கலி. | - | கலித்தொகை |
| குறள். | - | திருக்குறள் |
| குறுந். | - | குறுந்தொகை |
| சிலம்பு. | - | சிலப்பதிகாரம் |
| சிறுபாண். | - | சிறுபாணாற்றுப்படை |
| சி.மூ. | - | சிறுபஞ்ச மூலம் |
| செய். | - | செய்யுளியல் |
| திருமுருகு. | - | திருமுருகாற்றுப்படை |
| திரி. | - | திரிகடுகம் |
| தொல். | - | தொல்காப்பியம் |
| நற். | - | நற்றிணை |
| நாலடி. | - | நாலடியார் |
| நான். | - | நான்மணிக்கடிகை |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| பரி. | - | பரிபாடல் |
| பதிற்று. | - | பதிற்றுப்பத்து |
| புறம். | - | புறநானூறு |
| பொருள். | - | பொருளதிகாரம் |
| மணி. | - | மணிமேகலை |
| மேலது. | - | மேற் சுட்டிய நூல் |
| pp | - | பக்கங்கள் |

# பொருளடக்கம்

## முன்னுரை

காட்டுமிராண்டிகள், ஆதிவாசிகள், பழங்குடிகள், பழைய மரபினர், வரலாற்றிற்கு முற்பட்ட காலத்தினர் என்றெல்லாம் குறிப்பிடப்பட்ட மக்களே நமது முன்னோர்களின் வாழ்க்கையின் எச்சங்களாவர். பழங்குடி மக்களின் எளிமை, இயற்கையோடு இயைந்த வாழ்வு, நீண்ட மரபுள்ள அவர்களின் மருத்துவம் போன்றவை பாதுகாக்கக் கூடியவையாக உள்ளன. பழங்குடிகள் பொதுவாகப் பண்பாட்டிலும் சமூக வளர்ச்சியிலும் தன்னிறைவு கொண்டவர்களாகக் காணப்படுகின்றனர். பிற சமூகத்தினரோடு கலந்து உறவு கொள்ளாத நிலையில், தங்களது கலை, பண்பாடு, மரபு ஆகியவைகள் தன்னிறைவைக் கொடுப்பதாக எண்ணுகின்றனர்.

பண்பாட்டிலும், கலாச்சாரத்திலும், பொருளாதாரத்திலும் பின்தங்கியவர்களாக; விளிம்புநிலை மக்களாக உள்ளனர். உயர் பண்பாட்டு மக்களால் பாதிக்கப்பட்டவர்களாக; மையத்தை நோக்கிச் செல்ல முடியாதவர்களாகக் காணப்படுகின்றனர். இருப்பினும் பிற ஒடுக்கப்பட்டவர்களைப் போல் தாழ்நிலையை அடையவில்லை என்ற கருத்தும் உள்ளது. பழங்குடி மக்களின் இலக்கியம் இதிகாசங்களின், இலக்கியங்களின் ஊற்றுக்கண்ணாக இருந்தபோதிலும், அது நாட்டுப்புற இலக்கியத்தின் சிறு பகுதியாக மட்டுமே கருதப்படுகிறது. இக்குறையை நீக்கி நாட்டுப்புற ஆய்வுகளை மேம்படுத்தும் பொருட்டு இந்து மலையாளி இன மக்களின் வாழ்வியல் முறைகளை ஆய்வுக் களமாக கொண்டு இவ்வாய்வு நிகழ்த்தப் பெறுகிறது.

**ஆய்வுத் தலைப்பு**

"**இந்து மலையாளி இனமக்களின் வாழ்வியல் முறைகள்**" என்பது இவ்வாய்வின் தலைப்பாகும்.

**ஆய்வு நோக்கம்**

பண்பாட்டு அடிப்டையிலான ஒரு மேல்நிலையாக்கம் மலைவாழ் பழங்குடி மக்கள் மீது ஆதிக்கம் செலுத்தி வருகிறது. போக்குவரத்து சாதனங்கள் காடு, மலைப் பகுதிக்குள் ஊடுருவத் தொடங்கிவிட்டன. மக்கள்தொகைப் பெருக்கத்தால் மலை, காடுகளில் உள்ள மரங்கள் வெட்டப்படுகின்றன. சமநிலப் பகுதியிலிருந்த வேளாண் மக்கள் காட்டுப் பகுதிகளிலும் மலைப் பகுதிகளிலும் உள்ள நிலங்களை ஆக்கிரமிப்புச் செய்யத் தொடங்கினர். போக்குவரத்துச் சாதனங்களின் பெருக்கத்தால் வணிகர்களும், கந்து வட்டிக்காரர்களும் பழங்குடி மக்களின் அறியாமையைப் பயன்படுத்திச் சுரண்டினர். பொருளாதாரச் சுரண்டல்களால் தாக்குண்ட பழங்குடிகள் தங்களின் பண்பாட்டை இழக்கத் தொடங்கியுள்ளனர். அவர்களின் மீது பிற மதங்களின் சடங்குகளும், வாழ்க்கை முறையும் திணிக்கப்படுகின்றன. தருமபுரி, நாமக்கல், சேலம் ஆகிய மாவட்டங்களில் வாழும் இந்து மலையாளி இன மக்களின் வாழ்வியல் முறைகளை மானிடவியல் நோக்குடன் ஆராய்ந்து வெளிப்படுத்துவதனை நோக்கமாகக் கொண்டு இவ்வாய்வு நிகழ்த்தப் பெறுகிறது.

**ஆய்வின் பயன்பாடு**

இந்து மலையாளி இன மக்களின் வாழ்வியல் முறைகளை வெளிக் கொணருவதன் மூலம் அவர்களைப் பற்றிய புரிதல்களை, சமநிலை மக்கள் அறிந்து கொள்ளமுடியும். இவ்வாய்வினைத் தொடர்ந்து வெளிவரக்கூடிய ஆய்வுகளால் அவர்களின் தரம் உயர்த்தப்படக்கூடிய சூழல் எழலாம். பழங்குடியினரின் பண்பாடு, கலாச்சாரம், பழக்கவழக்கங்கள் வழியாகச் சங்கத்தமிழரின் தொன்மையினைப் பற்றிச் சிந்திக்கவும் இவ்வாய்வு உதவும்.

**கருதுகோள்**

இவ்வாய்வின் கருதுகோளாகக் கீழ்க்கண்டவை அமைகின்றன. அவை,

♦ பூர்வீகமாக மலைகளை வாழிடங்களாகக் கொண்ட பழங்குடியினரான மலையாளிகளின் பண்பாடு, பழக்கவழக்கம் போன்றவற்றில் சங்கத்தமிழரின் எச்சங்கள் காணப்படுகின்றனவா?,

♦ மலையாளிகளின் வாழ்வியல் முறைகள் மெல்ல மெல்ல நவீனத்துவத்தை நோக்கிப் பயணிக்கின்றதா?,

♦ நிலைத்தக் குடியிருப்பைக் கொண்ட சமநிலை மக்களோடு இரண்டறக் கலக்கும் போது இவர்களின் தனித்துவம் சிதைந்து போகிறதா? என்பதைக் கண்டறிதல் என்பனவாகும்.

**ஆய்வு மூலங்கள்**

இந்து மலையாளியின மக்கள் வாழும் பகுதிகளில் கள ஆய்வு மேற்கொண்டு சேகரித்தத் தரவுகள் இவ்வாய்விற்கு முதன்மைச்

சான்றாதாரங்களாக அமைகின்றன. ஆய்வு தொடர்பான நூல்கள், கட்டுரைகள், கருத்துரைகள், இதழ்கள், ஆய்வேடுகள், இணையச் செய்திகள் ஆகியவை இவ்வாய்விற்குத் துணைமைச் சான்றாதாரங்களாகின்றன.

**ஆய்வு எல்லை**

தமிழகத்தில் 36 வகையான பழங்குடியின மக்கள் வாழ்ந்து வருவதாக ஆய்வுகள் தெரிவிக்கின்றன. அவர்களுள் படகர், தோடர் (நீலகிரி), மலைக்குறவர் (குன்னூர், மேட்டூர், கொல்லிமலை), இந்து மலையாளி (பச்சைமலை, கொல்லிமலை, ஏற்காடு, சேர்வராயன்மலை, கல்வராயன்மலை, பாலமலை, கருமந்துறை, வெள்ளிமலை, சவ்வாதுமலை, ஜருகுமலை, அறநூற்றுமலை, போதமலை) ஆகியோர் குறிப்பிடத்தக்கவர். தருமபுரி, நாமக்கல், சேலம் ஆகிய பகுதிகளில் வாழும் இந்து மலையாளி இன மக்கள் பற்றி ஆய்வது இவ்வாய்வின் எல்லையாகும்.

**ஆய்வு முன்னோடிகள்**

பழங்குடி மக்களைப் பற்றி பலர் ஆய்வு செய்துள்ளனர். ம.இராசேந்திரனின் மெக்கன்சி சுவடிகளில் தமிழகப் பழங்குடி மக்கள், ஆ.செல்லப்பெருமாளின் (ஆய்வுத்திட்டம்) தென் தமிழ்நாட்டுப் பழங்குடிகள், தா.இராபர்ட் சத்திய சோசப்பின் குறும்பர்களின் உறவுமுறை, தமிழ்நாடனின் (தொ.ஆ), தமிழ்நாட்டு மலைவாழ் பழங்குடி மக்கள், அண்ணாமலையின் சவ்வாதுமலை, க.ப.அறவாணனின் பழங்குடி மக்களைப் பற்றிய ஆய்வுகள் போன்றவை இவ்வாய்விற்கு முன்னைய ஆய்வுகளாக அமைகின்றன.

**ஆய்வு அணுகுமுறைகள்**

இவ்வாய்விற்குக் கீழ்க்கண்ட அணுகுமுறைகள் பின்பற்றப்பட்டுள்ளன. அவை,

1. விளக்கவியல் அணுகுமுறை (Descriptive Approach),
2. பகுப்பாய்வு அணுகுமுறை (Analytical Approach)
3. மானிடவியல் அணுகுமுறையும் (Anthropological Approach)

(சமூகவியல், உளவியல், புவியியல், பொருளியல், அரசியல்)

என்பனவாகும்.

**ஆய்வுப் பகுப்பு**

இவ்வாய்வானது முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவை,

1. இனவியல்
2. தொழில்கள்
3. சடங்குமுறைகள்
4. மருத்துவ முறைகள்
5. பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும்

என்பனவாகும்.

முன்னுரையில் ஆய்வுத் தலைப்பு, ஆய்வு நோக்கம், ஆய்வின் பயன்பாடு, கருதுகோள், ஆய்வு மூலங்கள், ஆய்வு எல்லை, ஆய்வு அணுகுமுறைகள், ஆய்வுப் பகுப்பு முதலியன விளக்கப் பெற்றுள்ளன.

**இனவியல்** என்ற முதலாமியலில், நாடோடிகளாய் காடுகளிலும், மலைகளைச் சுற்றியும் வாழ்ந்த மக்களே பழங்குடியினர் என்றும், மலையை ஆளுகின்ற மலையாளி, சங்ககாலத் தமிழர் பண்பாட்டின் எச்சங்களாக இன்றும் இருக்கிறார்கள் என்பதும், மலைகளில் வாழ்ந்த குன்றக் குறவர்கள் தான் தமிழ் இலக்கியங்களில் காணப்படுகின்றனர் என்பதும், உலகளவில், இந்தியாளவில் காணப்படும் பழங்குடிகளின் பொதுவான செய்திகளும், சிக்கல்களும் போராட்டங்களும், அவர்களின் வாழ்விடங்களும் விளக்கப்பெற்றுள்ளன.

**தொழில்கள்** என்பது இரண்டாமியலாகும். இவ்வியலில் பழங்குடிகளின் காட்டுப் பொருட்கள் சேகரிப்பு, வேட்டையாடும் நிலை, தொழிலுக்காக அரசு செய்யும் உதவிகள், விவசாயத்திற்காக இவர்கள் பயன்படுத்தும் கருவிகள், தொழில் நிலையில் மாற்றங்கள், தொழில் நிலையில் ஏற்படும் இழப்புகள், தொழில் தொடங்குவதற்குப் பிற மதத்தினர் உதவும் பாங்கு போன்றன விளக்கப் பெற்றுள்ளன.

**சடங்குமுறைகள்** என்பது மூன்றாமியலாகும். அதன்கண் பிறப்புச் சடங்கு, இறப்புச் சடங்கு, திருமணச் சடங்கு, பூப்புச் சடங்கு, தொழிற்சடங்கு, விழாச்சடங்கு முதலானவை ஆராயப்பட்டுள்ளன.

**மருத்துவ முறைகள்** என்பது நான்காமியலாகும். மலையாளிகளின் அன்றாட உணவுப் பழக்கங்கள், மலைகளில் விளையும் மூலிகைகள், அவற்றின் பயன்பாடுகள், பாரம்பரியத்தை

விட்டு விலகாத இவர்களின் மருத்துவ முறைகள் ஆகியன தெளிவுபட விளக்கப்பட்டுள்ளன.

**பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும்** என்பது ஐந்தாமியல் ஆகும். அதன்கண் பழந்தமிழரின் பழக்கவழக்கங்கள், அவர்களின் உணவுப்பழக்கங்கள், பட்டக்காரர் தேர்வுமுறை, மதம் சார்ந்த பழக்கங்கள், இறப்புக்குப் பின் ஆவியாக உலவுகின்ற ஆன்மாக்கள் பற்றிய நம்பிக்கைகள், தெய்வ வழிபாட்டின் நம்பிக்கைகள், நம்பிக்கையின் கூறாக வெறியாட்டு (சாமியாடுதல், பேயோட்டுதல்) நிகழ்ச்சி, இயற்கையைப் பற்றிய நம்பிக்கைகள், சகுனங்கள் போன்றவை ஆராய்ந்து புலப்படுத்தப்பட்டுள்ளன.

ஒவ்வொரு இயலின் இறுதியிலும் அவ்வியலின் சாரங்கள் தொகுக்கப்பட்டுத் தொகுப்புரையாக கொடுக்கப்பட்டுள்ளன.

ஆய்வில் கண்ட கருத்துக்கள் முறைப்படுத்தப்பட்டு ஆய்வின் முடிவுரையாகத் தரப்பட்டுள்ளது. இதனையடுத்து அகர வரிசைப்படுத்தப் பெற்றுத் துணைநூற்பட்டியல் கொடுக்கப் பெற்றுள்ளது.

கள ஆய்வின் போது இந்து மலையாளி இன மக்களிடமிருந்து திரட்டப்பட்ட பேட்டிகள், நிகழ்வுகள் படம்பிடிக்கப்பட்டு குறுந்தகடாகவும், நிழற்படங்களாகவும் பின்னிணைப்பில் சேர்க்கப்பட்டுள்ளன.

## இயல் - 1

## இனவியல்

இயற்கையோடு கைகோர்த்ததிலிருந்து தொடங்கி, இன்றளவும் தன் இயல்பினை மாற்றாமல் வாழ்ந்து வரும் குடிகளாகப் பழங்குடி மக்கள் திகழ்கின்றனர். நாட்டில் மூன்று கோடிகளுக்கும் அதிகமான இவர்கள் பழந்தமிழரின் எச்சமாகக் காணப்படுகின்றனர். நானூற்றுக்கும் அதிகமான இனங்களாக வாழும் இம்மக்கள் நாட்டில் ஓர் அங்கமாக உள்ளதை மறுக்கவியலாது. பழங்குடிகள் காடு சார்ந்த மலைகளில் வாழ்க்கை நடத்துபவர்களாவர். மற்ற சமூகத்தைச் சாராமல் சுயசார்பு உடையவர்களாக இருப்பவர்கள். தாங்கள் வாழ்கின்ற சூழ்நிலையில் உள்ள இயற்கை வளத்திலிருந்து, பொருட்களைப் பெறுவதற்குரிய மரபு சார்ந்த தொழில் நுட்பத்தை அறிந்தவர்களாக இருக்கின்றனர். மலையாளிகளின் வாய்மொழி இலக்கியம் வளமிக்க மானிடவியல் கருவூலமாகக் கருதப்படுகிறது. இனவரைவியல் என்பது ஒன்றுக்கு மேற்பட்ட இனக்குழுக்களை ஆய்வு செய்வதாகும். இனவியல் என்பது ஒரு குறிப்பிட்ட இனத்தை மட்டும் ஆய்வு செய்வதாகும். அந்த அடிப்படையில் பழங்குடி இனத்தவரான இந்து மலையாளிகளைப் பற்றி விளக்குவது இவ்வியலின் நோக்கமாகும்.

### பழங்குடி மக்கள்

நகர, சிற்றூர் மக்களைத் தவிர மூன்றாவதாகத் தனிப்பட்ட நாடோடிகளாய் காடுகளிலும், மலைகளைச் சுற்றியும் வாழ்ந்த

மக்களே பழங்குடியினர் என அழைக்கப்படுகின்றனர். பழங்குடி மக்கள் என்பதற்குப் பழமையான குடிகள் என்று பொருள் கொள்கின்றனர். “குடி என்பதற்குக் குடியானவன், குடியிருப்போர், குடும்பம், கோத்திரம், குலம், வீடு, ஊர், வாழ்விடம்”(1) என்று தமிழ்ப் பேரகராதி (லெக்சிகன்) குறிப்பிடுகிறது. நிலைத்த குடியிருப்பை ஓரிடத்தில் அமைத்துக் கொண்ட மக்கள் நாகரிக வாழ்வின் வட்டத்திற்குள் வாழக்கூடியவர்கள். பழங்குடி மக்கள், குடிமக்களாவதற்கும் முற்பட்ட பழைய காலத்தின் வாழ்க்கை உடையவர்கள் என்று பொருள் கொள்ளலாம்.

தற்போது மலைகளில் வாழும் பழங்குடி மக்களைக் கேட்டால், தாங்கள் அரச பரம்பரை என்றும், பல்வேறு காலகட்டத்தில் நடந்த போர்களாலும், கலவரங்களாலும் மலைகளுக்கு ஓடி வந்தவர்கள் என்றும் கூறுகின்றனர். “பல்வேறு காரணங்களுக்காகவும் மலையில் வாழும் மக்கள் அனைவரையும் பழங்குடி மக்கள் என்ற நிலையில் கணக்கிடுதல் சரியன்று. பூர்விகமாக மலைகளை வாழிடங்களாகக் கொண்டவர்கள் மட்டுமே பழங்குடி மக்களாவார்கள்”(2) என்பர் ம.இராசேந்திரன். இவரின் கருத்து சற்று ஒப்புக் கொள்ளக் கூடியதாகவும் அமைகின்றது. ஏனெனில், அரசின் சலுகைக்காகத் தங்களைப் பழங்குடி மக்கள் என்று கூறிக் கொள்பவர்கள் நகரங்களில் காணப்படுவதையும், அதில் சிலர் தண்டனை பெற்றதையும் அறியலாம். “சாதி மாறாட்டம் நாடு முழுவதும் பல்லாயிரம். சில ஆண்டுகளுக்கு முன்பு பழங்குடி என்று பொய்ச்சான்று பெற்று

ஒருவர் மருத்துவம் படித்தார். இன்னொருவர் பொறியியல் படித்தார். வழக்கு உயர்நீதிமன்றத்திற்குப் போயிற்று. படிப்பு முடிந்துவிட்டது, இனி என்ன செய்ய என்று அவர்களை மன்னித்த நீதிபதி வேலைவாய்ப்பு மட்டும் அவர்களது உண்மையான சாதி வரம்பில் தான் வழங்க வேண்டும் என்று தீர்ப்புரைத்தார். எனினும், எளியவர்களின் வாய்ப்பை வலியவர்கள் சுரண்டும் வழக்கம் குறைந்துவிடவில்லை. அதனால் அதே நீதிபதி சென்ற ஆண்டு அதே வகை வழக்கில், ஒரு மாணவர் பெற்ற மருத்துவப் பட்டத்தை ரத்து செய்து தீர்ப்பு வழங்கினார்''[3] என்பர்.

**தமிழகப் பழங்குடிகள்**

உலகில் வாழும் பல்வேறு பழங்குடி மக்களிலும் பழமையான மக்கள் இந்தியாவில், குறிப்பாகத் தென்னிந்தியாவில் வாழ்ந்து வருகிறார்கள். இதில் வரையறுக்கப்பட்ட பழங்குடிகள் என்றும், ஆதிகுடிகள் அல்லது தொல் பழங்குடிகள் என்றும் வகைப்படுத்தப் படுகின்றனர். 1971ஆம் ஆண்டு கணக்கெடுப்பின்படி, தமிழ்நாட்டில் சேலம் மாவட்டத்தில்தான் அதிக அளவில் பழங்குடிகள் வாழ்கிறார்கள். ஏனெனில் இம்மாவட்டத்தில் சேர்வராயன் மலை, கல்வராயன் மலை, பாலமலை, பச்சைமலை, கொல்லிமலை ஆகிய மலைகள் இருப்பதே காரணமாகும்.

வரையறுக்கப்பட்ட பழங்குடிகளுக்கும் (ST), வரையறுக்கப்பட்ட இன வகுப்புகளுக்கும் (SC) சில வேற்றுமைகள் உள்ளன. இவ்விரு வரையறுக்கப்பட்ட இன வகைகள்

பொருளாதாரத்திலும், பண்பாட்டிலும் விளிம்புநிலை மக்களாக இருந்து வருகின்றனர். வரையறுக்கப்பட்ட பழங்குடிகள் பொருளாதாரத்தில் பின்தங்கியவர்களாகவும், மையத்தில் வாழுகின்ற உயர் பண்பாட்டு மக்களால் பாதிக்கப் பட்டவர்களாகவும் உள்ளனர். இருப்பினும், சமூகத்தில் தாழ்நிலையை அடையவில்லை. அதற்கு அவர்கள் புறச் சூழல்களைத் தவிர்த்ததன் காரணமாகவும், பிற சமூகத்தினரிடமிருந்து ஒதுங்கி இருப்பதாலும், சுய சார்புடையவர்களாகத் தனித்துக் காணப்படுவதினாலும் இவர்கள் தாழ்நிலையை அடையவில்லை. இருப்பினும் பண்பாட்டு வகையில், ஒரு மேல்நிலையாக்கம் மலைவாழ் பழங்குடி மக்கள் மீது ஆதிக்கம் செலுத்தி வருகிறது.

இந்தியாவில் ஏறத்தாழ 427 பழங்குடிகள் உள்ளன. தமிழகத்தில் மொத்த மக்கள் தொகையில் பழங்குடியினர் 3.5 சதவிகிதத்தினர் ஆவர். பழங்குடிகளின் வகைகள் வருமாறு: அரயன், அரநாடன், இருளன், ஊராளி, எரவல்லன், எருக்கலா, கசபர், கணியன், கணியான், கம்மாரா, காட்டு நாயக்கர், காடர், கணிக்காரர், குடியா, குறும்பர் (அலு குறும்பர், பெட்ட குறும்பர், முள்ளு குறும்பர்), குறுமான், குறிச்சான், குடிமலைக்குடி, கொண்ட காப்பு, கொண்டா ரெட்டி, கொச்சு வேலன், கொரசா, கோத்தர், சோளிகர் உராளி, சோள நாயக்கர், தோடர், பதிமலசார், பல்லியான், பல்லீயன், பளியர், பனியர், புலையர், மகாமலசார், மலஅரையன், மலயகாண்டி, மலகுறவன், மலசார், மலபண்டாரம்,

மலையாளி, மலவேடன், மன்னான், முதுவர், முடுவன், மேலக்குடியான் ஆகியவை அரசால் அடையாளம் காணப்பட்டுள்ளது.

**இந்தியப் பழங்குடிகள்**

இந்தியாவில் மலைகளும், தீவுகளும் நிறைந்த பகுதிகளில் பழங்குடியின மக்கள் வாழ்ந்துள்ளனர். சமவெளியில் வாழ்ந்த பழங்குடி மக்களை வெள்ளையர்கள் தங்களின் சுய லாபத்திற்காகக் காடுகளை நோக்கி விரட்டினர். வெளி மக்களின் கொடிய செயல்களால் தாக்குண்ட பழங்குடியினர், ஏனைய மக்களிடம் நம்பிக்கை கொள்ளவில்லை. “அந்தமான் பழங்குடி மக்களை ஜாரவா, ஓங்கி, செண்டிலி என்று குறிப்பர். ஓங்கி மக்கள் சிறிய அந்தமான் தீவுகளிலும் ஜாராவாக்கள் தென் அந்தமான் தீவின் உட்பகுதியிலும் செண்டிலிசியினர் வடக்குச் செண்டினர் தீவுகளிலும் வாழ்கின்றனர். ஜராவா பழங்குடியினரும் ஒருவரையொருவர் அறிந்தவர்கள் ஆக இருக்கக்கூடும். ஆனால், இவ்விருவரும் பெரிய அந்தமான் பழங்குடியினரை அறிந்திருக்க வாய்ப்பில்லை. பெரிய அந்தமான் பழங்குடியினர் போர்ட் பிளேயர் குடியிருப்புகளால் அழிந்த இனமாக ஆகிவிட்டனர். ஓங்கி பழங்குடியினர் வெளி மக்களின் பழக்கத்திற்கு ஆளாகி வருகின்றனர்”(4) என்பர் க.ப.அறவாணன்.

பழங்குடி மக்கள் என்றவுடன் நாகரிகமற்றவர்கள், படிப்பறிவு

இல்லாதவர்கள், கொடூரமானவர்கள் என்னும் மனநிலையே சமவெளிப் பகுதியினரின் பொதுப்புத்தியாக அறியப்பட்டுள்ளது. “அந்தமான் பழங்குடியினர் ஆபத்தானவர்கள், சட்டை போட்ட நம்மைப் போன்ற நவீனர்களை அவர்கள் வரவேற்பதே இல்லை. நம் படகு கரையைத் தொடும் முன்பே அவர்கள் விசம் தோய்ந்த அம்புகளை நம் மேல் எறிவார்கள் எனப் பழங்குடியினர் இடையே தனது ஆய்வினை மேற்கொள்ளப் போகும் இளைஞனிடம் பழங்குடியினரின் அடையாளங்களாக மேற்கூறிய மோசமான கருத்துக்கள் கட்டமைக்கப்படுகின்றன”(5)என்பர். உண்மையில் இவர்கள் இயற்கையோடு இயைந்த வாழ்வை மேற்கொள்ளுகின்றனர். அவர்களிடமும் அன்பும், அரவணைப்பும் காணப்படுவதை, “கரையில் ஏறிய போது கட்டிப் பிடித்துக் கொண்டார்கள். பழங்குடி மரபுப்படி பெண்கள் என்னை அவர்கள் மடியில் ஒவ்வொருவராக இருத்தி மரியாதை செய்தார்கள். ஒரே ஆட்டமும் பாட்டும், கூத்தும் கும்மாளமும் எந்த நவீன நாகரிகமும் கண்டுபிடிப்பும் இல்லாத அவர்களிடையே தான் எவ்வளவு மகிழ்ச்சி அமைதி”(6) என்பதன் மூலம் பழங்குடியினர் குறித்த மிகச் சரியான புரிதலையும், அவர்கள் மனித நேயம் மிக்கவர்கள் என்பதையும், சக மனிதர்களான நாம் தான் அவர்கள் குறித்த புரிதலின்மையுடன் இருக்கிறோம் என்பதை க.ப.அறவாணனின் அனுபவங்கள் அறிவுறுத்துகின்றன.

## பழங்குடியினர்களின் போராட்டம்

வனம் என்பது பழங்குடி மக்களின் வாழ்வாதாரமாகப் பார்க்கப்படுகிறது. அவர்களுக்கு மட்டுமன்றி, ஏனைய மக்களுக்கும் வனம் மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்தது. அத்தகைய வனத்தை அழியாமல் பாதுகாப்பதில் பழங்குடிகள் மிக முக்கியப் பங்காற்றுகின்றனர்.

இம்மக்கள் சுரண்டல்கள், மதத் திணிப்புகள் இவற்றிலிருந்து தங்களைக் காப்பற்றிக் கொள்ள போராட்டங்களை நடத்தத் தொடங்கியுள்ளனர். “மேற்கு இந்தியப் பகுதிகளிலும், பீகார், மத்தியப் பிரதேசங்களிலும் தொடங்கிய இப்போராட்டங்கள் அசாம் நாகர்களிடத்து ஆயுதம் தாங்கிய போராட்டமாக உருவெடுத்தது. ஒரிசா மாநிலத்தில் தாங்கள் இழந்த நிலத்தைச் சத்தியாகிரகப் போராட்டத்தால் அவர்கள் ஓரளவிற்கு மீட்டுக் கொண்டுள்ளனர்.

சந்தால் பழங்குடி வரலாற்றில் பல போராட்டங்களைக் காணமுடிகிறது. வட்டிக்குப் பணம் கொடுத்து பழங்குடி மக்களைச் சுரண்டிக் கொண்டிருந்த மகாஜனங்களை எதிர்த்து 1855ஆம் ஆண்டு அவர்கள் மாபெரும் போராட்டம் நடத்தினர். பணம் கொடுக்க இயலவில்லையென்றால் அடிமை போன்று வேலை செய்ய வேண்டும். மகாஜன வீடுகளை அவர்கள் தாக்க ஆரம்பித்துவிட்டனர். அன்று சிந்து, கண, சந்து, பைரால் என்ற நால்வர் போராட்டத்திற்குத் தலைமை தாங்கினர். அதிகார வர்க்கத்திற்கு அடிபணிய மறுத்துத் தங்களது வீரத்தைக் காட்டிப்

போராடினர். அதில் ஓரளவு வெற்றியும் பெற்றனர். இன்றும்கூட சந்தால் பழங்குடியைச் சேர்ந்த சிலர் தீவிர பொதுவுடமை இயக்கத்தில் பங்கு கொண்டிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்"(7) என்பர் ம.இராசேந்திரன்.

இந்துமதச் சமுதாயச் சீர்திருத்தவாதிகளும், கிறித்துவப் பாதிரிமார்களும் மத மாற்றத்தின் வழி அவர்களின் வாழ்க்கையைச் சீராக்க முயற்சி செய்கின்றனர். அரசியல் கட்சிகள் தேர்தல் நேரங்களில் பழங்குடி மக்களின் பிரச்சினைகளில் கவனம் செலுத்துவதும்; அரசு அவ்வப்போது அறிக்கைகளை விடுவதும் தொடர்கதையாக அமைந்துள்ளது. தன்னார்வ தொண்டு நிறுவனங்களும் பழங்குடி மக்களின் முன்னேற்றத்திற்குப் பாடுபட்டு வருகின்றன. சில பகுதிகளில் பழங்குடி மக்களே தங்களுக்குரிய சலுகையைப் போராடிப் பெற்று வருவதும் பெறப்படுகிறது.

இவர்களின் அச்சம் வேறுபாடுடையதாக இருக்கின்றது. சிங்கத்தைக் கண்டு அஞ்சாத மலையாளி ஒரு (Jeep) உந்துவண்டியின் உறுமலைக் கேட்டு ஒளிந்து கொள்கிறான். காரணம் அது இதயமற்றதாய், அதிகார வாகனமாய் அவனது வாழ்க்கையை அழிப்பதுதான். வெள்ளைத் தோலைக் கண்டு வெகுண்டு ஓடிய அந்தக் காலத்து பழங்குடியும், காக்கிச் சட்டையைக் கண்டு அச்சமுறும் இன்றைய மலையாளியும் ஒரே மாதிரிதான் என்ற உண்மை உணரப்படுகிறது. காலங்கள் மாறினாலும் பழங்குடி மக்களது அச்சம் மாறாமல் அப்படியே உள்ளது.

**பழங்குடிகளின் பொதுப் பழக்கங்கள்**

எல்லா நாடுகளிலும் பழங்குடி மக்கள் இருந்துவருகின்றனர். நாகரிகமற்ற முன்னோர் வாழ்வின் எச்சமாக எங்கும் காணப்படுகின்றனர். “பண்டைய காலத்து வரன்முறை அற்ற உறவே. ஆண், பெண்பாலாரிடையே இருந்தது. நாகரிகமும் பண்பாடும் முதிர முதிர அவரிடை காதல் ஒழுக்கத்திலும் கட்டுப்பாடு வளர்ந்தது. அதன் முதிர்ச்சி அறவழியில் திரும்பிற்று. விரும்புவரைக் கவர்ந்து நுகர்ந்து விலக்கி விடுதலைப் பழைய நாகரிகங்களின் தொடக்கங்கள் காட்டுகின்றன.

கிரேக்க நாட்டில் அமண்நிலை (Nakedness) ஒரு குற்றமாகவே கருதப்படவில்லை. பொதுமக்கள் தன்னிச்சையாகவே ஒழுகினர். வலிந்து புணர்தல் உரோமை நாட்டின் முது பழக்கம். பார்மோசான் (Formosan)பழங்குடியினர், பலரும் அறியப் புறமருங்கே புணர்வர். யாப் (Yap) பழங்குடியினர் மற்றவர் பார்ப்பது பற்றிக் கவல்வதில்லை. கோண்டு (Gond) என்ற பழங்குடியினர் இல்லத்தில் கலவாமல், இல்லப்புறம் உள்ள புதரருகில் புணர்ந்து மகிழ்வர். செஞ்சுப் (Chenchus) பழங்குடியினர் இரவு மறை புணர்ச்சியை வெறுப்பர். இரவும் இருட்டில் கருவுறும் குழந்தையும் குருடாகப் பிறக்கும் என்று நம்புவர். அதனால் பகலையே விரும்புவர்.

மலையாளப் புலச் செறுமர் என்ற பழங்குடியினர் தாம் விரும்பும் பெண் இருக்கும் இடம் சென்று அவளுடன் பலரும் அறிய

(மணம் முடியாமலே) இராத் தங்குவர். நீலகிரி மலைவாழ்; கோடர் (Kotas) பழங்குடி இளைஞர், பெண்ணை அழைத்துச் சென்று அவர் விரும்பும் இடத்தில் இராத் தங்குவர். பொழுது புலர்ந்து இல்லம் வரும் பெண்ணைப் பெற்றோர், உனக்கு அவரைப் பிடிக்கிறதா என்று வினவுவர். பிடித்தது என்று அவள் உரைத்தால் மனைவி ஆவாள். இன்றேல் குற்றம் எனக் கொள்ளாது விட்டு விடுவர். குறும்பர் என்பார் நீலகிரி வாழ் பழங்குடியினர். அவரிடம் மணச் சடங்கு என்ற ஒன்றே இல்லை. சோளகர் (Scholgar) பழங்குடி இளைஞர், தாம் விரும்பும் இளையவளைக் காட்டுக்குக் கூட்டிச் செல்வர்; இருவரும் மூன்று நாட்கள் கானகத்தில் சேர்ந்து களிப்பர். பின்னர்த் தாயகம் திரும்புவர். தோடர்களிடம் காமம் சாலா இளமை மணமே உண்டு."[(8)] இவையெல்லாம் முன்பிருந்த நெறியற்ற காம ஒழுக்கங்களைக் காட்டுவன. இவற்றின் எச்சங்களே இன்றும் மேலே உள்ள சில பழங்குடியினரிடம் தேயாமல் காணப்படுகின்றன.

### நடுகல் பழக்கம்

போரில் இறந்துபட்ட வீரனுக்காக, வணக்கத்திற்குரியதாக அமைக்கப்படும் கல் நடுகல் எனப்படும். "காசிகள் இந்தியப் பழங்குடியினர். இவர்களிடம் உள்ள நடுகல் வழக்கத்தை டேவிட் ராய் என்பார் நேரில் கண்டு விளக்கியுள்ளார். அவ்வழக்கம் அனைத்தும், தமிழில் கூறப்படும் காட்சி, கால்கோள், நீர்ப்படை, நடுகல், சீர்த்தகு மரபிற் பெரும்படை வாழ்த்தல் என்பவற்றோடு பெரிதும் ஒத்துள்ளது.

கோண்டு (Gond) என்ற பழங்குடிகளில் ஒரு பிரிவினர் கோயர். இவர் கோதாவிரி, விசாகப்பட்டினம், ஸ்ரீகாகுளம் ஆகிய மாவட்டங்களில் வாழ்கின்றனர். தெலுங்கு பேசும் இத்திராவிடப் பழங்குடியினர் இறந்தவர்களை எரிப்பர். எரித்தவர் எலும்புகளைத் திரட்டி ஓர் இடத்தில் புதைப்பர். புதைத்த அவ்விடத்தில் ஒரு நடுகல்லை நட்டு வழிபடுவர்.

கதபர் என்ற பழங்குடிகள் ஆந்திராவில் வசிக்கின்றனர். பங்குனி மாதத்தில் விழா எடுப்பர். இவ்விழாவில் எருமையைப் பலி கொடுப்பர். இறந்தவர்களைப் புதைப்பர். புதைத்த இடத்தில் நடுகல் நடுவர்.

கசவர்கள், தமிழகத்து நீலகிரிப் பகுதிகளில் வாழும் பழங்குடியினர். இவர்களிடம் நடுகல் நடும் பழக்கம் இன்றும் உள்ளது. எவரேனும் இறக்க நேரின், இறந்தவர்தம் கால்களை வெட்டுவர். இப்பழக்கம் ‘குழவி இறப்பினும் ஊன்தடி பிறப்பினும்’ ஆளன்று என்று வாளில் தப்பாப் பண்டைய வழக்கின் எச்சம் போலும். பிணத்தைக் குழியினுள் இட்டு மூடி விடுவர். பெரிய பாறாங்கல்லைக் கொண்டு மூடுவர். அக்கல்லைக் கோட்டைக்கல் என்பர். இறந்த மூன்றாவது நாளன்று பிணத்தை வைத்த இடத்தில் ஒரு கல்லை நடுவர்; பூசை செய்வர். ஒவ்வொரு ஆண்டிலும் அங்கு ஆண்டுபூசை நிகழ்த்துவர். அன்றும் ஒரு கல்லினை நடுவர். அங்கு அரிசிப் பொங்கலிட்டுப் படைத்துப் பூசை செய்வர்.

இருளர் என்ற பழங்குடியினர், நீலகிரி வட்டாரத்திலேயே வாழ்கின்றனர். இவர், தம்முள் இறந்தவர்களைப் புதைக்கும் வழக்கத்தினர். புதைத்த இடத்தில் நடுகல் நடுவர். இருள இல்லத்தில் உட்பிரிவு ஒவ்வொன்றிற்கும் தனித்தனி நடுகற்கள் உள்ளன. பழைய காலத்தில் குடும்பத்தைச் சேர்ந்த அனைவரையும் இறந்தவுடன் ஒரே குழியில் புதைத்து வந்தனர். சில இடங்களில் ஆண்களுக்கு ஓரிடம், பெண்களுக்கு ஓரிடம் எனப் பிரித்துப் புதைப்பர் என்பர்"(9) க.ப.அறவாணன்.

**பழங்குடியினரின் சிக்கல்களும் தீர்வுகளும்**

பழங்குடி மக்கள் தமது மரபுவழி தொழிலினை விடுத்து, கூலித் தொழிலாளர்களாக மாறிக் கொண்டிருக்கின்றனர். இந்தியா வேளாண்மை நாடாகியதால் பழங்குடி மக்கள் விவசாய வேலைகளில் ஈடுபடுகிற போது அவர்களின் பிரச்சினை பெரும்பான்மையான இந்திய விவசாயிகளின் பிரச்சினைகளாகி விடுகிறது. பெரும் நிலவுடையாளர்களின் ஆக்கிரமிப்பினால் இவர்களின் வாழ்வாதாரம் பெரிதும் பாதிக்கப்படுகிறது. விஞ்ஞான வளர்ச்சியும், போக்குவரத்து சாதனங்களும் இவர்களின் வாழ்க்கையைப் பாதிக்கின்றன. இனிமேலும் இவர்கள் தனித்து வாழ்வது என்பது கேள்விக்குறியாகவே இருக்கும். பழங்குடி மக்களை மலைகளில் உணவு தேடுபவராகவோ, வேட்டையாடுபவராகவோ தனித்து வைத்திருக்க இச்சமூக அமைப்பு அனுமதிக்கப் போவதில்லை. போக்குவரத்தும், மின்சாரமும், வானொலியும்,

தொலைக்காட்சிகளும் அவர்களின் தனித்த வாழ்க்கையை மாற்றிவிடப் போகின்றன. அவர்கள் புதிய வாழ்க்கையின் பரிமாணத்தை உணரத் தொடங்கியிருக்கிறார்கள். அதனை அரசுகள் எவ்வாறு கையாளுப் போகின்றன என்பதைப் பொறுத்தே அவர்களின் எதிர்காலம் அமையப் போகின்றது.

இந்திய மண்ணின் இயற்கையை அழியாமல் காத்து வருவதில் பழங்குடி மக்களுக்கு மிக முக்கியப் பங்குண்டு. காடுகள் பல்லுயிர்ப் பெருக்கத்தின் காரணியாய் விளங்குகின்றன. வளர்ச்சி என்னும் பெயரால் சுட்டப்படும் கனரகத் தொழிற்சாலைகள் அணைக்கட்டுகளால் தங்கள் வாழ்விடங்களை இழந்து சொந்த மண்ணிலேயே அகதிகளாய்ப் பழங்குடி மக்கள் வாழ்கின்றனர். பன்னாட்டு நிறுவனங்கள் பெருந்தோட்ட முதலாளிகளுக்காக வனங்களை அரசு தாரை வார்ப்பதால் அங்குள்ள மக்கள் மட்டுமல்லாது அங்கு வாழும் பல்லாயிரக்கணக்கான உயிரினங்கள் வாழ்விடங்களும் பறிபோய் விடுகின்றன.

பழங்குடி மக்களின் உண்மையான பிரச்சினைகள் என்பவை அவர்களின் வாழ்விடத்தை, சடங்குகளை, நம்பிக்கைகளை மாற்ற நினைப்பதில் கிடையாது. அவர்களின் பொருளாதாரத்தில்; கல்வி வளர்ச்சியில் இருக்கின்றது. அறிவியலைப் புறந்தள்ளிவிட்டு எந்நாட்டின் வளர்ச்சியும் அமைந்துவிடாது. அவ்வக்காலத்தில் ஏற்படும் பொருள் உற்பத்தி முறையில் பழங்குடி மக்களைப் பங்கு கொள்ளச் செய்தல் காலத்தின் அவசியமாகிறது. நவீன பொருள்

உற்பத்திமுறையை அவர்களுக்குக் கற்பித்து, மற்ற மக்களோடு அவர்களை ஒன்றுபடுத்த வேண்டும். அடுத்த நூற்றாண்டிற்கு அவர்களை அழைத்துச் செல்வதும், அரவணைத்துச் செல்வதும் தான் அவர்களின் சிக்கல்களுக்குத் தீர்வாகும்.

**தொல்காப்பியர் காலப் பழங்குடி இனங்கள்**

ஒவ்வொரு திணையிலும் வாழுகின்ற மக்களைப் பற்றி தொல்காப்பியம் உரைக்கிறது. திணை நிலைப் பெயர் என்பதற்கு உரையாசிரியர்களிடம் பல்வேறு கருத்து வேறுபாடுகள் இருக்கின்றன. நச்சினார்க்கினியர் மட்டும் திணைநிலைப் பெயர் என்ற இருபத்திரண்டாம் நூற்பா ஆட்சியையும்; திணைப்பெயர் என்ற இருபத்தி மூன்றாம் நூற்பா ஆட்சியையும் வேறு வேறாக விளக்குவர். அவரே சொல்லதிகாரத்தில் திணை நிலைப் பெயர் என்பதற்குக் குறவர், இறவுளர், வேட்டுவர், ஆயர், பொதுவர், நுளையர், திமிலர், பரதவர், களமர், உழவர், எயினர், மறவர் எனப் பொருள் விளக்கினார். இதனை, மற்றையவரிடமிருந்து; மற்றைய திணையாரிடமிருந்து பெயர்த்துக் காட்டுவதே பெயர். முல்லை, குறிஞ்சி முதலான திணைகளில் மாந்தர்தம் இயற்பெயர்கள் சுட்டப்படா. இடையன், மலையன் என்பன போன்ற பொதுப்பெயர்களே சுட்டப்படும். அப்பொதுப் பெயர்கள் இரண்டு அடிப்படையில் வழங்கும்.

*1.* பெயர் (பொருள்) சுட்டி வருவன

சான்று: குன்று-மலை-பெயர்

குன்றவன் குறவன், குன்றத்தி குறத்தி

2. வினை சுட்டி வருவன

சான்று: உழவு-உழுதலாகிய வினை-உழவன்/உழத்தி

திணைவழிப் பெயர்கள் பொருள் அடிப்படையிலும், தொழில் அடிப்படையிலும் தோன்றும்''(10) என்பதுவே தொல்காப்பியர் கருத்து என்கிறார் க.ப.அறவாணன்.

குறிஞ்சி - மலைநிலம்; முல்லை-காட்டு நிலம்; மருதம்-வயல்நிலம்; நெய்தல்- கடல் நிலம். இவற்றுள் குறிஞ்சியும் முல்லையும் பழையவை. சமூகமும், அரசும் உருவாகாத நிலையில் ஆங்காங்கே மனித இனக்குழுக்கள் இருந்தன. அவற்றிற்குரிய அப்போதைய செல்வம் மாடுகளே. மலையில் விளையும் தினையிலும், மூங்கிலரிசியிலும் தேனைக் கலந்து உண்டனர் குன்றவர். கிழங்கு அகழ்ந்து தின்றனர். அவை உழவியற்றி வந்தன அல்ல. வேளாண்மை அறியாமல் வாழ்ந்த காலம் குறிஞ்சி நில மக்களின் காலமாகும்.

மனித நாகரிகம் வளர வளர, வேளாண்மையும் வணிகமும் வளர்ந்தன. நெய்தலும் மருதமும் செழித்தன. வணிகமும் உழவும் பெருகின. மழையில்லாமல், மலை வறண்டது, காடு கருகியது அதனால் பாலைநிலம் பிறந்தது. தாங்கள் சேர்த்து வைத்திருந்த பொருளால், வணிகரும், உழவரும் தம்மைக் காத்து இன்புற்றிருந்தனர். சேர்த்து வைத்து வாழத் தெரியாத குறவர்களும்,

ஆயர்களும் துன்புற்றிருந்தனர். வருவோர் போவோரிடம் வழிப்பறி செய்தனர். கொள்ளை கொண்டனர். கொலை செய்தனர். இவர்களால் பாதிக்கப்பட்டவர் நெய்தல் நில வாணிகரும், மருதநில வேளாளரும் ஆவர். இவர்கள், அவர்களைக் கள்வர் எனப் பழித்தனர். குறவர் என இழித்தனர்; மலை வாழ்நரும், கான் வாழ்நரும் பொருளின்றியும் போற்றுதல் இன்றியும் பாலை மறவர் ஆயினர்; குறவர் மறவர் ஆயினர்; ஆயர் தீயர் ஆயினர்"(11) என்பர் க.ப.அறவாணன். மலைவாழ் மக்கள் வேட்டையாடுதலோடு வறுமையுற்ற காலங்களில் வழிப்பறி போன்ற குற்றச் செயல்களில் ஈடுபட்டமை அறியப்பெறுகிறது.

இருளர்கள் தமிழகப் பழங்குடியினர். அவர்கள் தற்போது வட ஆர்க்காடு மாவட்ட நவிர மலைக்காடுகளில் வாழுகின்றனர். இவர்கள் இக்காலத்தும் மாடுகளைத் திருடிக் காட்டிற்குக் கொண்டு சென்று விடுகின்றனர். இச்செய்தி, பழைய ஆநிரைக் களவின் எச்சமாகும்.

**இலக்கியங்களில் பழங்குடிகள்**

பழங்குடி மக்களின் வாழ்க்கையைக் கூறும் பழமையான இலக்கியங்களுக்கு உரிய மொழியாகத் தமிழ் விளங்குகிறது. ஐவகை நிலப்பிரிவுகள் மனிதன் தோற்றத்தையும் மனித இனத்தின் பண்பாட்டு வளர்ச்சியினையும் அறிய உதவுகின்றன என்ற தனிநாயகத்தின் கூற்று நோக்கத்தக்கது. ஐந்திணைப் பாகுபாடுகளும்,

நானில மக்கள் பிரிவுகளும் ஒரே நிலத்தன்மையுடைய திணையில் வாழும் குழுக்களுக்கிடையே நடந்த போர்களைக் குறிக்கின்றன. தமிழகத்திலிருந்த நிலப் பாகுபாடுகளும் அங்கு வாழ்ந்த மக்கள் பற்றிய செய்திகளும் சங்க இலக்கியத்திலும், தொல்காப்பியத்திலும் காணப்படுகின்றன. வேலன் வெறியாட்டு, நடுகல் வழிபாடு, ஆய்ச்சியர் குரவை, குன்றக்குரவை, வள்ளைப்பாட்டு போன்ற பழங்குடி மக்களின் வாழ்க்கை முறைகள் இலக்கியங்களில் பதிவு செய்யப்பட்டுள்ளன.

மழைவளம் வேண்டி குறிஞ்சிநில மக்கள் வழிபாடு செய்ததை,

“மழைவான் கொள் கெனவுயர் பலிதூஉம்
மாரியான்று மழை மேக குயர்கெனக்
கடவுட் பேணிய குறவர் மாக்கள்
பெயல்கண் மாறிய உவகையர்”[12]

என்ற புறநானூற்றுப் பாடலின் வழி அறியலாகிறது.

குன்றக்குறவன் ஆரவாரம் செய்ததால் மழை பெய்ததாக ஐங்குறுநூற்றுப் பாடல் கூறுகிறது. இதனை,

குன்றக் குறவன் ஆர்ப்பின் எழிலி
நுன்பல் அழிதுளி பொழியு நாட!”[13]

என்ற அடிகள் உணர்த்தும். கானவர் நம்பிக்கையும், அவர்கள் வளத்தை விரும்பிச் செய்யும் சடங்கையும் நற்றிணை கூறுகிறது. கானவன் காட்டுப் பசுவின் மீது அம்பு எய்தான். அம்பு, குறி தவறிவிட்டது. உணவாக வேண்டிய விலங்கு தப்பிவிட்டது.

அதற்குக் காரணம் மலைத் தெய்வத்தின் கோபம் என அவன் நம்பினான். மழை பெய்தால் அம்மலைத் தெய்வத்தின் சினம் தணியும் என நினைத்தான், உடனே சுற்றத்தினரை அழைத்துக் கொண்டு விருப்பத்தோடு மலைமேல் ஏறிச் சென்றான். அங்கு அவர்கள் கடவுளைப் பேணி மகிழ்ந்தனர். இதனை,

"அமர்க்கண் ஆமான் அருநிறம் முள்காது
பணைத்த பகழிப் போக்கு நினைத்து கானவன்
அணங்கொடு நின்றது 'மலைவான் கொள்க' எனக்
கடவுள் ஓங்கு வரை பேண்மார் வேட்டெழுந்து
கிளையோடு மகிழுங் குன்றநாடன்"(14)

என்ற நற்றிணைப் பாடல் புலப்படுத்தும். பழங்குடி மக்களைப் பற்றிய செய்தியை,

"வயவால் எறிந்து வில்லின் நீக்கி
பயம்நிரை தழீஇய கடுங்கண் மழவர்
அம்புசேண் படுத்து வன்புலத்து உய்த்தென
தெய்வம் சேர்ந்த பராரை வேம்பில்
கொழுப்பு ஆஎறிந்து குருதி தூஉய்
புலவுப் புழுக்கு உண்ட வான்கண் அகல்அறை"(15 )

என்ற அகநானூற்றுப் பாடல் சுட்டும்.

**பழங்குடியினரின் எருமைச் செல்வம்**

சங்காலத் தமிழர்களைப் பொறுத்த அளவில் மாடுகளே செல்வமாக இருந்தன. மாடு என்பது எருமைகளைக் குறிப்பது.

“இன்றும் திராவிடப் பழங்குடியினரான தோதுவர் எருமை மாடுகளையே செல்வமாகப் போற்றுவர். நீலகிரிப் பகுதியில் இன்றும் வாழும் தோதுவர், திராவிடப் பழங்குடியினர். இவர் பேசும் மொழி திராவிடம் ஆகும். இவர்தம் வாழ்வு, எருமைச் செல்வத்தைச் சுற்றியே அமைந்துள்ளது. அதனால் இவரை, எருமையின் குழந்தைகள் என்றே மொழிவர். எருமையை வைத்தே இவர்தம் செல்வம் கணக்கிடப்படும். இவர் பேசும் தோடர் மொழியில் எருமையைக் குறிக்க நூற்றிற்கு மேல் சொற்கள் புழங்குகின்றன. தெய்வத்திற்கு அடுத்தபடியாக எருமையைத் தான் தெய்வமாக வழிபடுகின்றனர். இவர்தம் வாழ்க்கையில் பலவகைச் சடங்குகள் உள்ளன. அச்சடங்குகள் பெரும்பாலும் எருமைகளை அடிப்படையாகக் கொண்டவை. தோதுவர் எருமையைப் பெரிதாகப் போற்றுவர்.

சங்க இலக்கியத்தில், தமிழ் நாட்டவராகக் குறிக்கப்படும் எருமை வெளியனார், எருமை வெளியனார் மகனார் கடலனார் என்ற புலவர்கள் குறிக்கப்பட்டுள்ளனர். எருமை வெளியன் என்ற பெயரினை உடையவன் சங்கப் புலவர்களால் பாடப்பட்டிருக்கிறான். எருமை ஊரன் என்றே ஒருவன் குறிப்பிடப்படுகிறான். பண்டு மைசூர் நாடு தமிழ்ப்புலமாக இருந்த போது அஃது எருமை நல்நாடு என்றே வழங்கப்பட்டது. மைசூர்- எருமை ஊர் என்றே போற்றப்பட்டது”(16) என்பர் க.ப.அறவாணன்

**சிலம்பு தரும் செய்தி**

குறிஞ்சி நில மக்களாகிய குன்றவர்கள், குன்றத்தில் ஆடிய கூத்துக்களையும், வழிபாட்டு முறைகளையும் இளங்கோவடிகள் தம் காப்பியத்தில் பாடியுள்ளார். குறிஞ்சி நில மக்களின் பாடல் ஆடல்களை குன்றக்குரவை காதையில் கூறுகிறார். குரவை என்று பெயர் பெறும் காதை இரண்டு. ஒன்று முல்லை நில மக்கள் ஆடிய ஆய்ச்சியர் குரவை, மற்றொன்று குறிஞ்சி நில மக்கள் ஆடிய குன்றக்குரவை. குன்றக்குரவை தம் குன்றத்தில் வந்து நின்ற கண்ணகியை, வானோர் வந்து அழைத்துச் சென்றதை நேரில் கண்டு, மகிழ்ச்சியால் ஆடிய குரவைக்கூத்து. இன்றும் பழங்குடி மக்கள் கண்ணகியை, தம் தெய்வமாக நினைத்து வழிபடுகின்றனர்.

மலைகளில் வாழ்ந்த குன்றக் குறவர்கள் தான் சிலப்பதிகாரக் காப்பியம் தோன்றுவதற்குக் காரணமாயிருந்தவர்கள். இவர்கள் குணவாயில் கோட்டத்தில் அரசினைத் துறந்திருந்த இளங்கோவிடம் தாம் கண்ட காட்சியைக் கூறினர். இளங்கோ சொற்கோயில் கட்டினார். இதே குன்றக் குறவர்கள் தான் சேரன் செங்குட்டுவனிடம், கண்ணகி கதையைக் கூறினர். அவன் கற்கோயில் கட்டினான். சிலப்பதிகாரக் காப்பியத்திற்கு அடித்தளமாக அமைவது குன்றக் குரவை தான். இதனை,

“குணவாயில் கோட்டத்து அரசு துறந்து இருந்த
குடக்கோச் சேரல் இளங்கோ அடிகட்குக்
குன்றக்குறவர் ஒருங்குடன் கூடிப்
பொலம் பூவேங்கை நலம்கிளர் கொழுநிழல்

ஒருமுலை இழந்தாள் ஓர்திருமா பத்தினிக்கு
அமரர்க்கு அரசன் தமர்வந்து ஈண்டிஅவள்
காதல் கொழுநனைக் காட்டி அவளொடு எம்
கண்புலம் காண விண்புலம் போயது
இறும்பூது போலும் அறிந்து அருள் நீ என"[17]

என்கிறது சிலப்பதிகாரப் பதிகம். சேரநாட்டின் கிழக்குத் திசையில் குணவாயில் என்ற இடத்தில், ஒரு கோயிலில் சேரநாட்டு இளவரசர் துறவு பூண்டு இருந்தார். அவரைக் காண அந்நாட்டுக் குறிஞ்சி நிலமக்கள் வந்து தாம் கண்ட வியப்பான நிகழ்ச்சியைக் கூறினர். பொன் போன்ற பூக்களையுடைய வேங்கை மரத்தின் நிழலில், ஒரு முலையை இழந்த ஒரு பத்தினிப் பெண் நின்று கொண்டிருந்தாள். வானுலகிலிருந்து அமரர்க்கு அரசனைச் சார்ந்தோர் சிலர் வந்தனர். அவளை நெருங்கி அவளிடம் அவள் காதல் கணவனைக் காட்டி, அவனையும் அழைத்துக் கொண்டு எங்கள் கண்காண, விண் உலகம் சென்றனர். அது எங்களுக்கு மிகுந்த வியப்பாக இருந்தது என்றனர். மலைப்பகுதியில் பழங்குடிகள் வாழ்ந்ததை இக்கருத்து அரண் செய்யும்.

**மலைக்குறவர்கள் எழுப்பும் ஓசைகள்**

மலைக்குறவர்கள் குரவையோடு பல்வேறு ஓசைகளை எழுப்புவதை சிலப்பதிகாரம் பதிவு செய்துள்ளது. அதனை,

"குன்றக் குரவையொடு கொடிச்சியர் பாடலும்
வென்றிச் செவ்வேள் வேலன் பாணியும்

திணைக்குறு வள்ளையும், புனத்து எழு விளியும்
நறவுக் கண் உடைத்த குறவர் ஓதையும்
பறைஇசை அருவிப் பயம் கெழும் ஓதையும்
புலியொடு பொரூஉம் புகர்முக ஓதையும்
கலிகெழு மீமிசைச் சேணோன் ஓதையும்
பயம்பில் வீழ் யானைப் பாகர் ஓதையும்
இயங்கு படை அரவமொடு யாங்கணும் ஒலிப்ப"[18]

என்ற பகுதி விளக்கும்.

குன்றக்குரவை ஆடும் பொழுது எழும் பாட்டொலி, குறத்தியர் என்ற பாட்டொலி, வெற்றி பொருந்திய செவ்வேளைப் பற்றி வேலன் பாடிய பாட்டொலி, திணைகுற்றுவோர் பாடும் உலக்கைப் பாட்டொலி, திணைப்புனத்தில் பறவை ஓட்டுவார் பாடும் பாட்டொலி, தேனடைக் கண்ணை உடைத்த குறவர் எழுப்பும் ஆரவார ஓசை, பறை போன்று முழங்கும் அருவியின் இசையும், அதனால் பயன்பெற்றோர் எழுப்பும் ஒலி, புலியொடு யானை போரிடும் போது எழுப்பும் யானையின் பிளிறல், பரண் மீது இருந்து விலங்குகளை விரட்டுவோர் எழுப்பிய ஓசை, குழியில் விழ்ந்த யானையைப் பிடிக்கும் பாகர் எழுப்பும் பேரொலி, சேரனின் படை இயக்கத்தால் ஏற்படும் ஒலி என்று ஒருசேர மலைகளில் வாழும் மக்களின் வாழ்வோடு இயைந்த ஒலியைப் பற்றி சிலப்பதிகாரம் கூறுகிறது. மலைவாழ் மக்கள் வாழிடங்களில் நிகழும் ஒலியினை இக்கருத்துப் புலப்படுத்தும்.

## மலை வளம்

மலையில் விளையும் பலவிதமான விளைபொருட்களைக் குறவர்கள் பயன்படுத்தியுள்ளனர். அவர்கள் விருந்தினர்களுக்கு அவற்றைப் பகிர்ந்தளித்துள்ளனர். இதனை,

“அளந்து கடைஅறியா அரும் கலம் சுமந்து
வளம் தலை மயங்கிய வஞ்சி முற்றத்து
இறைமகன் செவ்வி யாங்கணும் பெறாது
திறை சுமந்து நிற்கும் தெவ்வர் போல;
யானை வெண்கோடும், அகிலின் குப்பையும்
மான்மயிர்க் கவரியும், மதுவின் குடங்களும்
சந்தனக் குறையும், சிந்தூரக் கட்டியும்
அஞ்சனத் திரளும் அணி அரிதாரமும்
ஏல வல்லியும், இரும் கறி வல்லியும்
கூவை நூறும், கொழும் கொடிக் கவலையும்
தெங்கின் பழனும், தேமாங் கனியும்,
பைம் கொடிப் படலையும், பலவின் பழங்களும்
காயமும், கரும்பும், பூமலி கொடியும்
கொழும் தாள் கமுகின் செழும் குலைத் தாறும்
பெரும் குலை வாழையின் இரும் கனித்தாறும்
ஆளியின் அணங்கும், அரியின் குருளையும்
வாள்வரிப் பறழும், மதகரிக் களபமும்
குரங்கின் குட்டியும், குடாஅடி உளியமும்
வரைஆடு வருடையும், மடமான் மறியும்

*காசறைக் கருவும், ஆசு அறு நகுலமும்*

*பீலி மஞ்ஞையும், நாவியின் பிள்ளையும்*

*கானக் கோழியும், தேன்மொழிக் கிள்ளையும்*

*மலைமிசை மாக்கள் தலைமிசைக் கொண்டு*"[19]

என்ற அடிகள் சுட்டும். மலைவாழ் குன்றக்குறவர்கள் சேரன் செங்குட்டுவனுக்கு அன்போடு பரிசளித்தப் பொருட்களைப் பற்றி இப்பகுதி பட்டியலிடுகிறது.

யானையின் வெண்மையான கொம்பு, அகில் கட்டையின் தொகுதிகள், மான் மயிராகிய வெண்சாமரை, தேன் குடங்கள், சந்தனக் கட்டைகள், சிந்தூரக்கட்டிகள், நீலக்கல்லின் திரள், அழகுடைய கத்தூரி, ஏலக்காய்க் கொடிகள், கரிய மிளகுக் கொடிகள், கூவைக் கிழங்கின் கொடிகள், தென்னை நெற்றுக்கள், இனிய மாம்பழங்கள், பசுமையான கொடி, மாலைகள், பலாப்பழங்கள், வெள்ளுள்ளி, கரும்பு, பூக்கள் மலிந்த கொடி, கொழுவிய அடியினையுடைய பாக்குக் குலைகள், வாழைப் பழங்களின் குலைகள், ஆளி, சிங்கம், புலி, யானை, குரங்கு, கரடி, இவற்றின் குட்டிகளும், வருடை மான், மான்குட்டி, கத்தூரிக்குட்டி, குற்றமற்ற கீரிக்குட்டி, ஆண் மயில்கள், புனுகுப் பூனையின் குட்டி, காட்டுக்கோழி, இனிய மொழி பேசும் கிளி ஆகிய அனைத்தையும் குறவர்கள் செங்குட்டுவனுக்குக் கொடுத்ததாகச் சிலப்பதிகாரம் கூறுகிறது. மலைவாழ் பழங்குடி மக்கள் பிறருக்கு உதவும் மனப்பான்மை கொண்டவர் என்பதை இக்கருத்து விளக்கும்.

**மலையாளி**

*மலையை ஆளுகின்றவன் மலையாளி. இம்மலையாளி இன மக்கள் சேலம், விழுப்புரம், திருவண்ணாமலை, திருச்சி போன்ற மாவட்டங்களில் (சேர்வராயன் மலை, கல்வராயன்மலை, கொல்லிமலை, சவ்வாது மலை, பச்சை மலை) வாழ்கின்றனர். இவர்கள் மலை வேளாளர், கொங்கு வேளாளர், காஞ்சி மண்டலத்தார், மலைக்காரன், மலைக்கவுண்டர் என்று அழைக்கப்படுகின்றனர். இவர்களின் பூர்வீகம் காஞ்சிபுரம் என்பதற்கு வாய்மொழி மரபுச் செய்தி உண்டு. இவர்கள் 16ஆம் நூற்றாண்டில் கல்வராயன் மலைக்கு வந்திருக்கலாம் என்ற கருத்தும் நிலவுகிறது.*

*கொல்லிமலையில் இருக்கும் அறம் வளர்த்த நாயகி உடனுறை அறப்பளீசுவரர் திருக்கோயில் கி.பி.12ஆம் நூற்றாண்டில் இராசராசசோழனால் கட்டப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.*

*கடையேழு வள்ளல்களில் ஒருவனான வல்வில் ஓரி கொல்லிமலையை ஆட்சி செய்ததையும் இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன. வல்வில் ஓரிக்கும் இராசராசசோழனுக்கும் உறவு இருந்ததை திருக்கோயில் வரலாறும், கல்கியின் பொன்னியின் செல்வன்[21] என்ற வரலாற்றுப் புதினமும் குறிப்பிடுகிறது. மலையாளிகள் வந்தேறிகள் அல்ல; பூர்வீகக் குடிகள் என்பதை அறிய முடிகிறது. ஆனால் மலையாளிகள் தங்கள் வரலாறு பற்றி விளக்கும்*

போது தாங்கள் காஞ்சியிலிருந்து வந்தவர்கள் என்பதை உறுதிப்படுத்துகின்றனர். பத்து தலைமுறைக்கு முன்னர் விவசாயம் செய்வதற்காக வந்தவர்கள். முகமதியர்களின் ஆட்சிக்குப் பயந்து இவர்கள் இங்கு குடியேறியவர்கள் என்பது பெறப்படுகிறது.

"According to legend the malayalis originally belonged to the vellala caste of cultivators and emigrated from sacred city of Kanchi to the hill about ten generation ago, when Muslim rule was dominant in southern india, when the left Kanchi. The took with them, according to their legend three brothers of whom the eldest came to the Shervaroys hills, the second to the Pachamalai and youngest to Kollimalai"(22) says Madurai Kamaraj University Asst.Prof. C.Kannan.

கொங்குநாட்டு வேளாளர்களில் பெரிய அண்ணன் என்பவன் கைக்கோளப் பெண்ணை மணம் செய்துவிட்டு, சேர்வராயன் மலைக்குச் சென்றான். நடு அண்ணன் பள்ளப் பெண்ணை மணந்து பச்சைமலைக்குச் சென்றான்; சின்ன அண்ணன் தேவேந்திரகுலப் பள்ளப் பெண்ணை மணந்து கொல்லிமலைக்குச் சென்றான். பின்னர், இவர்கள் பெரிய மலையாளி, பச்சை மலையாளி, கொல்லி மலையாளி ஆயினர் என்கின்றனர் இப்பகுதி மக்கள். எழுத்துப்பூர்வமான ஆவணங்கள் ஏதும் இல்லாத போது, இவர்களின் வாய்மொழி இலக்கியம் இவர்களைப் பற்றி அறிந்து கொள்ள உதவுகிறது.

மலையாளிகள் இருக்கின்ற இடத்தைப் பொறுத்து அவர்களின் மொழி அமைகின்றது. இவர்களில் சிலர் கன்னடமும், தமிழும் பேசுகின்றனர். “ஆரியர் வருவதற்கு முன்னும் பின்னும் இந்தியா முழுவதும் பேசப்பட்டது தமிழ். இமயம் முதல் குமரி வரையில் தமிழ் மொழியே பரவி இருந்தது என்பதனை, ‘சதுர்மறை ஆரியம் வருமுன் சக முழுதும் நினதாயின் முதமொழி நீ அநாதியென மொழிகுவதும் வியப்பாமே’ என்று மனோன்மணீயம் கூறுகிறது. ஆனால், மக்கள் இடப்பெயர்ச்சி, தொடர்புக் குறைவு போன்ற காரணங்களால் காலப்போக்கில் மொழிகள் பலவிதமாகப் பரவிவிட்டன”[23] என்பர் பூலோ.இருதயநாத். தற்போது ஆய்வு எல்லைப் பகுதிகளில் வாழும் பழங்குடி மக்கள் ஆங்கிலம் கலந்து தமிழ் பேசுபவர்களாக உள்ளதும் பெறப்படுகிறது.

கொல்லிமலை, அதனைச் சுற்றியுள்ள மலைகளுக்கெல்லாம் தலைமலையாக (Talaghat) விளங்குகிறது. மேற்கே பச்சைமலையும், கிழக்கே போதமலை, ஜெர்குமலை (Jerugumalais) மற்றும் பத்து மலைகளைக் கொண்டதாக அமைகிறது. கொல்லிமலையின் ஊராட்சி ஒன்றியம் செம்மேட்டில் உள்ளது. செம்மேடு ஒரு சுற்றுலாத் தளமாக விளங்குகிறது. அங்கு வல்வில் ஓரி சிலை, படகுக்குழாம் (Boathouse) போன்றவை உள்ளன. அவ்ஊராட்சி ஒன்றியத்தில் ஏழு ஊராட்சிகள் ராசிபுரம் வட்டத்திலும், ஏழு நாமக்கல் வட்டத்திலும் இருக்கின்றன. 14 ஊராட்சிகள் 14 நாடுகளாக அழைக்கப்பெறுகின்றன. அவை: வாழவந்தி, அரியூர்,

தென்னாறு, சேலூர், தேவானூர், குண்டூர், ஆலத்தூர், எடப்புளி, திருப்புளி, பாய்ல் (Bail) பேரக்கரை, சிட்டூர், வளப்பூர், அடுக்கம்புதூர், கோம்பை முதலியனவாகும்.[24]

கொல்லிமலையில் தற்போது 30,000 மக்களுக்கு மேல் வாழ்கிறார்கள். நிலப்பரப்பு சுமார் 28,900 ஹெக்டேர். இதில் பாதிக்கு மேல் காடுகள். கொல்லிமலையைச் சுற்றுலா மையமாக்குவது அரசின் திட்டம் என்கிறார்கள். மலைவாழ் மக்களது நிலங்களை வெளியார் வாங்குவதில் ஒரு வேகம் வந்துள்ளதாகவும் கூறுகின்றனர். மலைவாழ் மக்கள் படிப்படியாக நிலமற்றவர்களாக ஆகிவிடுவார்கள் என்ற அச்சம் இப்பகுதி மக்களிடம் காணப்படுகிறது. கொல்லிமலை ஊராட்சி ஒன்றியம் மலைவாழ் மக்களின் நிலங்களை வெளியார் வாங்குவதைத் தடை செய்யக் கேட்டு ஒரு தீர்மானத்தை நிறைவேற்றியுள்ளது (20.5.1986). நிலங்கள் விற்கப்படுவதைத் தடுக்கச் சட்டம் தேவை என நாமக்கல் கோட்டாச்சியர் குறிப்பிட்டுள்ளதாக (16.10.1987) மாவட்ட வளர்ச்சிக்குழுவின் குறிப்புத் தெரிவிக்கின்றது. இப்பழங்குடி மக்களைக் காப்பதற்குத் தேவையான சட்டம் இதுவரை வந்ததில்லை என்கின்றனர்.

**சேர்வராயன்மலை**

சேலம் மாவட்டத்தில் புகழ்வாய்ந்த மலை சேர்வராயன்மலை. அதிலும் பழங்குடிகளின் முதன்மை இடமாக விளங்குவது

ஏற்காடாகும். ஏற்காடு ஏழைகளின் ஊட்டி என்று அழைக்கப்பெறுகிறது. ஏற்காடு சுற்றுலாத் தளமாக உள்ளது. மான்ஃபோர்டு பள்ளிக்கூடம் இங்குதான் உள்ளது. பழங்குடிகளின் கிராமங்களைச் சென்றடைவது மிகுந்த சிரமத்தை உண்டாக்குகிறது. ஏனெனில் அவை அனைத்தும் அடர்ந்த காட்டுப்பகுதிக்குள், வாகனங்கள் செல்ல முடியாத நிலையிலும் உள்ளன. ஏறத்தாழ 67 வருவாய் கிராமங்கள் ஏற்காட்டைச் சுற்றி உள்ளன. அதில் செங்காடு, ஆத்தியூர், கிளியூர், மாவுத்தூர், புதூர், வாழவந்தி, மஞ்சுக்குட்டை, ஓலக்காடு, மந்திரிக்காடு, பிளியூர் போன்றவை குறிப்பிடத்தக்கவைகளாகும்.[26]

**கல்வராயன்மலை**

சேலம் மாவட்டத்தில் கல்வராயன்மலையில் மலையாளிகள் வாழுகின்றனர். பெரிய கல்வராயன்மலை, சின்ன கல்வராயன்மலை என உள்ளன. சின்ன கல்வராயன்மலை விழுப்புரம் மாவட்டத்தில் உள்ளது. ஆறு நாடுகளைக் கொண்ட பெரிய கல்வராயன்மலை சேலம் மாவட்டத்தில் உள்ளது. ஆறு நாடுகள் பின்வருமாறு: மலையாளப்பட்டி, நெய்யாமலை, சின்னகல்வராயன் வடக்கு, பெரிய கல்வராயன் தெற்கு, பெரிய கல்வராயன் கீழநாடு, பெரிய கல்வராயன் மேல் நாடு ஆகியனவாகும்.[27]

**பச்சைமலை**

மலையாளிகள் வாழும் மற்றொரு முக்கியமான மலை

பச்சைமலையாகும் (Green Hills). இது மூன்று நாடுகளால் பிரிக்கப்பட்டுள்ளது. அதில் இரண்டு திருச்சி மாவட்டத்திலும், ஒன்று கங்கவள்ளி வட்டம், சேலம் மாவட்டத்திலும் உள்ளன. கிழக்கிலிருந்து மேற்காக 19 கி.மீ. நீளமும், தெற்கிலிருந்து வடக்காக 13 கி.மீ நீளமும் கொண்ட மலையாகும். பச்சைமலையில் வேப்பாடி, மண்மலை, கூடமலை, வேலக்கோம்பை, மாவுறு, மேல்தோம்பை, கீழ்தோம்பை ஆகிய நாடுகள் உள்ளன.

**போதமலை**

சேலம் மாவட்டத்தில் சேலத்தின் தெற்கும், இராசிபுரத்தின் வடக்கும், கிழக்கு மேற்காக அமைந்துள்ள நீண்ட மலைத்தொடர் போதமலை. மேலூர், கீழூர், நடுவளவு, குறஞ்சியூர், கெடமலை, சம்யூத்து ஆகியவை இம்மலையில் உள்ள ஊர்களாகும். நீர்வளம் பொருந்தியப் பள்ளத்தாக்குகளில் உழவுத்தொழில் செய்தும், ஆடு, மாடுகள் மேய்த்தும் இம்மலைவாழ்மக்கள் வாழ்கின்றனர்.

இம்மலையாளிகள் தாங்கள் கொல்லிமலையிலிருந்து வந்ததாகக் கூறுகின்றனர். அதனால் அங்குள்ள பட்டக்காரர்களையே தங்கட்கும் பட்டக்காரர்களாகக் கொண்டுள்ளனர். இப்பட்டக்காரர்களின் சமூக நியாயக் கூட்டத்தை ‘மகாநாடு’ என்று குறிப்பிடுவர். கொல்லிமலை - போதமலை மக்கள் நூற்றுக்கும் மேற்பட்ட குலப்பிரிவுகளைக் கொண்டுள்ளனர். கொல்லிமலை வளப்பூர் நாட்டுப் பட்டக்காரரே தலைமையானவர்.

**சவ்வாதுமலை**

சவ்வாது மலையில் வாழும் மலையாளிகள் காராளக்கவுண்டர் என்றும், மேற்குப் பகுதியில் வாழ்பவர்கள் வேளாளக்கவுண்டர் என்றும் அழைக்கப்படுகின்றனர். ஊர்கள் மலைப்பள்ளத்தாக்கின் சிறு சமவெளிகளில் அமைந்துள்ளன. ஒவ்வொரு ஊரும் சுமார் பத்து முதல் இருபத்தைந்து வீடுகள் கொண்டதாக உள்ளன.

**கட்டடக்கலை**

ஒரு சமுதாயத்தின் உள்ளுணர்வுகளுக்கும் பண்பாட்டு அடைவுகளுக்கும் அதன் கட்டடங்கள் வெளிப்பாடுகளாக விளங்குகின்றன. பாதுகாப்புக் கருதியே கட்டப்பட்டாலும் அந்தரங்கம், அழகுணர்வு, வாழ்க்கைத் தரம், சமுதாயத் தேவை போன்றவை கட்டடங்களின் அமைப்பையும் அமைப்பு முறைகளையும் நிர்ணயிக்கும் காரணிகளாக உள்ளன.

இன்றைய பழங்குடிச் சமுதாயங்கள் அன்றைய பெருங்கற்கால நாகரிகங்களின் தொடர் எச்சங்கள். பழங்குடிகளின் வசிப்பிடங்கள் அனைத்தும் எளிதில் கிடைக்கும் புல், மரம், பனை ஓலை போன்ற பொருள்களைக் கொண்டே அமைக்கப்பட்டவை. கட்டுமான முறையில் இவை எளிய உட்கூடு அமைப்பு, அதன்மீது போர்த்தப்படும் மறைப்பு என்ற இரு தளங்களைக் கொண்டவை. ஓர் அறை குடிசைகளாக விளங்கும் இவற்றில் தடுப்பு அறைகள் ஏதுமில்லை. சில இடங்களில் மேடு கட்டி அதன் மீது வசிப்பிடங்கள் அமைக்கப்படுவதுண்டு. இதற்கு நேர்மாறாகப் பள்ளத்தின் மீது ஓலைகளாலும் தழைகளாலும் தட்டி கட்டி வசிப்பிடமாக மாற்றிக்

கொள்வதும் உண்டு.

சவ்வாதுமலையில் உள்ள மலையாளிகள் மரம், மூங்கில் மஞ்சம்புல் ஆகியவற்றைக் கொண்டு மண்சுவர் எழுப்பி, வீடுகள் கட்டிக் கொள்கின்றனர். ஒவ்வொரு வீட்டிலும் இரண்டு அல்லது மூன்று அறைகள் உள்ளன. ஓர் அறை உள்ள வீடுகளும் காணப்படுகின்றன. வீட்டைச் சுற்றிலும் அல்லது சில வீடுகட்குச் சேர்த்தாற்போல் வேலி அமைத்துள்ளனர். வீடுகளில் பரண் அமைத்து விளைபொருட்களை அதன்மீது வைத்துக் கொள்கின்றனர்.

சேர்வராயன்மலை மலையாளிகளின் குடிசைகள் மூங்கில் பத்தைகளால் முடைந்த தட்டிகளைக் கொண்டு கட்டப்பட்டவை. காட்டுப்புற்களால் கூரை வேயப்பட்டவை. செங்கல், ஓடு ஆகியவற்றைப் பயன்படுத்துவது தேவதைகளுக்குக் கோபத்தை ஏற்படுத்துமென்பது அவர்களது நம்பிக்கை. குடிசைகள் வட்ட சதுர, செவ்வக வடிவங்களில் அமைக்கப்பட்டன.(28)

கொல்லிமலையாளிக் குடிசையின் உட்பகுதியில் பரண் அமைத்திருப்பது ஒரு குறிப்பிடத்தக்க அம்சமாகும். கூரையைத் தாங்க அமைக்கப்படும் அடைக்கட்டையின் மீது பரண் அமைக்கப்படுகின்றது. ஏணி வைத்துப் பரணுக்குச் செல்ல வேண்டும். கூரையின் கீழ் நோக்கிய சரிவு முனை ஏறத்தாழ தரையைத் தொடும். அப்போதைக்கப்போது பிரித்து அமைக்கும் கூடாரங்களை அமைக்கும் முறையின் மறுவடிவ வெளிப்பாடு இது. வீட்டின்

நுழைவாயிலை ஒட்டிச் சிறு திட்டு அமைக்கப்படுகிறது. இது திண்ணையாகவும், கோழிகளை அடைக்கும் கூண்டாகவும் பயன்படுகிறது.[29]

மலையாளிகளுக்குள் பல பிரிவுகள் உள்ளன. காராளன், ராயாண்டவீடு, துரைவீடு, சோழன்வீடு, சமையல்காரன்வீடு, கணியன், நெடுந்தரி, குள்ளநாட்டான், கருமலையான்வீடு, மூப்பரு, கவுண்டர், கொவுரிநாட்டான், மாலைக்காரன், கங்காணி போன்ற பிரிவுகள் உள்ளன.

## தொகுப்புரை

பழங்குடி மக்கள் என்பதற்குப் பழமையான குடிகள் என்று பொருள். குடியானவன், குடியிருப்போர், குடும்பம், கோத்திரம், குலம், வீடு, ஊர், வாழ்விடம் என்று லெக்சிகன் குறிப்பிடுவதிலிருந்து, பழங்குடிகளும் இனக்குழுவைச் சேர்ந்தவர்கள் என்பது அறியப் பெறுகிறது. இனவியல் என்பது ஒரு குறிப்பிட்ட இனத்தை மட்டும் ஆய்வு செய்வதாகும். இனவரைவியல் என்பது ஒன்றுக்கு மேற்பட்ட இனக்குழுக்களை ஆய்வு செய்வதாகும்.

தொல்காப்பியம், சங்க இலக்கியங்கள், சிலப்பதிகாரம் ஆகியவைகளில் பழங்குடி மக்களின் வாழ்க்கை முறை பற்றிய செய்திகள் வருவதன் காரணமாகத் தமிழர்களின் முன்னோர் வாழ்வின் எச்சமாகக் காணப்படுகின்றனர் என்பதும், கடையேழு வள்ளல்களில் ஒருவனான வல்வில் ஓரி கொல்லிமலையை ஆட்சி

செய்ததையும் இலக்கியங்கள் பதிவு செய்துள்ளமையும் பெறப்படுகிறது.

உலகெங்கிலும் பழங்குடிகள் வாழ்ந்து வந்த போதிலும், அவர்களின் பழக்கவழக்கங்கள், வாழ்க்கை முறைகள் வெவ்வேறாகக் காணப்படுகின்றன.

வரையறுக்கப்பட்ட பழங்குடிகளுக்கும் (ST), வரையறுக்கப்பட்ட இன வகுப்புகளுக்கும் (SC) வேற்றுமைகள் உள்ளன. இவ்விரு வரையறுக்கப்பட்ட இன வகைகள் பொருளாதாரத்திலும், பண்பாட்டிலும் விளிம்புநிலை மக்களாக இருந்த போதிலும், சமூகத்தில் தாழ்நிலையை அடையவில்லை என்பதும், சுய சார்புடையவர்களாகத் தனித்துக் காணப்படுபவர்கள் என்பதும் ஆய்வில் பெறப்படுகிறது.

அரயன், அரநாடன், இருளன், ஊராளி, எரவல்லன், எருக்கலா, கசபர், கணியன், கணியான், கம்மாரா, காட்டு நாயக்கர், காடர், கணிக்காரர், குடியா, குறும்பர் (அலு குறும்பர், பெட்ட குறும்பர், முள்ளு குறும்பர்), குறுமான், குறிச்சான், குடிமலைக்குடி, கொண்ட காப்பு, கொண்டா ரெட்டி, கொச்சு வேலன், கொரசா, கோத்தர், சோளிகர் உராளி, சோள நாயக்கர், தோடர், பதிமலசார், பல்லியான், பல்லீயன், பளியர், பனியர், புலையர், மகாமலசார், மலஅரையன், மலயகாண்டி, மலகுறவன், மலசார், மலபண்டாரம், மலையாளி, மலவேடன், மன்னான், முதுவர், முடுவன்,

மேலக்குடியான் ஆகியோர் அரசால் அடையாளம் காணப்பட்ட பழங்குடி மக்களாவர்.

பழங்குடி மக்கள் நாகரிகமற்றவர்கள், அச்சப்பட வைப்பவர்கள் என்பதெல்லாம் இவர்களை அழிப்பதற்காக; இயற்கை வளங்களால் நிறைந்த மலை, காடுகளைக் கைப்பற்றுவதற்காக மற்றவர்களால் ஏற்படுத்தப்பட்ட பரப்புரையாகும். வனங்களைப் பாதுகாப்பதில் பழங்குடிகளின் பங்கு முக்கியமானது என்பது உணரப்பெறுகிறது.

பழங்குடி மக்கள் தமது மரபுவழி தொழிலினை விடுத்து, கூலித் தொழிலாளர்களாக மாறியதற்கு பெரும் நிலவுடையாளர்களின் ஆக்கிரமிப்பும் ஒரு காரணமாகும். அவர்களின் வாழ்க்கைத் தரத்தை மேம்படுத்தக் கூடிய வகையில் அவர்களுக்குக் கல்வி போதிக்கப்படும் போது தான் அவர்கள் வாழ்வில் உயர்வு ஏற்படும் என்பதும் பெறப்படுகிறது.

நவீன பொருள் உற்பத்திமுறையை அவர்களுக்குக் கற்பித்து, மற்ற மக்களோடு அவர்களை ஒன்றுபடுத்த வேண்டும். அடுத்த நூற்றாண்டிற்கு அவர்களை அழைத்துச் செல்வதும், அரவணைத்துச் செல்வதும் தான் அவர்களின் சிக்கல்களுக்குத் தீர்வாகும் என்பது கவனத்திற் கொள்ளப்படுகிறது.

மலையை ஆளுகின்ற மலையாளியின மக்கள் சேலம், விழுப்புரம், திருவண்ணாமலை, திருச்சி போன்ற மாவட்டங்களில் (சேர்வராயன் மலை, கல்வராயன்மலை, கொல்லிமலை, சவ்வாது

மலை, நீலகிரி மலை, பச்சை மலை) வாழ்கின்றனர். இவர்கள் மலை வேளாளர், கொங்கு வேளாளர், காஞ்சி மண்டலத்தார், மலைக்காரன், மலைக்கவுண்டர் என்று அழைக்கப்படுகின்றனர்.

கொல்லிமலையில் இருக்கும் அறப்பளீசுவரர் திருக்கோயில் இராசராசசோழனால் 16ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்டது.

மலையாளிகள் இருக்கின்ற இடத்தைப் பொறுத்து இவர்களின் மொழி அமைகின்றது. இவர்களில் சிலர் கன்னடமும், தமிழும் பேசுகின்றனர். பழங்குடி மக்கள் ஆங்கிலம் கலந்து தமிழ் பேசுபவர்களாக உள்ளதும் அறியப்பெறுகிறது.

கொல்லிமலையின் ஊராட்சி ஒன்றியம் செம்மேட்டில் உள்ளது. இது ஒரு சுற்றுலாத் தளமாக விளங்குகிறது. வல்வில் ஓரி சிலை, படகுக்குழாம் (Boathouse) போன்றவை உள்ளன.

கொல்லிமலையைச் சுற்றுலா மையமாக்குவது அரசின் திட்டமாக உள்ளது. மலைவாழ் மக்கள் படிப்படியாக நிலமற்றவர்களாக ஆகிவிடுவார்கள் என்ற அச்சம் இப்பகுதி மக்களிடம் காணப்படுகிறது.

சேர்வராயன்மலையில் உள்ள ஏற்காடு ஏழைகளின் ஊட்டி என்று அழைக்கப்பெறுகிறது. ஏற்காடு சுற்றுலாத் தளமாக உள்ளது. மான்ஃபோர்டு பள்ளிக்கூடம் இங்குதான் உள்ளது.

ஏற்காட்டைச் சுற்றி 67 கிராமங்கள் உள்ளன. அதில் செங்காடு,

ஆத்தியூர், கிளியூர், மாவுத்தூர், புதூர், வாழவந்தி, மஞ்சுக்குட்டை, ஓலக்காடு, மந்திரிக்காடு, பிளியூர் போன்றவை குறிப்பிடத்தக்கவைகளாகும்.

பெரிய கல்வராயன்மலை, சின்ன கல்வராயன்மலை என இரண்டு உள்ளன. சின்ன கல்வராயன்மலை விழுப்புரம் மாவட்டத்தில் உள்ளது. ஆறு நாடுகளைக் கொண்ட பெரிய கல்வராயன்மலை சேலம் மாவட்டத்தில் உள்ளது.

பச்சைமலையில் வேப்பாடி, மண்மலை, கூடமலை, வேலக்கோம்பை, மாவுறு, மேல்தோம்பை, கீழ்தோம்பை ஆகிய நாடுகள் உள்ளன.

போதமலையில் வாழும் மலையாளிகள், நீர்வளம் பொருந்தியப் பள்ளத்தாக்குகளில் உழவுத்தொழில் செய்தும், ஆடு, மாடுகள் மேய்த்தும் வாழ்கின்றனர்.

சவ்வாது மலையில் வாழும் மலையாளிகள் காராளக்கவுண்டர் என்றும், மேற்குப் பகுதியில் வாழ்பவர்கள் வேளாளக்கவுண்டர் என்றும் அழைக்கப்படுகின்றனர்.

சவ்வாதுமலையில் உள்ள மலையாளிகள் மரம், மூங்கில் மஞ்சம்புல் ஆகியவற்றைக் கொண்டு மண்சுவர் எழுப்பி, வீடுகள் கட்டிக் கொள்கின்றனர். ஒவ்வொரு வீட்டிலும் இரண்டு அல்லது மூன்று அறைகள் உள்ளன. ஓர் அறை உள்ள வீடுகளும்

காணப்படுகின்றன.

சேர்வராயன்மலை மலையாளிகளின் குடிசைகள் மூங்கில் பத்தைகளால் முடைந்த தட்டிகளைக் கொண்டு கட்டப்பட்டவை ஆகும். குடிசைகள் வட்ட சதுர, செவ்வக வடிவங்களில் அமைக்கப்பட்டுள்ளன.

கொல்லிமலையாளிக் குடிசையின் உட்பகுதியில் பரண் அமைத்து வீடு கட்டுவது குறிப்பிடத்தக்கது. ஏணி வைத்துப் பரணுக்குச் செல்ல வேண்டும். வீட்டின் நுழைவாயிலை ஒட்டிச் சிறு திட்டு அமைக்கப்படுகிறது. இது திண்ணையாகவும், கோழிகளை அடைக்கும் கூண்டாகவும் பயன்படுகிறது.

மலையாளிகளில் பல உட்பிரிவுகள் உள்ளன.

**சான்றெண் விளக்கம்**

1. தமிழ்ப் பேரகராதி, (லெக்சிகன்), தொகுதி 2, ப.968.

2. முனைவர் ம.இராசேந்திரன், மெக்கன்சி சுவடிகளில் தமிழகப் பழங்குடி மக்கள், ப.35.

3. தமிழ்நாடன் (தொ.ஆ), தமிழ்நாட்டு மலைவாழ் பழங்குடிகள், பக்.98-99.

4. மேலது, ப.87.

5. க.ப.அறவாணன், தென்னை மரத்தீவுகளும், தீவோர மனுசர்களும், ப.20.

6. மேலது, ப.20.

7. முனைவர் ம.இராசேந்திரன், மெக்கன்சி சுவடிகளில் தமிழகப் பழங்குடி மக்கள், பக்.13-14.

8. க.ப.அறவாணன், அற்றைநாட் காதலும் வீரமும், பக்.90-91.

9. மேலது, பக்.255-256.

10. மேலது, பக்.113-114.

11. மேலது, பக்.113-114.

12. புறம்.143.

13. ஐங்:251.

14. நற்:165.

15. அகம்:309.

16. க.ப.அறவாணன், அற்றைநாட் காதலும் வீரமும், ப.236.

17. சிலம்பு:பதிகம்:1.

*18.* சிலம்பு: காட்சிக்காதை:*24-32.*

*19.* மேலது, காட்சிக்காதை:*33–55.*

*20.* மேலது, குன்றக்குரவை:*55-63.*

*21.* கல்கி, பொன்னியின் செல்வன் (வரலாற்றுப் புதினம்), ப.*699.*

*22.* சி.கண்ணன், இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம், ஆய்வுக்கோவை *(2011),* (Origin and settlements of the Malayali Tribes).

*23.* பிலோ. இருதயநாத், கொங்கு மலைவாசிகள், ப.*59.*

*24.* காண்க: பின்னிணைப்பு: பேட்டி எண்:*1.*

*25.* காண்க: பின்னிணைப்பு: பேட்டி எண்:*2.*

*26.* காண்க: பின்னிணைப்பு: பேட்டி எண்:*3.*

*27.* காண்க: பின்னிணைப்பு: பேட்டி எண்:*2.*

*28.* காண்க: பின்னிணைப்பு: பேட்டி எண்:*1.*

# இயல் – 2

## தொழில்கள்

பண்டைய சமுதாய வாழ்வியலின் பல கூறுகளுள் தொழிலும் ஒன்று. பண்டைத் தமிழ் மக்கள் விவசாயத்தை மட்டும் தொழிலாகக் கொள்ளாமல் பிற தொழில்களையும் மேற்கொண்டிருந்தனர். அக்கால வாழ்வியலில் அரசுகள் ஒன்றோடு ஒன்று மோதிப் பேரரசாக உருவாக்கப் பார்த்தன. போர் அரசரைச் சார்ந்தும் நாட்டின் பாதுகாப்பைக் கருதியும் எதிரிகளிடமிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்வதற்கும் தேவைப்பட்ட தொழிலாக இருந்தது. சமுதாயம் மேன்மை அடையப் பொருள் வேண்டும். பொருளை ஈட்டுவதற்குத் தொழில் வாயிலாக அமைந்தது. அது பொருளாதாரத்தோடு தொடர்புடையது. இப்பொருள் வளத்தை மேம்படுத்துவதற்காக இந்து மலையாளி இன மக்கள் பல தொழில்களைக் கைகொண்டிருக்கின்றனர். அவைகளை ஆராய்ந்து விளக்குவதே இவ்வியலின் நோக்கமாகும்.

### தொழில் விளக்கம்

தொழில் என்பதற்குச் "செயல், உத்தியோகம், காரியசித்தி, ஏவல், திறமை"(1) எனப் பல பொருள்களை அகராதி சுட்டுகிறது. இவற்றுள் செயல் என்பது உழைப்பைக் குறிக்கும். உழைப்பு என்பது பெயர்ச்சொல்லாக ஒரு செயல் அல்லது தொழிலைக் குறிக்கும். உழைத்தல் என்பது வினைச் சொல்லாகத் தொழில் செய்தலைக்

குறிக்கும். உழைப்பவர் இனம் என்பது பொதுவாகத் தொழிலாளர்களைக் குறிக்கும்"[2] என்பர் சி.சசிவல்லி. அவ்வகையில் தொழில் என்பது பொருள் ஈட்டுவதற்கான வேலையைக் குறிக்கும். மனித உழைப்பையும் எந்திரங்களையும் பயன்படுத்தி இலாப நோக்கில் ஒரு பொருளை உற்பத்தி செய்யும் செயல் அல்லது ஒரு குறிப்பிட்ட சேவையை வழங்கும் செயல் என்பதையும் குறிக்கும். ஒரு குறிப்பிட்ட வேலை செய்யும் செயல் மற்றும் நிகழ்த்தும் செயல் ஆகியவற்றைக் குறிப்பதாகத் தொழில் என்பதுள்ளது.

உழைப்பு, பணம், எந்திரம், கருவிகள், உற்பத்தி, நுணுக்கமாகச் செய்யும் திறமை ஆகியவைகள் தொழிலோடு தொடர்பு பெறுகின்றன. பொருளியல் பேரறிஞராகிய மார்சல் உழைப்பிற்கு இலக்கணம் வகுத்துள்ளார். அதனை, "உழைப்பு என்பது மூளையோ உடலையோ முழுவதுமாகவோ பகுதியாகவோ வருத்தி ஏதோ ஒன்றைப் படைப்பதற்காகக் கிடைக்கும் மகிழ்ச்சியை உழைப்பு உள்ளடக்காது. இவ்விலக்கணத்தின்படி உழைப்பு எல்லா வகையான தொழில் திறமைகளையும் உள்ளடக்கும். கல்வி அறிவில்லாத தொழிலாளர்களின் உற்பத்தி முயற்சிகளும், கைத்தொழில் கலைஞர்கள், கல்வியாளர்கள், ஆசிரியர்கள், வழக்கறிஞர்கள், வணிகர்கள், நுண்கலைஞர்கள், இலக்கிய அறிஞர்கள், மருத்துவர்கள், அறிவியல் வல்லுநர்கள், நிருவாகிகள் ஆகியோரின் பணி முயற்சிகளும் மார்சலின் உழைப்பு இலக்கணத்திற்குள் அடங்குகின்றன."[3] என்ற கருத்து அரண் செய்யும். இவ்வகையில்

உழைப்பை முதன்மையிட்ட தொழில் கருதுதற்குரியது.

**தொல்காப்பியத்தில் தொழில்**

தொல்காப்பியர் கருப்பொருள் பற்றிக் கூறும் பொழுது,

**“தெய்வம் உணாவே மா மரம் புள்பறை**

**செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ**

**அவ்வகைப் பிறவும் கருவென மொழிப”**(4)

என்று கூறுகிறார். இந்நூற்பாவில் செய்தி என்பது தொழிலைக் குறிக்கும். முல்லை நிலமக்கள் ஆடு, மாடு மேய்த்தலையும், புன்செய்ப் பயிர்கள் சார்ந்த விவசாயத்தையும் மேற் கொண்டிருந்தனர். குறிஞ்சி நிலமக்கள் தேனெடுத்தல், கிழங்குகளை அகழ்ந்தெடுத்தல், தினைப்புனங் காத்தல் ஆகிய தொழில்களைச் செய்தனர். மருதநில மக்கள் விவசாயத்தையும், நெய்தல் நில மக்கள் மீன்பிடித்தல், உப்பு விளைவித்து விற்றல் ஆகிய தொழில்களையும் மேற்கொண்டனர். பாலைநில மக்கள் வழிப்பறி செய்தலைத் தொழிலாகக் கொண்டனர். இதனால் நிலத்தின் இயல்பிற்கும் சூழலுக்கும் தக்கவாறு தொழில்கள் மாறுபடுவதை அறியமுடிகிறது.

தொல்காப்பியத்தில் மக்கள் பிரிவும் தொழில் சார்ந்தே அமைந்துள்ளது. அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்ற பிரிவுகள் தொழிலின் அடிப்படையில் உருவானவையாகும். “எத்தொழிலுக்கும் தூண்டுகோலாய் அமையும் அறிவும் ஒழுக்கமும் இன்றியமையாச் சிறப்பினவாகலானும் அந்தணர் முதலிலும், தொழில் செய்வோர் அச்சமின்றி வாழவும், தொழில் நன்கு

நடைபெற அரசர் காத்தலானும், வணிகர் அந்தணர்க்கும் அரசர்க்கும் கொண்டு கொடுத்தலோடு அரசுக்குப் பொருளீட்டித் தருதலானும் வேளாளர் விளைவிக்கும் பொருள்களைக் கொள்வதோடு அவர்க்கு வேண்டுவன கொண்டு கொடுத்தலானும் அரசர், வணிகர் ஆகியோரை இடையில் வைத்து அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என முறைப்படுத்தினரேயன்றி இவர்களில் ஏற்றத் தாழ்வு இல்லை[5] என்பர் சசிவல்லி.

**தொழில் வகைப்பாடு**

தொல்காப்பியத்தில் கருப்பொருளைக் கூறும்பொழுது திணைகளுக்கு ஏற்ற தொழில்கள் கூறப்பெற்றுள்ளன. இதனடிப்படையில் தொழில்களை, 1. வாழ்வியல் தொழில், 2.போர்த் தொழில், 3. வாணிகத் தொழில், 4. கலையியல் தொழில், என வகைப்படுத்தலாம்.

மக்களின் வாழ்வியலோடு நேரடியாகத் தொடர்பு பெற்றவை இவ்வகைத் தொழில்களாகும். இவற்றை,

1. கைத்தொழில்
2. நிலஞ்சார் தொழில்
3. கைவினைத் தொழில்
4. பிற தொழில்

எனப் பகுத்து விளக்க இடமுண்டு.

**1. கைத்தொழில்**

கைத்தொழில் என்பதற்குக் “கைத்திறமையாலே சிறு

கருவிகளைப் பயன்படுத்திச் செய்யப்படும் தொழில்"[6] என்று தற்காலத் தமிழ்ப் பெயரகராதி (லெக்சிகன்) சுட்டுகிறது. கைத்தொழில்களைக் கீழ்க்கண்டவாறு வகைப்படுத்தலாம். அவை,

1. பயிர்த்தொழில்
2. நெசவுத்தொழில்
3. தச்சுத்தொழில்
4. மட்கலத் தொழில்
5. கொல்லுத் தொழில்
6. உலோகத் தொழில்
7. அணிகலத் தொழில்
8. தோல் தொழில்

எனப்படும்.

**பயிர்த்தொழில்**

மனித வாழ்விற்கு அடிப்படையானது உணவு. அந்த உணவினை வழங்கும் தொழிலை உழவுத் தொழில் அல்லது பயிர்த் தொழில் என்று கூறுவர். உழவர்கள் வேளாண் மாந்தர்கள் என அழைக்கப் பெற்றனர். இதனைத் தொல்காப்பியம்,

> **"வேளாண் மாந்தர்க்கு உழுதூண் அல்லது**
> **இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி"**[7]

என்று குறிப்பிடுகிறது.

பயிர்த்தொழில் கருவிகளான நாஞ்சில் (கலப்பை), தளம்பு, ஆம்பி (ஏற்றம் இறைக்கும் கருவி) கமலை, கிழார், துளர் (களைக் கொத்து), குளிர், தட்டை, தழல், வில்லம்பு, கவண்கல், வேல், ஞெகிழி, அடார், குறுந்தடி, தொண்டகச்சிறுபறை, தண்ணுமை, குயம், வாள், கரும்பு அரவை இயந்திரம் ஆகியவை பண்டைய வேளாண் மக்கள் பயன்படுத்திய பயிர்க் கருவிகளாகும். கானவர், குன்றகச் சிறுகுடிக் கிளையுடன் கள் குடித்து மகிழ்ந்து தொண்டகச்

சிறுபறை முழக்கி, குரவையாடினர்.[8] தொண்டகச் சிறுபறை பழங்குடிகளோடு தொடர்புடையதைக் காட்டுகிறது.

**நாஞ்சில்**

பயிர்த்தொழிலின் முதல் செயலான நிலத்தை உழுது பயன்படுத்துவதற்குப் பயன்பட்ட கருவி நாஞ்சில். நாஞ்சில் என்பதற்குக் கலப்பை என்று பொருள். அதனை,

> **“பிடிவாய் அன்ன மடிவாய் நாஞ்சில்**
> **உடும்புமுக முழுக்கொழு மூழ்க ஊன்றி”[9]**
> **“........ கலப்பை சார்த்தி**
> **நெடுஞ்சுவர் பறைந்த புகைசூழ் கொட்டில்”[10]**

எனப் பெரும்பாணாற்றுப்படை விளக்குகிறது.

**தளம்பு**

தளம்பு - பரம்பு. தளம்பு என்பதற்குச் சேறுகுத்தி என்று பொருளுரைக்கிறது தமிழகராதி. நிலத்தை நன்றாக உழுத பின்னர் சமமாக இருத்தற் பொருட்டு இதனைப் பயன்படுத்தியுள்ளனர். இக்கருவி கொண்டு சேற்று வயலைச் சமப்படுத்தியுள்ளதை,

> **“மலங்குமிளிர் செறுவில் தளம்பு தடிந்திட்ட”[11]**

எனப் புறநானூறு சுட்டுகிறது. தற்பொழுதும் உழுத பின்னர் நிலத்தைச் சமப்படுத்த இக்கருவி பயன்படுத்தப்படுவதுண்டு. இதனைப் பரம்படித்தல் என்பர். இன்று பரம்பு பனை மரத்தில்

செய்யப்பட்டுள்ளது.

### துளர்

துளர் என்பதற்குத் தமிழகராதி கொத்துதல் என்று பொருளுரைக்கிறது. உரையாசிரியர் பெருமழைப்புலவர், 'களைக்கொட்டு' என்று பொருள் தருகிறார்.[12]

வயலில் வளரும் பயிர்களுக்கிடையில் இருக்கும் பிற பயிரினங்களைக் களைவதற்குப் பயன்படுத்திய கருவி துளர் ஆகும். இதனை, ஈரமின்றிக் காய்ந்துவிட்ட நிலங்களில் உள்ள களைகளைத் துளர்ந்தெடுக்கப் பயன்படுத்தியதை,

**"தொடுப் பெறிந் துழுத துளர்படு துடவை**
**........ ........ ......... சிறுதினைத்"**[13]
**"துளரெறி நுணடுகட் களைஞர்"**[14]

என்ற பாடலடிகளால் உணரமுடியும். துளர் என்ற பெயர் வழக்கிழந்து 'களைக்கொட்டு' எனற பெயர் வழங்கப்படுகிறது. இந்து மலையாளிகள் 'களைக்கொட்டு' என்றே அழைக்கிறார்கள்.

### நிலஞ்சார் தொழில்கள்

நிலஞ்சார் தொழில்களைக் கால்நடை பேணல், வேட்டையாடுதல் என்ற வகையில் பிரித்து விளக்க இடமுண்டு. கால்நடைகளைப் பேணி வளர்ப்பது முல்லை நிலமக்களின் தொழிலாகும். இடையன் கால்நடைகளை மேய்க்கச் செல்லும் பொழுது உறியுடன், தீக்கடைக்கோல் ஆகிய கருவிகளை இட்டு

வைத்த தோற்பையுடன் ஒருசேரச் சுருக்கிட்டுப் பனையோலைப் பாயோடு முதுகிற் கட்டி எடுத்துச் செல்வான். இதனை,

“பரணி கொண்ட பல்கரன் மெல்லுறி

ஞெலிகோற் கலப்பை யதனொடு சுருக்கிப்

பறிபுறத்திட்ட பானொடையிடைய”(15)

என நற்றிணை புலப்படுத்துகிறது.

### வேட்டையாடுதல்

தங்களது உணவிற்காகவும், பாதுகாப்பிற்காகவும் பல்வேறு கருவிகளைப் பயன்படுத்தி வந்தனர். வேட்டையாடுவதற்கும் பாதுகாப்பிற்கும் அம்பு, வேல், ஈட்டி போன்ற கருவிகளைப் பயன்படுத்தினர். நாடோடிகளாக அலைந்து திரிந்த மக்கள் கற்காலத்தில் கற்களையே தங்களது ஆயுதங்களாகக் கொண்டிருந்தனர். கற்காலத்தை அடுத்துவந்த புதிய கற்காலத்தில் அவர்கள் தங்களது கற்கருவிகளுக்கு வடிவங்கள் கொடுத்து அவற்றைப் பயன்படுத்தி வந்தனர்.

### வலைகள்

சங்ககாலத்தில் வேட்டைத் தொழில் சிறப்படைந்திருந்தது. வேட்டைக்குச் செல்வோர் தேவையான கருவிகளுடன் சென்றுள்ளனர். அவர்கள் காட்டில் எல்லாத் திசைகளிலும் அலைந்து வேட்டையாடுதற்குரிய விலங்குகள் உள்ள இடத்தை அறிதலும், சரியான இடமறிந்து வலை விரித்தலும், பதுங்கிய இடத்திலிருந்து

விலங்கை வெளிப்படச் செய்தலும், வலையில் சிக்கியவுடன் பாய்ந்து தாக்குதலும் செய்துள்ளனர். அதனை,

"வண்ண வரிவில் லேந்தி அம்புதெரிந்து"(16)

என்ற அடி கூறும். குறிப்பாக வலை வேட்டைத் தொழிலுக்கு நன்கு உதவியுள்ளது.

கானவர் அகன்ற நிலப்பிளவின் வாயிலில் வார்களால் பின்னப்பட்ட கண்ணியும், வலையும் அமைப்பர். பன்றிகளை வேட்டை நாய் கொண்டு துரத்தி அப்பிளவில் விழச் செய்வர். அவை வலையில் சிக்குறும். அதனைத் தம் சிறுகுடிக்குக் கொண்டு வருவர். அதனை,

"சிறுகட் பன்றிப் பெருஞ்சி வொருத்தல்
சேறா டிரும்புற நீறொடு சிவண
வெள்வசிப் படீஇயர் மொய்த்த வள்பிழிக்
கோணாய் கொண்ட கொள்ளைக்
கானவன் பெயர்க்குஞ் சிறுகுடி யானே"(17)

என்ற அடிகள் புலப்படுத்தும்.

வேட்டை நாய்களுடன் பசிய தூறுகளை அடித்து வேலியை அமைத்துப் பின் தொடர் வலைகளைக் கட்டிக் குறுமுயல்களை அவ்வலையகத்தே வளைத்துப் பிடிப்பர். இதனை,

"புதுவாய் ஞமலியொடு பைம்புத லெருக்கித்
தொகுவாய் வேலித் தொடர்வலை மாட்டி"(18)

என்ற அடிகள் சுட்டும். பன்றி, முயல் ஆகியவைகளை வேட்டையாடுவதற்கும், பறவைகளைப் பிடிப்பதற்கும் வலைகளைப் பயன்படுத்தியுள்ளனர்.

**வில்லம்பு**

வேட்டைத் தொழிலில் முக்கிய இடம் பெற்றது வில்லம்பு. வில்லம்பைக் கொண்டு விலங்குகளையும், பறவைகளையும் வேட்டையாடி வந்தனர். முள்ளம்பன்றியின் ஏற்றை வில்லை வளைத்துக் கணை எய்து கைக்கொண்ட செய்தியை,

> **“வன்கைக் கானவர் வெஞ்சிலை வணக்கி**
> **உளமிசைத் தவிர்த்த முளவு மான் ஏற்றையொடு”(19)**

என்ற அடிகள் உணர்த்தும்.

**ஆங்கிலேயரது காலத்தில் பழங்குடிகளின் நிலை**

**நிலவரி நிர்வாகம்:**

இந்து மலையாளிகளில் 90% மக்கள் விவசாயத்தையே நம்பியுள்ளனர். நில உரிமையாளர்கள் கூலிகளாக மாறியதற்கு அரசுகளும் காரணமாக விளங்கின. விவசாய நிலங்கள் அவர்களுக்கு முற்றிலும் கிடைக்காமல் போனதற்கு முந்தைய அரசுகளின் நிலையை சற்று நோக்குதல் பொருத்தமுடையதாக இருக்கும். மூன்றாம் மைசூர்ப் போரின் முடிவில் ஆங்கில கிழக்கிந்திய வணிகக் குழு அரசால் உருவாக்கப்பட்ட பழம் பெரும் மாவட்டம் சேலம். தளபதி அலெக்சாண்டர் ரீடு (1792-1799) இம்மாவட்டத்தின் முதல் ஆட்சியாளர். தமது ஆட்சிக்குட்பட்ட பகுதிகளில் நிலவரியைச்

சரி செய்வதே அவரது நோக்கம். 1793 முதல் 1797 முடிய மாவட்டத்தின் பெரும்பகுதி நிலம் அளவீடு செய்யப்பட்டது. 1797 டிசம்பர், 10ஆம் நாள் இரயத்வாரி நிலவரி முறையை அமுல்படுத்தினார். ஒரு கிராமத்தினின்று கிடைக்கும் வரித்தொகைக்கு அனைத்து விவசாயிகளுமே பொறுப்பேற்றனர். கிராமத் தலைவர்கள் விவசாயிகளுக்கு நிர்ணயிக்கப்பட்ட தொகையினைப் பெற்றுக் கம்பெனி அலுவலரிடம் சேர்த்தனர். வணிகக்குழு அரசு இம்முறையினை விரும்பவில்லை. அது நிரந்தர நிலவரித் திட்டத்தைக் கொண்டுவர விழைந்தது.

1802ஆம் ஆண்டு ஜமின்தாரி நிலவரித் திட்டம் (ரெகுலேஷன்-25) கொண்டுவரப்பட்டது. சேலத்தில் இது **மிட்டா** முறை என வழங்கப்பட்டது. மிட்டாதாரர் ஒவ்வொரு ஆண்டும் அரசுக்குச் செலுத்த வேண்டிய நிலையான தொகை நிர்ணயம் செய்யப்பட்டது. வரிப்பளுவைத் தாங்கவொண்ணாத மிட்டாதாரர் பலர் தமது மிட்டாக்களை அரசிடமே திரும்ப ஒப்படைத்தனர். 1820ஆம் ஆண்டில் மீண்டும் இரயத்வாரி முறையே அமுலுக்கு வந்தது. ஆனால், அனைத்து மிட்டாக்களும் ஒழிக்கப்படவில்லை. அதன் பின்னர், விவசாயிகளின் வரிப்பளுவைக் குறைக்க ‘கவுல்’ முறை வந்தது. முதலில் குறைவாகவும், அடுத்தடுத்த ஆண்டுகளில் அதிகமாகவும் வரி செலுத்தும் முறை இது. 1859இல் நிலங்கள் மீண்டும் அளக்கப்பட்டுப் பலவகைகளாகப் பிரிக்கப்பட்டு, தரத்திற்கேற்ப வரியினைப் பெறும் ‘தரங்கம்மி’ நிலவரி முறை

புகுத்தப்பட்டது. இதுவே 1871ஆம் ஆண்டு வரை நீடித்தது. 1904இல் நிலப்பட்டாக்கள் சரிபார்க்க மறுநில அளவை நடைபெற்றது.

**மலைப்புறங்களில் நில அளவை:**

1792ஆம் ஆண்டில் மலைப்பகுதிகளைச் சமவெளிகளோடு இணைக்கும் 'கோம்பை' கிராமங்களை அளக்க முயற்சி செய்யப்பட்டது. கடும் வறுமையில் வாடிய போதும் இக்கிராம மக்கள் அந்நியர் அங்கு வருவதை எதிர்த்தனர். எனவே இப்பகுதிகள் தோராயமாகக் கணக்கிடப்பட்டன. அந்தந்தக் கிராமத் தலைவர்களுடன் அரசு நேரடியாக வரி ஒப்பந்தம் செய்து கொண்டது.

கொல்லிமலை மலைவாசிகள் நில அளவை செய்பவர்களைக் கடுமையாக எதிர்த்தனர். நிலத்தை அளக்காமல் விட்டுவிட்டால் நிலவரி எவ்வளவெனினும் தர ஒப்புக் கொண்டனர். கல்வராயன் மலை கிராமங்களின் நிலை வேறு. நில அளவை அலுவலர்கள் அடர்ந்த காட்டுப் பகுதிகளில் பயணம் செய்து கிராமத் தலைவர்களைக் காண்பதே சிரமமாக இருந்தது. இதனால், மாவட்டத்தின் கிழக்கு எல்லையில் சுமார் 48 கிலோ மீட்டர் தொலைவு நிலப்பகுதி பரம்பரைப் பெருநிலக்கிழார் ஒருவரின் பிடியில் நெடுங்காலமாக இருந்தது.

**மிட்டாக்களும் மலைக்கிராமங்களும்**

எம்.டி.கோபர்ன் என்பார் நிர்வாகத்தில் (1802) மலைப் புறக்

கிராமங்கள் அதனையொட்டி அமைந்த சமவெளியில் உள்ள மிட்டாதாரரின் பொறுப்பில் விடப்பட்டன. அவ்வாறு அமைந்த மலையோர மிட்டாக்கள் வீரகனூர், பைல்நாடு, குந்தானி நாடு, சேலூர் நாடு, பச்சமலை, சேந்தமங்கலம், குண்டூர் நாடு என்பன. சில ஆண்டுகளே இந்நிலை. பின்னர் அந்தந்த மலைக்கிராமத் தலைவர்களே வரியைத் திரட்டும் உரிமை பெற்றனர். நிரந்தர நிலவரித் திட்டம் கொண்டு வரப்பட்ட போது அருநூற்றுமலை ஓர் மிட்டாவாகப் பிரிக்கப்பட்டது. ஆனால் மிட்டாதாரர் அதனைத் திரும்ப ஒப்படைத்துவிட்டனர். காலப்போக்கில் மலைக் கிராமங்களை அரசே தனது நேரடி நிர்வாகத்திற்குக் கொண்டு வந்தது.

**ஆத்தூர் மலைகளில் அமானி முறை:**

ஆத்தூர் வட்டத்தின் அஞ்ஞர் மலைகளும் பச்சை மலைகளும் 1830இல் அமானி கிராமங்களாக அறிவிக்கப்பட்டன. அமானி கிராமங்களில் அரசால் நியமனம் செய்யப்பட்ட 'மணியக்காரர்' இருப்பர். ஆட்சித் தலைவர் ஒருவர் (1829-38) இம்முறையை ஆணையிட்டு அப்பகுதி விவசாயிகள் சீரான நிலவரியாக ஒரு குழிக்கு 8 அணா வீதம் லுெத்தப் பணித்தார். மண்வெட்டி பயன்படுத்தப்படும் விவசாயத்திற்கே இந்தக் கட்டணம். அதுவே ஏர் உழவானால் குழிக்கு 2 முதல் 3 ரூபாய் பச்சைமலை கிராமங்களில் மண்வெட்டிக்குக் குழிக்கு 12 அணா, ஏர் உழவுக்கு ரூ.1-4-0 வரி. இந்த வரி விதிப்பிற்காக நில அளவை செய்யப்படவில்லை. தோராயமாகக் கணக்கிடப்பட்டது. அருநூற்றுமலையில் வரி

செலுத்துவதில் பட்டாதாரர்களிடையே ஏற்பட்ட தகராறினால் பலர் விவசாயத்தை நிறுத்திவிட்டு மலையிலிருந்து போய்விட்டனர். எனவே, இங்கும் அமானி முறை கொண்டுவரப்பட்டுக் குழியொன்றுக்கு ரூ.5/- வீதம் விதிக்கப்பட்டது (அதாவது ஏக்கருக்கு ரூ.1-4-11).

**கொல்லிமலை:**

நிரந்தர நிலவரித் திட்ட காலத்தில் கொல்லிமலையில் சேலூர் நாடு, குண்டூர் நாடு ஆகிய இரண்டு மிட்டாக்கள் உருவாக்கப்பட்டன. மலையாளிகள் காடுகளை அழித்து விவசாயம் செய்ய அனுமதிக்கப்பட்டனர். இவ்வாறு புதிதாக உருவாக்கப்பட்டவை **வெட்டுக்காடு** நிலங்கள். இங்குள்ள மேட்டு நிலங்கள் மீது வல்லம் ஒன்றுக்கு ஏழு ரூபாய் முதல் 16 வரை நிலவரி நிர்ணயிக்கப்பட்டது. (1 வல்லம் - ஏக்கர் 8-23-5). நீர்வளமிக்கப் பகுதிகளில் குழி ஒன்றுக்கு 12 அணா, 1842இல் கொல்லிமலை அமானி நிர்வாகத்திற்குக் கொண்டு வரப்பட்டது. உதவி ஆட்சியாளர் பிரெட் இப்பகுதி முழுவதும் பயணம் செய்து, வெட்டுக்காடு நிலத்திற்கு ஏக்கருக்கு ஒரு ரூபாயாக வரி நிர்ணயம் செய்தார்.

**சேர்வராயன் மலை**

சேர்வராயன் மலைகளில் கிராமத் தலைவர்களே முன்வந்து செலுத்திய வரித் தொகையினை அரசு ஏற்றுக் கொண்டது. ஆனால் மலை நிலம் வணிகக்குழு அரசின் சொத்தாகவே கருதப்பட்டது.

இந்நிலையில் சேர்வராயன் மலைகளில் புதிய தோட்டங்களை உருவாக்க ஐரோப்பியர் பலர் முன் வந்தனர். 19ஆம் நூற்றாண்டின் இறுதிக்குள் சுமார் 266 மலைத் தோட்டங்கள் இவர்களால் உருவாக்கப்பட்டன. ஐரோப்பியப் பட்டாதாரர் தமது வரிகளை அப்பகுதியில் உள்ள கிராமத் தலைவர் வழியாகச் செலுத்தினர். சில மலையாளிகளும் தோட்டங்களை உருவாக்கிக் கொடுத்தனர்.

மலையாளிகளுக்கு இடையூறு செய்யும் வகையில் குடியேறிய ஐரோப்பியருக்கு நிலங்களை வழங்கக் கூடாது என கட்டளை இட்டனர். மலையாளிகளின் கிராமங்களைச் சுற்றியுள்ள விளைநிலங்களும் மேய்ச்சல் நிலங்களும் அவர்களுக்காகவே ஒதுக்கப்பட்டு பாதுகாக்கப்பட்டன. 1845இல் காப்பித் தோட்டங்கள் உருவாக்க விரும்பிய மலையாளிகளுக்கும் அரசு நிலம் வழங்கிற்று.

**மலையாளி நிலங்களுக்குப் பாதுகாப்பு**

1860இல் சேர்வராயன் மலைகள் மேலும் பிரபலமாயின. அவ்வாண்டு. பிரிட்டிஷ் அரசு அதிகத் தொகை கோருவோருக்கு மலைப்பகுதி நிலங்களை ஏலம் விட்டுவிடச் சட்டமியற்றியது. இச்சட்டத்தினால் மலையாளிகள் பாதிக்கப்படாமல் இருக்க அவர்தம் கிராமங்களும் அதைச் சுற்றியுள்ள பசுமை நிலங்களும் பாதுகாக்கப்பட, சட்டத்தில் வகை செய்யப்பட்டது. வரி வசூலிக்கும் முறையும் மாற்றப்பட்டது. 1 ஏக்கருக்கு 1 ரூபாய் நிலவரி. 187இல் மலையாளிகளை ஏமாற்றி அவர்களது நிலங்களைக்

கைப்பற்றிய ஐரோப்பியர்களைத் தண்டித்து வெளியேற்றியது. பரம்பரையாக மலையாளிகள் காட்டுப் பகுதிகளில் விறகு வெட்டவும் மரம் அறுக்கவும் உரிமை உண்டு என அறிவித்தது.

மலை நிலங்கள் 6 வகையாகப் பிரிக்கப்பட்டன. சேர்வராயன் மலைக் கிராமங்கள் பெரும்பாலும் 3ஆம், 4ஆம் தரங்களிலும், கல்வராயன் மலைப்பகுதி 4ஆம் தரமாகவும், கொல்லிமலை 5ஆம் தரமாகவும், பச்சைமலை, போதமலை 6ஆம் தரமாகவும் பிரிக்கப்பட்டன. நிலவரியும் அதற்கேற்றாற் போல் நிர்ணயிக்கப்பட்டது.

மலைக் கிராமங்களுக்குப் பாதுகாப்புக் கொடுப்பதாகச் சொல்லிக் கொண்டு அவர்கள் வாழும் இடங்களை எல்லைகளால் நிர்ணயம் செய்துள்ளனர். இவற்றால் மலைப்புறங்களில் வாழும் பழங்குடியினரான மலையாளிகளின் பொருளாதார வாழ்வு பெரிதும் பாதிக்கப்பட்டுள்ளது.

**தமிழகப் பழங்குடி மக்களின் தொழில்கள்**

**பளியர்கள்**

பளியர்கள் தங்களைத் தொழில்களின் அடிப்படையில் மூன்றாகப் பிரித்துள்ளனர். அவை,

1. வேடுவப்பளியர்
2. மன்னக்கப்பளியர்
3. காணிப்பளியர்

என்பவர்களாவர்.

வேடுவப்பளியர் சோலைகளிலும், அடர்ந்த காட்டுப் பகுதிகளிலும் வாழ்பவர்கள். இவர்கள் வில்லும், அம்பும் வைத்து வேட்டையாடுவார்கள். வேட்டையாடுதல் இவர்கள் தொழில். வேட்டையாடக் கூடாது என்று அரசு உத்தரவு போட்டுள்ளது.

மன்னக்கப்பளியர் விவசாயிகள் காடுகளில் உள்ள நிலங்களில் கேப்பை, தினை, கம்பு, சோளம், கப்பைக் கிழங்கு, வள்ளிக்கிழங்கு போன்றவைகளைப் பயிர் செய்து வாழ்பவர்.

காணிப்பளியர்கள் தேனையும், கிழங்கையும் நம்பி வாழ்கின்றவர்கள். இவர்கள் இன்று தமிழ்நாட்டின் பெரும் பகுதிகளில் வாழ்கின்றனர்.[20]

பழங்குடி மக்கள் வில்லும், அம்பும் வைத்து வேட்டையாடுவார்கள். வேட்டையாடுதல் இவர்களின் முக்கிய தொழிலாகும்.

**கல்வராயன்மலை பழங்குடிகளின் தொழில்கள்**

கல்வராயன் மலைவாழ் மக்களின் விவசாய முறை மிகப் பழமையானது. அவர்கள் புனல்காட்டுப் பகுதியில் மாற்றுப் பயிரிடும் முறையைக் கையாளுகின்றனர். கேழ்வரகு, சோளம், கம்பு, தினை, நெல் என்பன முக்கியப் பயிர்களாகும். அவற்றின் விதைகளை கருமந்துறையில் ஒரு விவசாயப் பண்ணையில் வாங்கிக் கொள்கின்றனர். வீரிய விதைகள் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளன. மலைமக்கள் பணப்பயிர்களைப் பயிர் செய்ய ஆரம்பித்துள்ளனர்.

மலைவாழ் மக்களுக்காக ஒரு தச்சுத் தொழில் பயிற்சி மையம் 1984இல் ஆரம்பிக்கப்பட்டது. இங்கு மலைவாழ் பெண்களுக்கு தையல் பயிற்சி அளிக்கப்படுகிறது. கரியலூர் பள்ளியில் ஒரு நாடகக் குழு உள்ளது. இது மலைவாழ் மக்களுக்கு விழிப்புணர்வு ஏற்பட உதவுகிறது.[21]

**மலையாளிகளின் தொழில்**

மலையின் உயர்ந்த பகுதிகளில் உள்ள பழங்குடிகள் காட்டுப் பொருள் சேகரிப்பு, வேட்டையாடல் போன்ற தொழில்களைச் செய்தனர். வேட்டையில் கிடைக்கும் நரித்தோல் ஒன்றை ரூ.800/க்கு விற்பனை செய்கின்றனர். காடுகளில் உள்ள கடுக்காய், தேன், வெடிமருந்து செய்ய உதவும் பாசம் போன்ற பொருட்களைச் சேகரித்துக் கொடுத்து தமக்குரிய பொருட்களை வாங்கும் வழக்கம் இருந்தது. தற்போது மாறி வருகிறது.

காட்டுப் பொருட்களை வாங்க கூட்டுறவுச் சங்கங்கள் வந்தபின்பு பழங்குடிகளின் வாழ்க்கைத் தரம் மாறியிருக்கிறது. மலையாளிகள் கூலி வேலையை இரண்டாம் பட்சமாகக் கொள்ளுகின்றனர். காட்டு விலங்குகளைக் கணக்கெடுக்க அரசு பழங்குடி மக்களைப் பயன்படுத்தி வருகிறது. பறவைகளைப் பிடிப்பது, தேன் சேகரிப்பது போன்றவையும் பழங்குடிகளின் தொழிலாக இருந்துவருகிறது. மலையாளிகள் விவசாயத் தொழில் தொடர்புடையவராவர்.

மலையாளிகளின் முக்கிய தொழிலாக விவசாயம், தேனீ வளர்த்தல், மரம் வெட்டுதல் ஆகியன உள்ளன.[22] இவர்கள் சோளம், கம்பு, தினை, சாமை, கேழ்வரகு ஆகியவற்றைப் பயிரிடுகின்றனர். காய்ந்து போன சந்தன மரத்தை வெட்டி வனத்துறையினருக்குக் கொடுத்துக் கூலி பெறுகின்றனர். வனத்துறையினரால் நடத்தப்படும் சில உண்டு உறைவிடப் பள்ளிகள் சவ்வாது மலையில் உள்ளன.

**எள்**

மலையாளிகள் நெல், வரகு, சாமை, குச்சிக்கிழங்கு (மரவள்ளிக்கிழங்கு), எள் போன்றவை பயிர் செய்கின்றனர். எள் மூன்று மாத கால அளவில் பயிராகும். சித்திரை, புரட்டாசி, ஐப்பசி காலங்களில் எள் பயிரிடப்படுகிறது. சித்திரை மாதத்தில் விதைக்கும் எள் இனிமையாக இருக்கும். சித்திரை மாதத்தில் விதைக்கும் எள்ளினைச் சித்திரைக்காளி எள் என்கின்றனர். புரட்டாசி, ஐப்பசி மாதங்களில் பயிரிடப்படும் எள்ளினை முறையே புரட்டாசிகாளி எள், ஐப்பசிகாளி எள் எனக் கூறுகின்றனர்.[23]

கொல்லிமலை கிளாக்காட்டு மக்கள் உச்சி எள்ளினைப் பயிரிட்டு வந்துள்ளனர். இதனை விற்பனை செய்வதில்லை. இந்த எள்ளைக் காய வைத்து எண்ணெய் எடுத்து, சமையலுக்குப் பயன்படுத்துகின்றனர். மற்ற எண்ணெயில் சமைத்து சாப்பிடுவதால் சுவையுடன் உடல்நலமும் உண்டாகும் என்கின்றனர்.[24]

### கீரைகள்

மலையாளிகள் கீரைகளை உணவாகப் பயன்படுத்தியதன் காரணமாக, தாங்களே கீரைகளைப் பயிரிட்டு வளர்க்கின்றனர். விற்பனையும் செய்து பொருளீட்டுகின்றனர். சீங்கக்கீரை, புளியங்கீரை, தொவரக்கீரை, குச்சித்தலைக்கீரை, கட்டுக்கொடிக் கீரை, பண்ணக்கீரை, புளிச்சாக்கீரை, துளுக்க எண்ணெய் கீரை (துளுக்கானக்கீரை) போன்ற கீரைகளை அதிகமாகப் பயிரிடுகின்றனர்.

### வெற்றிலை

மலையாளிகளின் முக்கியப் பணப்பயிர் வெற்றிலையாகும். கொடிக்கால் அமைத்து வெற்றிலையைப் பயிரிடுகின்றனர். வெற்றிலையைப் பறித்து, பதப்படுத்தி விற்பனைக்கு எடுத்துச் செல்கின்றனர். இதனால் இவர்கள் ஓரளவு வருவாய் பெறுகின்றனர். கொல்லிமலையில் வெற்றிலை பயிரிடுவதில்லை என்கின்றனர்.[25]

### குச்சிக்கிழங்கு (மரவள்ளிக் கிழங்கு)

மலையாளிகள் மரவள்ளிக்கிழங்கைக் குச்சிக்கிழங்கு என்கின்றனர். இது பணப்பயிராக அவர்களுக்குப் பொருளீட்டிக் கொடுக்கிறது. மலைச்சரிவுகளிலும், குடியிருப்புகளைச் சுற்றிலும் குச்சிக்கிழங்கைப் பயிரிட்டுள்ளனர். நிலத்தைச் சமப்படுத்தி, செடியின் தண்டுப் பகுதிகளைச் சிறிது சிறிதாக வெட்டி, நட்டு

வைக்கின்றனர். குச்சிக்கிழங்கிற்குக் குறைந்தளவே தண்ணீர் தேவைப்படுகிறது. குச்சிக்கிழங்கிற்கு உரம் வைப்பதற்கு முன் மூன்று தடவை களை எடுக்கிறார்கள். ஓர் ஏக்கருக்கு 100 மூடை மகசூல் கிடைக்கிறது. இதற்கு ரூபாய் 18 ஆயிரத்திலிருந்து 20,000/- வரை செலவு செய்யப்படுகிறது. அதில் களை எடுப்பதற்கும், உரமிடுவதற்கும் அதிக செலவாகிறது என்கிறார்கள். விளைச்சலுக்கேற்ற வருவாய் கிடைப்பதில்லை. அன்றைய சந்தை நிலவரத்தைப் பொறுத்தே அதன் விலை நிர்ணயிக்கப்படுவதாகக் கூறுகிறார்கள்.[26]

**மிளகு**

மலையாளிகளின் வாழ்வில் மிளகு முக்கியப் பங்கு வகிக்கிறது. மிளகுக் கொடியைப் பெரிய பெரிய மரங்களில் படரவிடுகின்றனர். நல்ல விளைச்சலும் பெறுகின்றனர். அவர்கள் விற்பனை செய்கின்ற பொருள்களில் மிளகு முக்கிய பொருளாக உள்ளது. சமவெளி மக்கள் இங்கு வந்து மிளகு, சீரகம், கடுகு, தேன், பலாப்பழம், தினை, வரகு, சாமை, கேழ்வரகு, மஞ்சள் போன்றவற்றை வாங்கிச் செல்கின்றனர். கறி என்றால் மிளகு எனப் பொருள். தமிழகத்திலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்ட மருந்துப் பொருட்களில் மிளகு முதலிடம் பெறுகிறது. அதனை,

**"யவனர் தந்த வினைமாண் நன்கலம்**
**பொன்னொடு வந்து கறியொடு பெயரும்**
**வளங்கெழு முசிறி"**[27]

என்ற அடிகள் மெய்ப்பிக்கும். யவனர்கள் அழகிய வேலைப்பாடமைந்த கலங்களில் பொன்னைக் கொண்டுவந்து கொடுத்து, அதற்கு ஈடாக மிளகினைப் பெற்றுச் சென்றதை இப்பாடலடிகள் காட்டுகின்றன. மிளகாய் தமிழ்நாட்டிற்கு வருவதற்கு முன்பே மிளகு பயன்படுத்தப்பட்டுள்ளது. மிளகுக்காய் - மிளகாய் என்று வழங்கப்பட்டது. பண்டைக் காலத்திலிருந்தே மிளகு தமிழர்களின் உணவுப் பொருளாகப் பயன்படுத்தப்பட்டமை பெறப்படுகிறது.

இவர்கள் மிளகைப் பயிரிடுவதற்கு மிளகுக் கொடிகளைச் சிறிது சிறிதாக வெட்டி நடுகிறார்கள். வருடத்திற்கு ஒரு முறைதான் மிளகு பயரிடப்படுகிறது. மிளகுக் கொடிக்கு இரண்டு முறை களை வெட்டுகிறார்கள். சாணி எரு வைக்கிறார்கள். மிளகுக் கொடிகளை சவுக்கு (சில்வர் ஓக்) மரங்களில் ஏற்றி விடுகின்றனர். இதற்கு ரூபாய் 20,000- வரை செலவு செய்கிறார்கள். ஒரு மூடை மிளகுக்கு ரூபாய் 400/- வருமானம் பெறுகின்றனர். மழைப் பொழிவினைப் பொறுத்தே மிளகு விளைச்சல் அதிகம் கிடைக்கும் என்கின்றனர்.[(28)]

மிளகு மட்டுமன்றி மஞ்சளையும் இவர்கள் பயரிடுகின்றனர். நிலத்தைப் பண்படுத்தி, மஞ்சள் கிழங்குகளை நடுகின்றனர். மழைப் பொழிவு அதிகம் இருக்கும் நேரங்களில் விளைச்சல் நன்றாக இருக்கும் என்று கூறுகின்றனர்.[(29)]

**தானியச் சேமிப்பு**

இந்து மலையாளிகள் வரகு, சாமை, சோளம், கேழ்வரகு, நெல், தினை போன்றவற்றைப் பயிர் செய்து வருகின்றனர். அவற்றைப் பாதுகாப்பதற்குத் தானியச் சேமிப்பு அல்லது தானியக்கிடங்கு என்ற ஒன்றைப் பயன்படுத்துகின்றனர். அதற்குத் **தொம்பை** என்று பெயரிட்டு அழைக்கின்றனர். மழை, தீ போன்றவற்றிலிருந்து தானியங்களைப் பாதுகாக்கும் வகையில் வடிவமைக்கப்பட்டுள்ளது. இந்தப் பழக்கம் அல்லது நடைமுறை பன்னெடுங்காலமாக தமிழர்களின் வாழ்வில் இருப்பதாகச் சங்க இலக்கியங்களின் வாயிலாக அறியமுடிகிறது.

நெல்லைச் சேமித்து வைப்பதற்குப் பயன்படுத்தப் பெற்ற கலன்களுள் நெற்கூடும் ஒன்று. அதனை நெடுங்கூடு, தொடுகூடு என்று கூறுகின்றனர். அது நெல், வரகு, சாமை, தினை முதலிய தானிய வகைகளைப் பாதுகாப்பாக வைப்பதற்குப் பயன்படுகிறது. இக்கூடு ஏணிக்கும் எட்டாத அளவு மிக நெடிய வடிவுடனும், மேல் பகுதி திறந்து தானியத்தைக் கொட்டுவதற்கு ஏற்றாற் போல் இருந்திருக்க வேண்டும். இக்கூட்டின் உள்ளிருக்கும் நெல்லின் அளவைத் தெரிந்து கொள்வதற்குப் புள்ளிகள் இட்டுள்ளனர். இதனை,

**“செவ்வீ சேர்ந்த புள்ளீ வெள்ளரை**

**விண்டுப் புரையும் புணர்நிலை நெடுங்கூட்டுப்**

**பிண்ட நெல்லின் தாய்மனை யொழியச் ...”**(30)

என்ற அடிகள் விளக்கும். ஏணிக்கும் எட்டாத மிகவும் நீண்ட

உயரமான நெற்கூடு இருந்ததை,

"ஏணியெய்தா நீணெடு மார்பின்
முகடுதுமித் தடுக்கிய பழம்பல் லுணவிற்
குமரிமூத்த கூடோங்கு நல்லில்"(31)

"பிடிக்கணத தன்ன குதிருடை முன்றிற்"(32)

என்ற அடிகள் நவிலும். பெண் யானைத்திரள் முன்றிலில் நிற்கும் வரகு நிறைந்த குதிர்கட்கு உவமை என்பதால் குதிர்களில் வரகை நிறைத்து வைத்துக் கொண்டமை விளங்கும். இந்நெற்கூட்டை இந்து மலையாளி இனமக்கள் பயன்படுத்துகின்றனர். இக்கலனைக் குறிக்க குதிர், குளுக்கை என்ற பெயர்களால் வழக்கில் இவர்கள் பயன்படுத்துகின்றனர்.

**பட்டி போடுதல்**

தாங்கள் வளர்க்கும் வீட்டு விலங்குகளை மேய்ச்சல் தளங்களுக்குக் கொண்டு சென்று மேய்த்த பின்னர்அவைகளை அவ்விடங்களிலே ஓரிடத்தில் அடைத்து வைப்பர். அதற்கு பட்டிபோடுதல் அல்லது கிடை அமர்த்துதல் என்று பெயர். அவ்வடைப்பு பிரம்புகளால் நீள்சதுர வடிவில் கட்டமைக்கப்பட்ட தட்டிகளால் ஆனதாகும். மேய்ச்சல் தளங்களில் மட்டுமல்லாது (கிடையமர்த்துதலின்றி) வீட்டருகே அமைக்கப்பட்ட தொழுவத்திலும் ஆடு, மாடுகளை அடைத்து வைக்கின்றனர். இத்தொழுவம் கூரைகளன்றி தகரத்தால் வேயப்பட்டுள்ளது.

இவ்வாறு வளர்க்கப்படும் ஆடு, மாடுகளை விற்றும் தங்களது பொருளாதாரத்தை மேம்படுத்திக் கொள்கின்றனர். ஆடு, மாடுகளை வளர்த்து விற்பதும் இவர்களிடையே வழக்கமாக உள்ளது.

### பால் விற்றல்

முல்லை நிலத்தில் வாழ்ந்த ஆயர்கள் தங்களது பொருளாதாரத்தை மேம்படுத்துவதற்காக ஆடு, மாடுகளை வளர்த்தனர். இம்மாடுகளிலிருந்து பால் கறந்து வைப்பதற்காகக் கறவைக் கலனைப் பயன்படுத்தினர். அதனை,

> **“புனத்துளா எந்தைக்குப் புகாவுய்த்துக் கொடுப்பதோ**
> **இனத்துளா னென்னைக்குக் கலத்தொடு செல்வதோ”(33)**
> **“கன்றும் உண்ணாது களத்தினும் படாது**
> **நல்லான் தீம்பால் நிலத்துக்காஅய்”(34)**

என்று அடிகள் புலப்படுத்தும். மலையாளிகள் இக்கறவைக்கலனைப் பயன்படுத்திப் பால் கறக்கின்றனர். அப்பாலைத் தங்களது தேவைக்குப் பயன்படுத்திக் கொண்டது போக, எஞ்சிய பாலை விலைக்கு விற்கின்றனர். இதனால் குடும்ப வளமையைப் பெருக்கிக் கொள்வதற்குரிய வருமானம் கிட்டவில்லை என்கின்றனர்.(35)

### தேனெடுத்தல்

தேனெடுக்கும் முறையைக் கூண்டுகட்டித் தேனெடுத்தல் என்கின்றனர். தேனெடுத்தல் பெரும்பாலும் தை மாதத்தில்

நடைபெறுகிறது. தற்போது தேன் சேகரிப்பு குறைந்து வருவதாகவும் கூறுகின்றனர். தேனனெடுத்தலின் வழி வருவாய் பெறுகின்றனர்.

பழங்குடி மக்களின் தலையாய உணவு தேன். தேன் போன்ற உணவுப் பொருட்களைச் சேகரிப்பது இவர்களின் மரபுத் தொழிலாகும். 'பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பு'[36] என்று சங்கப் பாக்கள் கூறுவது குறிஞ்சித்திணை மக்களின் பண்பு என்பதை உணர்த்துகிறது. தேன் வகைகளை,

1. பெருந்தேன்
2. அடுக்கந்தேன்

என்று பிரிப்பர்.

பெரும் மரக்கிளைகளிலும், உயரிய மலைகளிலும் தேன்கூடு அமைக்கும் இயல்பு கொண்ட தேனீக்களான தேனே பெருந்தேன் என அழைக்கப்படுகிறது. இது செந்தேன், கருந்தேன் என இரு வகைப்படும். இவ்விருவகைப் பெயரும் தேனீக்களின் சிவப்பு, கருப்பு நிறத்தால் வந்ததேயாகும். இவ்விரு வகையுள் சிவப்புத்தேனீக்குச் சினம் மிகுந்தும், கருப்புத் தேனீக்குச் சினம் தணிந்தும் இருக்கும்.

அடுக்கத்தேன் மண் புற்றுக்களிலும், மரப்பொந்துகளிலும் கூடு அமைத்துத் தேன் பெருக்கும் இயல்புடையது. இத்தேனினை அமைக்கும் பணியில் கருப்பு, சிவப்பு நிறம் கொண்ட தேனீக்கள் ஈடுபடுகின்றன. அவ்வகைத் தேனீக்கள் அமைக்கும் தேனுக்குச் செந்தேன், கருந்தேன் என்றும் பெயர்கள் வழக்கில் உள்ளன. இவ்வடுக்கத்தேனில் உள்ள இராணி தேனீயைப் பிடித்துத் தனியிடம்

வைத்த பின்னர் அதன் அடைகளைக் கீறி எடுத்து வாழை நாரில் அவைகளைக் கட்டுகின்றனர். பின்னர் அவைகளிலிருந்து தேனைப் பிழிந்தெடுக்கின்றனர்.

தேன் வகைப்பாட்டில் உச்சந்தேன், கல்லுக்கொம்புத்தேன், சொகவந்தேன் ஆகியனவும் அடங்குகின்றன. உச்சந்தேன் அடைகள் தொடக்க முதல் இறுதிவரை ஒரே அளவாக இருக்கம். இவற்றிலிருக்கும் தேன் சுவை மிகுந்தது. ஏனைய தேன்களைவிட முதன்மை பெறுவது. தேனீக்கள், கல்மேல் பக்கவாட்டிலும், செடிகளிலும் (துவரஞ்செடி, மொச்சைச்செடி), சுவரிலும், வைகோற்போரிலும் கூடமைத்து தேனினை அமைக்கின்றன. அவை முறையே கல்லுக்கொம்புத்தேன், சொட்டாந்தேன், சொகவந்தேன் எனப் பெயர் பெறுகின்றன.

மேற்சொன்ன தேன்களில் மலைத்தேனே முதன்மை பெறுகிறது. இம்மக்கள் தேனை எடுத்து முறைப்படுத்திப் புட்டில்களில் அடைத்து வியாபாரம் செய்து வருகின்றனர். இவர்கள் துன்பம் வரினும் அதனைப் பொருட்படுத்தாது இத்தொழிலில் ஈடுபட்டு வருகின்றனர். இத்தொழிலால் இவர்களுக்கு ஓரளவு வருவாய் கிடைக்கிறது என்கின்றனர். இன்றைய நிலையில் இது பொருளீட்டும் தொழிலாக மாறியுள்ளதை உணரமுடிகிறது.

**பிற தொழில்கள்**

மலைவாழ் மக்களான இவர்கள் நிலைக்கேற்ப பல

தொழில்களைச் செய்து வருகின்றனர். அவை: 1) வாசனைப் பொருட்களைச் சேகரித்து (குங்கலியம், சாதிக்காய், பட்டை, கல்பாசம், மரப்பாசம்) விற்றல்.

2) காடு திருத்துதல்

3) பாத்தி அமைத்தல்

4) பயிர்களைக் காத்தல்

5) கிழங்கெடுத்தல் (கார்த்திகை, மார்கழி மாதங்களில்)

6) களாக்காய், நெல்லிக்காய் சேகரித்தல்

முதலியனவாகும்.[37]

இந்து மலையாளி இனமக்கள் தொடக்கக் காலத்தில் பண்டமாற்று தொழில் முறையில் பொருளீட்டி வந்துள்ளனர். இவ்வழக்கம் தமிழர்களிடையே தொன்மைக்காலம் முதல் இருந்து வந்துள்ளது.

பழந்தமிழகத்தில் பண்டமாற்று முறை சிறந்திருந்தது. பண்டமாற்று என்பது ஒரு பொருளைக் கொடுத்து அதற்கு ஈடாக பிறிதொரு பொருளைக் கொள்வதாகும். தேன், நெய், கிழங்கு ஆகிய பண்டங்கள் மீனுக்கும், நறவுக்கும்; கரும்பும், அவலும், மான் ஊனுக்கும் கன்றுக்கும் மாற்றப்பட்டன (பெரும்.161-165).

இந்து மலையாளி இனமக்கள் தாங்கள் வாழும் நிலப்பகுதியில் கிடைத்த பொருட்களை சமவெளிப் பகுதிக்கு எடுத்துச் சென்று கொடுத்து அதற்கு மாற்றாக அங்கு கிடைக்கும் பொருட்களைப்

(ஆடைகள், அணிகலன்கள், பாத்திரங்கள்) பண்டமாற்று முறையில் பெற்று வந்துள்ளனர். ஆனால் இத்தொழில் முறை இன்று வழக்கிழந்துவிட்டது.

**மலையாளிகளின் தொழில் முன்னேற்றத்தில் அரசின் பங்கு**

தமிழக அரசு மத்திய அரசின் உதவியோடு பழங்குடியினரின் சமூக, பொருளாதார முன்னேற்றத்திற்கென திட்டங்கள் பலவற்றை வகுத்துள்ளது. ஒருங்கிணைந்த பழங்குடியினரின் முன்னேற்றத் திட்டத்தின் மூலம் (Integrated Tribal Development Programme, ITDP) விவசாயம், தோட்டக்கலை, கால்நடை வளர்த்தல், நீர்ப்பாசனம், போக்குவரத்து வசதிகள், கிராமப்புறத் தொழில்கள், பட்டுப்பூச்சி வளர்த்தல், கல்வி, மின்சாரம், குடிநீர் வசதி, நோய்த் தடுப்பு ஆகியவற்றில் முன்னேற்றம் காணும் வழிகள் மேற்கொள்ளப்படுகின்றன.

விவசாய வளர்ச்சிக்காக உயர்ரக விதைகள், நாற்றுகள் வினியோகிக்கப்படுகின்றன. பழங்குடியினரின் நிலங்களைப் பிற மக்கள் கையகப்படுத்துவது தடுக்கப்பட்டுள்ளது. பழங்குடியினர் வாழும் கிராமங்களில் பள்ளிக்கூடங்கள், மருத்துவமனைகள் அமைக்கப்பட்டுள்ளன. நிலமற்ற பழங்குடியினருக்கு வேலை வாய்ப்புத் திட்டங்களும் மேற்கொள்ளப்படுகின்றன. கல்வராயன் மலையில் கருமந்துறை என்ற சிற்றூரில் ஆயிரம் ஏக்கர் பரப்பளவில் பழத்தோட்டம் ஒன்று உள்ளது. அத்தோட்டத்தால், நூற்றுக்கும்

மேற்பட்ட மலையாளிகள் வேலைவாய்ப்புப் பெற்றுள்ளனர். இங்கு இருநூற்றைம்பது ஏக்கர் நிலத்தில் காப்பித் தோட்டமும் அமைந்துள்ளது. கொல்லிமலையில் பட்டுப்பூச்சி வளர்ப்புப் பண்ணையும், பழப்பண்ணையும் உள்ளது. இவற்றில் இம்மக்கள் வேலை செய்து பயன்பெறுகின்றனர்.

ஒரு காலத்தில் பழங்குடிகள் காட்டில் விளையும் பொருட்களையும், மற்ற விளைபொருட்களையும் மலையடிவாரச் சந்தைகளுக்கு நடந்தே சென்று விற்றுவந்தனர். இவர்களைப் பெரும் வியாபாரிகள் மிக எளிதாக ஏமாற்ற முடிந்தது. இதைத் தடுக்க மலைகளிலேயே சந்தைகளும், LAMP என்று அழைக்கப்படும் பன்னோக்குக் கூட்டுறவுப் பண்டக சாலைகளும் ஏற்படுத்தப்பட்டுள்ளன. இத்தகைய LAMPகள் சேலம் மாவட்டத்தில் ஏழு இடங்களில் உள்ளதாகக் கூறுகிறார்கள். விவசாயக் கடன் கொடுப்பது, விளை பொருட்களையும், கானகப் பொருட்களையும் நியாயமான விலைக்கு வாங்கி, கிராமப்புறக் கடைகள் மூலமாக விற்பது, ITDPயின் உதவியுடன் விதை, விவசாயக் கருவி, பழநாற்று ஆகியவற்றைப் பெற்று வினியோகம் செய்வது போன்ற பணிகளை இவ்வமைப்புகள் செய்து வருகின்றன. இவை வழங்கும் கடன்களுக்குப் பெரும்பாலும் வட்டி கிடையாது.

பல தொண்டு நிறுவனங்களும் பழங்குடியினர் முன்னேற்றத்தில் அதிக ஆர்வம் காட்டுகின்றன. கல்வராயன் மலைவாழ் மக்களின்

விவசாய முறை மிகப் பழமையானது என்கின்றனர். அவர்கள் புனல்காடு மாற்றுப் பயிரிடும் முறையைக் கையாளுகின்றனர். முக்கியப் பயிர் கேழ்வரகு, சோளம், கம்பு, தினை, நெல் போன்றவையாகும். ஆற்காடு லுத்தரன் திருச்சபை இவர்களின் வளர்ச்சிக்குப் பெரிதும் துணை செய்து வருகின்றது. கொல்லிமலையிலும், சேர்வராயன் மலையிலும் உள்ள மலையாளிகளுக்குத் தொண்டு நிறுவனங்கள் உதவி செய்த போதிலும், கிருத்துவ மதத்தைப் பரப்புவதே நோக்கங்களாக இருந்திருக்கின்றன. அவை தோல்வி கண்டுள்ளதும் அங்குள்ள பெருந்தெய்வ மற்றும் சிறுதெய்வ இந்து கோயில்களின் வளர்ச்சியைப் பார்க்கும் பொழுது அறியப் பெற்றது.

**தொகுப்புரை**

தொல்காப்பியத்தில் கருப்பொருளைப் பற்றிக் கூறும் போது செய்தி என்பது தொழிலைக் குறிக்கும் என்பர். உழைப்பு, பணம் சம்பாதித்தல், கருவிகள் உற்பத்தி, தொழில் திறம் ஆகியவைகள் தொழிலோடு தொடர்பு பெறுகின்றன. பொதுவாக உழைப்பை மையமிட்ட தொழில் கருத்திற்குரியதாகும்.

தொழில்களை வாழ்வியல் தொழில், போர்த் தொழில், வாணிகத் தொழில், கலையியல் தொழில் என வகைப்படுத்தலாம். இவை அனைத்திலும் பண்டைய தமிழர்கள் சிறந்து விளங்கியுள்ளனர். பழங்காலத் தமிழர்களின் எச்சங்களாக இன்னும்

பழங்குடியினர் காணப்படுவதற்கு அவர்கள் மேற்கொள்ளும் தொழில்களும் காரணமாகின்றன.

மலையாளிகளின் முக்கியத் தொழில்கள் விவசாயம், தேனீ வளர்த்தல், மரம் வெட்டுதல் ஆகியவையாகும். வரகு, சோளம், கம்பு, தினை, சாமை, கேழ்வரகு ஆகியவற்றைப் பயிரிடுகின்றனர். காய்ந்து போன சந்தன மரத்தை வெட்டி வனத்துறையினருக்குக் கொடுத்துக் கூலி பெறுகின்றனர்.

வெற்றிலை, மிளகு போன்ற பணப்பயிர்களையும், குச்சிக்கிழங்குகளையும் இவ்வின மக்கள் பயிரிட்டுப் பொருள் வளத்தைப் பெருக்கிக் கொள்கின்றனர். கொல்லிமலையில் வெற்றிலை பயிரிடுவதில்லை.

பழங்குடி மக்களின் தலையாய உணவு தேன். அதனைச் சேகரித்து விற்பதை இவ்வின மக்கள் தொழிலாகக் கொண்டுள்ளனர்.

தங்கள் நிலங்களில் விவசாயம் செய்யும் விவசாயிகளும் இருக்கின்றனர். கூலி வேலை செய்யும் மலையாளிகளும் காணப்படுகின்றனர். மத்திய, மாநில அரசுகள் இவர்களுக்குத் தேவையான அனைத்து வசதிகளையும் செய்து கொடுத்து, வேலைவாய்ப்பினைப் பெற்றுத் தந்துள்ளன.

மலையாளிகள் பழத்தோட்டங்கள், காப்பித் தோட்டங்கள், பட்டுப்பூச்சி வளர்ப்புப் பண்ணைகள், பழப்பண்ணைகள் ஆகியவற்றில் வேலை செய்து வருகின்றனர்.

காட்டில் விளையும் பொருட்களையும், மற்ற விளைபொருட்களையும் அரசே LAMP என்று அழைக்கப்படும் பன்னோக்குக் கூட்டுறவுப் பண்டக சாலைகளின் மூலமாகப் பெற்று அவர்களுக்கு உதவுகிறது.

விவசாய வளர்ச்சிக்காக உயர்ரக விதைகள், நாற்றுகள் வினியோகிக்கப்படுகின்றன.

பழங்குடியினரின் நிலங்களைப் பிற மக்கள் கையப்படுத்துவது தடுக்கப்பட்டுள்ளது.

பழங்குடியினர் வாழும் கிராமங்களில் பள்ளிக்கூடங்கள், மருத்துவமனைகள் அமைக்கப்பட்டுள்ளன.

நிலமற்ற மலைவாழ் பழங்குடியினராகிய மலையாளிகளுக்கு அரசின் வேலைவாய்ப்புத் திட்டங்கள் வாயிலாகப் பயன் கிடைக்கின்றன.

வேட்டைத் தொழில் செய்தாலும், அரசின் கட்டுப்பாட்டுக்குள் இவர்கள் இருக்கிறார்கள். வனத்துறையினரின் கண்காணிப்பில் தொழில் செய்து வருகின்றனர்.

ஆறலைத்தலும், பிச்சை எடுத்தலும் மலையாளிகளிடம் இல்லை.

இந்து மலையாளிகளைத் தவிர, சமவெளிப் பகுதியினரும், நரிக்குறவர்களும் மலைப் பகுதிகளில் தொழில் செய்கின்றனர்.

***திருவிழாக் காலங்களில் மலையாளிகளில் சிலர் சிறு வியாபாரம் செய்கின்றனர்.***

***இந்து மலையாளிகளில் சிலர் மலையடிவாரங்களில் தேநீர்க் கடைகள், சிற்றுண்டிக் கடைகள் வைத்து தொழில் செய்து வாழ்ந்து வருகின்றனர்.***

**சான்றெண் விளக்கம்**

*1. தமிழ்ப் பேரகராதி (லெக்சிகன்), தொகுதி 4, ப.2100.*

*2. சி.சசிவல்லி, பண்டைத் தமிழர் தொழில்கள், பக்.36.*

*3. வாழ்வியல் களஞ்சியம், தொகுதி 5, ப.342..*

*4. தொல்.பொருள்.20.*

*5. சி.சசிவல்லி, பண்டைத் தமிழர் தொழில்கள், பக்.6-7.*

*6. தற்காலத் தமிழ்ப் பெயரகராதி, ப.360.*

*7. தொல்.1581.*

*8. திருமுருகு194–196; மலைபடுகடாம் 318–327.*

*9. பெரும்.199-200.*

*10. மேலது, 188-189.*

*11. புறம்:61:3.*

*12. குறுந்.(பெருமழைப்புலவர் உரை), ப.583.*

*13. பெரும்:201.*

*14. குறுந்.392:4-5.*

*15. 15. நற்: 142:2-4.*

16. குறிஞ்:124.

17. நற்: 327:11.

18. பெரும்:112- 113.

19. நற்:228 6-7.

20. ஆ.செல்லப் பெருமாள்,தென்தமிழ்நாட்டுப் பழங்குடிகள், பக்.10-11.

21. தே.அந்தோணிமுத்து, கல்வராயன் பழங்குடியினர் மத்தியில் ஆற்காடு லுத்தரன் திருச்சபையின் சேவை (கட்டுரை), தமிழ்நாடன் (தொ), தமிழ்நாட்டு மலைவாழ் பழங்குடிகள், ப.52.

22. காண்க: பின்னிணைப்பு: பேட்டி எண்:4.

23. மேலது, பேட்டி எண்:4.

24. மேலது, பேட்டி எண்:4.

25. காண்க: பின்னிணைப்பு: பேட்டி எண்:5.

26. மேலது, பேட்டி எண்:5

27. அகம்:149:9-11.

28. காண்க: பின்னிணைப்பு: பேட்டி எண்:5.

29. மேலது, பேட்டி எண்.5.

30. நற்.26:2-4.

31. பெரும்.245-247.

32. பெரும்.186.

33. கலித்.108:30-31.

34. குறுந்.27:1-2.

***35. காண்க: பின்னிணைப்பு: பேட்டி எண்:4.***

***36. அகம்.350.***

***37. காண்க: பின்னிணைப்பு: பேட்டி எண்:4.***

## இயல் – 3

## சடங்குகள்

வாழ்க்கையின் அனைத்து நிகழ்வுகளும் சடங்குகளால் பின்னப்பட்டுள்ளன. வாழ்வில் நன்மை பெறவும், குடும்பம் தழைத்தோங்கவும், மன ஆறுதல், நம்பிக்கை, அமைதி பெறவும், சமுதாய ஒருமைப்பாடு உண்டாகவும், குடும்ப உறவினர் ஒற்றுமை ஓங்கவும், பிற இனத்தாருடன் நட்புறவு நிலைக்கவும் சடங்கு முறைகள் தேவையாகின்றன.

பழங்குடி சமுதாயத்தில் சடங்கே வாழ்க்கையாகவும், வாழ்க்கையே சடங்காகவும் அமைந்துள்ளன. சடங்குகள், சமுதாய வாழ்க்கைக்குரிய சட்டங்களாகவும், கலாச்சார மையங்களாகவும் திகழ்கின்றன. பழங்குடி மக்களின் சடங்குகள் யாவும் வாய்மொழியாகவே பின்பற்றப்படுகின்றன. இப்பழங்குடியினருள் ஒருவராக உள்ள இந்து மலையாளிகள் தங்களது வாழ்வில் பல சடங்குமுறைகளைக் கைக்கொண்டுள்ளனர். அவற்றை இலக்கியங்கள், கள ஆய்வுத் தரவுகள் அடிப்படையில் ஆராய்ந்து விளக்குவதே இவ்வியலின் நோக்கமாகும்.

### சடங்குகள் வரையறை

ஒவ்வொரு சமூகத்தினரும் தம் வாழ்வை நெறிப்படுத்தி நடத்திச் செல்ல அமைத்துக் கொண்ட சம்பிரதாயங்கள், நம்பிக்கைகள், கட்டுப்பாடுகள் போன்றவையே சடங்காகும்.

சடங்கு என்பதற்குக் 'கிரியை', 'செய்முறை' எனத் தமிழகராதி பொருள் தருகிறது. மனிதன் தன் வாழ்க்கையைக் குறிக்கோள் உடையதாக்கி ஒழுங்குடன் வாழத் தலைப்பட்ட போது ஏற்படுத்திக் கொண்ட ஒரு சாத்திர முறைமையே 'சடங்கு' என அழைக்கப்படுகிறது.

மனிதன் கரு முதல் கல்லறை வரை பல கட்டங்களைக் கடக்கிறான். ஒவ்வொரு கட்டத்திலும் நடந்த நிகழ்ச்சி, அதன் சிறப்பு, பண்பு, பலன் ஆகியவற்றை நினைவூட்ட, சில சிறப்புச் செயல்கள் செய்யுமாறு ஒவ்வொரு இனத்தாரும் சில விதிகளை உண்டாக்கியிருக்கிறார்கள். அச்சிறப்புச் செயல்கள் 'பிரவேசச் சடங்குகள்' எனப்படும்.

தொடக்கத்தில் தேவதைகள், இறந்தவர்களின் ஆவிகள் மக்களுக்குக் கேடு செய்யக்கூடும் என்ற நம்பிக்கையில் சடங்குகள் நடத்தப்பட்டன. சடங்குகளின் போது, பலரும் வந்து கூடுவதால் கருத்து வேறுபாடு, சண்டைகள், பிணக்குகள் யாவும் மறந்து ஒற்றுமை வலுக்கிறது. இச்சடங்குகளின் மூலம் ஓரினத்திற்கும் மற்றோர் இனத்திற்குமுள்ள வேறுபாட்டையும் அச்சடங்குகளைச் செய்கின்ற மக்களின் மனநிலைகளையும், சிந்தனை முறைகளையும், சமூக, பொருளாதார நிலைகளையும், அவர்கள் வாழும் இடங்களையும், அவர்களின் கல்வி, நாகரிகம், பண்பாடு, ஒழுக்கம், சமயம் போன்றவற்றையும், அவர்களின் எதிர்காலத்தையும் கணிக்க முடியும்.

பழங்குடி மக்கள் இயற்கையை மனதில் எண்ணிச் செய்தால், தங்களுக்குப் பாதுகாப்பு மற்றும் தாங்கள் நினைத்த காரியம் நிறைவேறும் என்ற நம்பிக்கையில் சடங்குகளைச் செய்துள்ளனர். பழங்குடிகள் பெரும்பாலும் காடு செழிக்கவும், மழை, வளம் பெருகவும், பயிர் வளரவும், காய், கிழங்குகள் கிடைக்கவும், நோய்நொடிகள் வராமல் இருக்கவும், புயல், வெள்ளம், தீ போன்ற இயற்கை இடர்கள் வராமல் இருக்கவும் சடங்குகளைச் செய்தனர்.

சடங்குகள், பல செயல்களின் தொகுதிகளாக அமைந்துள்ளன. செய்தவற்றையே திரும்பத் திரும்பச் செய்தல் சடங்கின் முக்கிய இயல்பாகும். சடங்குகளின் போது மதுவருந்தினர்; ஆவேசம் பெற்றனர்; சடங்கின் போதும் விதவிதமான உணவுகளைப் படைத்து உண்டனர்; பலியிட்டனர்; பூ, வாசனைத் திரவியம் ஆகியவற்றைப் பயன்படுத்தினர். சடங்குகளில் ஆடல், பாடல், இசை ஆகிய யாவும் ஒன்றிணைந்து விளங்கின.

இச்சடங்குகளை, "மானிடவியலார் மந்திர நடனமாகவே குறிக்கின்றனர். வரலாற்றுக்கு முற்காலச் சடங்குகளை மூன்றுவிதமாக வகைப்படுத்தலாம். அவை மந்திரச் சடங்குகள், மந்திரமும் சமயமும் கலந்த சடங்குகள், சமயச் சடங்குகள் என்பனவாகும். காலப்போக்கில் தொழில்நுட்பங்கள் வளர, வளர மந்திரமும் மறைந்தது. ஆயினும் சடங்குகள் தொடர்கின்றன. ஒருவிதமான நம்பிக்கையின் அடிப்படையில் இவை நிகழ்த்தப்படுகின்றன. அவை மக்களின் உணர்வோடு கலந்து, மனநிறைவை அவர்களுக்கு

வழங்குவதாக நம்பப்படுகிறது"[1] என்பர் கா.சுப்பிரமணியன். ஒன்றைப் பகுத்தறிந்து கொள்ள முடியாத நிலையில், மக்களைச் சடங்குகள் ஆட்கொண்டதில் தவறில்லை எனலாம். ஏனெனில் அவைகளின் வழி ஒருவகையில் நன்மை கிட்டியதாகவே கருதமுடிகிறது.

**இலக்கியங்களில் சடங்கு முறைகள்**

மழை, வளமை, வேட்டை ஆகியவற்றை முன்னிறுத்தி பண்டைக்கால மக்கள் சடங்குகளை நிகழ்த்தியுள்ளனர். மழை, வளம் ஆகியவற்றை வேண்டிச் சடங்குகள் செய்யப்பட்டன. வேட்டை, விவசாயம் ஆகிய இரண்டிற்கும் மழை மிகவும் அவசியமாகும். மழை வேண்டிச் செய்யப்பட்ட சடங்கு மந்திரச் சடங்காகவும், மந்திரமும் சமயமும் கலந்த சடங்காகவும் விளங்கிய குறிப்புகளை இலக்கியங்களில் காணமுடிகிறது. இச்சடங்கு முறைகள் நிலத்திற்குத்தக மாறுபட்டு அமைந்துள்ளதைச் சங்க இலக்கியங்கள் சுட்டும்.

குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த மக்கள் இயற்கையோடு இயைந்து வாழ்ந்தனர். அந்நிலத்தில் வாழ்ந்த குறவர்கள் எழுப்பும் ஒலியினால் மழை வந்ததாகவும், அது நிலத்திலே பெய்வதற்காக அவர்கள் சடங்கு செய்ததாகவும் சங்க இலக்கியத்துள் கருத்துக்கள் உண்டு. அதனை,

**"குன்றக் குறவன் ஆர்ப்பின் எழிலி**
**நுண்பல் அழிதுளி பொழியு நாட"[2]**

"மலைவரன்  கொரள்க! என் உயிர் பலிதூஉய்

மாரியான்று, மழை மேக்குஉயர்க எனக்

கடவுட் பேணிய குறவர் மாக்கள்

பெயல்கண் மாறிய உவகையர்"(3)

என்ற பகுதிகள் முறையே விளக்கும். மக்கள் பேணிய கடவுளை, தற்காலத்தில் கடவுளருடன் ஒப்பிட முடியாது. அது ஆவி நம்பிக்கையில் அமைந்ததாகும். அம்மக்கள் இயற்கைப் பொருட்களையும் நிகழ்ச்சிகளையும் ஆற்றலும் உயிரும் உடையனவாகக் கருதியதே இதற்குக் காரணமாகும். "புறநானூறு கூறும் 'உயிர்பலி தூவுதல்' நீர் வளாவுதலாக இருந்தது. நீர் சிந்துதல், நீராவி மந்திரவாதியை முழுக்காட்டுதல் ஆகிய மந்திரச் செயல்கள் ஆஸ்திரேலியப் பழங்குடி மக்களின் மழைச் சடங்குகளில் காணப்படுகிறது"(4)என்பர் கா.சுப்பிரமணியன். தமிழ்நாட்டில் சிறுதெய்வ வழிபாட்டில் சாமியாடிகளுக்கு மஞ்சள் நீராட்டுதல், திருவிழாவின் போது மஞ்சளாடை அணிதல், மஞ்சள் நீர் தெளித்தல் இன்றும் காணப்படுவது நோக்கத்தக்கதாகும்.

மருதநில மக்கள் மழைக்காகச் செய்யும் சடங்கைப் பரிபாடல் விளக்குகிறது. (பரி:10:85-86)சங்கு, நண்டு, இறவு, வாளை போன்றவற்றை வையையில் இட்டுச் சடங்குகள் செய்துள்ளனர். அதனை, "சங்கை நதியிலிடுதல், தொத்து மந்திரமாக மழை வேண்டிச் செய்யப்பட்டது. தொடர்பு கொண்டிருந்த இரு பொருள்களிடையே நிரந்தரத் தொடர்பு இருக்கும் என்பது தொத்து மந்திரமாகும்.

நீரோடு நெடுநாள் தொடர்பு கொண்டிருந்த சங்கு, சிப்பி போன்ற பொருள்களுக்கு நீரை வரவழைக்கும் இயல்பு உண்டு என்ற நம்பிக்கையை இங்கு காணலாம். இவற்றை ஆற்றில் இட்டால் ஆற்றில் நீர் பெருகும்; ஆற்றில் நீரைப் பெருக்க மழை பெய்யும் என நம்பினர்''[5] என்ற கருத்து அரண் செய்யும்.

கொற்கையில் மழைச்சடங்கு செய்யப்பட்டதை அகநானூற்றுப் பாடல் குறிக்கின்றது (அகம்:201). பழையர் மகளிர், பௌர்ணமியன்று, தழையாடை உடுத்திப் படித்துறையை வழிபட்டுள்ளனர். அவ்வழிபாட்டில் முத்தும், வலம்புரியும் இடம்பெற்றுள்ளன. முல்லை நிலத்தில் ஏறு தழுவுமுன் ஆயர்கள், நீர்த்துறையை வழிபட்டது இங்கு குறிப்பிடத்தக்கது (முல்லைக்கலி:1–3). நீரோடு தொடர்புடைய பொருள்கள், மழையைக் கொண்டு வரப் பயன்படும் என்னும் நம்பிக்கையில் இச்செயல் அமைந்தது என்ற நா.வானமாமலையின் கருத்து ஒப்புநோக்கத்தக்கது.

கானவர் தங்களது வழிபடு தெய்வத்தினைச் சுற்றமொடு சென்று சடங்கு நிகழ்த்தி வழிபட்டதனை,

> ''அமர்க்கண் ஆமான் அருநிறம் முள்காது
> பணைத்த பகழிப் போக்கு நினைத்து கானவன்
> அணங்கொடு நின்றது மலைவான் கொள்க எனக்
> கடவுள் ஓங்கு வரை பேண்மார் வேட்டெழுந்து
> கிளையோடு மகிழுங் குன்றநாடன்''[6]

என்ற அடிகள் விளக்கும். கானவன் காட்டுப் பசுவின் மீது அம்பு எய்தான். அம்பு, குறி தவறிவிட்டது. உணவாக வேண்டிய விலங்கு தப்பி விட்டது. அதற்கு மலைத் தெய்வத்தின் கோபம்தான் காரணம் என நம்பினான். மழை பெய்தால் அம்மலைத் தெய்வத்தின் சினம் தணியும் என நினைத்தான். உடனே அவன் சுற்றத்தினரை அழைத்துக் கொண்டு விருப்பத்தோடு மலைமேல் ஏறிச் சென்று கடவுளைப் பேணி மகிழ்ந்தனர்.

மக்கள் தாம் மேற்கொண்ட முயற்சியில் வெற்றி பெற்ற பின்னர், அத்தெய்வத்திற்கு நன்றி செலுத்தும் விதமாக பலியிட்டு, பகுத்துண்டு, மகிழ்ச்சியுடன் கொண்டாடினர். இதனையே 'உண்டாட்டு' என்பர்.

பகை விரட்டி, பசு கவர்ந்த மறவரின் செயலை அகநானூறு குறிப்பிடுகிறது. மறவர், பகை நிலம் சென்றனர். வலிய வாளால் வெட்டியும், வில்லால் எய்தும் பகைவரை விரட்டி, அவர்களுடைய பசுக்களைக் கவர்ந்து வந்தனர். அஞ்சா நெஞ்சினராகிய அவ்வீரர், அம்பைத் தூரத்தே வைத்தனர். தெய்வம் உறைகின்ற பருத்த வேப்பமரத்தின் கீழ் நிணத்தை (குருதியும் சோறும் கலந்தது) எறிந்து, குருதி தூவி, பலியிட்டு, புலாலாகிய பல வகைப்பட்ட இறைச்சியினை வேக வைத்து உண்டனர். மறவர் தமக்குக் கிடைத்த கொள்ளைக்கு, நன்றி செலுத்தும் வகையில் வேப்பமரத்தை வழிபட்டனர். அம்மரத்தில் தெய்வம் உள்ளது என்னும் நம்பிக்கையே இதற்குக் காரணம் ஆகும். இன்றும் சிறுதெய்வ

வழிபாட்டிலும், மாரியம்மன் வழிபாட்டிலும் வேப்பமரம் முக்கிய இடம் பெறுவதை அறியமுடிகிறது.

மீன் வளத்தை விரும்பி, நெய்தல் நிலத்தில் செய்த சடங்கைப் பட்டினப்பாலை விவரிக்கின்றது. அச்சடங்கு பௌர்ணமியன்று நடைபெற்றது. பரதவர் குடியிருப்பின் முற்றத்தில் நடைபெற்றது. அங்கு சினையையுடைய சுறாமீனின் கொம்பை நட்டு, அதனிடத்தே ஏறிய வலிய தெய்வத்தை வழிபட்டனர். மகளிர் தழையுடை உடுத்தியிருந்தனர். அன்று பரதவர் பனிக்கடல் வேட்டம் செல்லவில்லை. அவர்களுடன் மகளிர் பனங்கள்ளை அருந்தினர். நெற்கள்ளுண்டு, வெண்டாளிமாலை அணிந்தனர். தாழம்பூ சூடினர்; கூடி ஆடி சடங்கைச் செய்தனர்; அதன்பின் கடலாடினர்.

சினை, வளமையின் தன்மையது. மீன் வளத்தை நாடியவர், கடல் வளத்தினைப் பெருக்குதற் பொருட்டு, சினைச் சுறாமீனின் கொம்பை வழிபட்டனர். மானிடவியலார் இவ்வழிபாட்டை ஆவி நம்பிக்கை வகையில் அமைந்தது என்பர். நெய்தல் நிலத்தார் சுறாமீனின் கோட்டினை (கோடு–கொம்பு) வழிபடுதலை, பெரியபுராணம் திருக்குறிப்புத் தொண்டர் புராணத்தின் வழி அறியமுடிகிறது.

சிலப்பதிகார வேட்டுவவரி கொற்றவை வழிபாட்டைச் சித்திரிக்கின்றது. சிலம்பில் கொற்றவை வழிபாடு பழைய சடங்கின் எச்சமாக அமைந்துள்ளது. கொற்றவையாக எயினர் குலக்குமரி

கோலங் கொண்டாள். அவளுக்குரிய அணிகலன்களான புலிப்பல், பன்றித் தந்தம், புலித்தோல், பாம்புக்கயிறு, யானைத்தோல் ஆகியவை தொத்து மந்திரத்தால் அவளது ஆற்றலை மிகுவிப்பவையாகும். இவை மூர்க்கமிக்க அவ்விலங்குகளின் ஆற்றலைக் கண்டு எடுக்கப்பட்டவை. அவ்வாற்றல் இவற்றை அணிந்திருப்பவருக்கு வந்து சேரும் என்னும் நம்பிக்கை அடிப்படையாகும். இனக்குழு மக்கள், தம் தெய்வத்தின் ஆற்றலை இத்தகைய புறச் சேர்க்கைகளால் மிகுவிக்கும் போக்கை இதில் காணலாம்.''(7)

வேட்டைக்குச் செல்லுமுன் ஆடி மகிழும் நிலையே வேட்டைச் சடங்காகும். பண்டைக் காலத்தில் மககள் வேட்டைக்குச் செல்லுமுன்பு, விலங்கு நடனம் ஆடிவிட்டுச் சென்றனர். இவ்வாறு ஆடிவிட்டுச் சென்றால் வேட்டையில் நல்ல பலன் கிடைக்கும் என்று நம்பினர். விலங்கு நடனம் வேட்டைச் சடங்கு ஆகும். இன்றைய திராவிடப் பழங்குடியினரிடையே நரிக்கூத்து நடைபெறுகிறது. நரிக்கூத்து என்பது எல்லோரும் சேர்ந்து வலைகளையும் ஈட்டிகளையும் எடுத்துக் கொண்டு, காட்டுக்குள் போய் தொல்லை கொடுக்கும் நரியைப் பிடிப்பதுதான். நரியைப் பிடிக்கக் கூச்சல் போட்டு வலைவீசிக் கூத்தாடுவர். வேட்டையாடிய உணவை விருந்தாக்கி உண்ட பின்னரும் கூத்தாடி மகிழ்ந்துள்ளனர்.

குரவை, துணங்கை ஆகிய கூத்துக்கள் மலையாளிகளின் மந்திரச் சடங்குகளாக இருந்திருக்க வேண்டும். அவற்றில் கலந்திருந்த

மந்திரம் மறைந்து நாளடைவில் சடங்கும், குழு நடனமும் எஞ்சி நின்றது.

குன்றக்குரவை, இறந்தவர்களின் வழிபாட்டுச் சடங்காக அமைந்தது. அக்குன்றில் இறந்த கண்ணகிக்குக் கோயில் அமைக்கவும், மதில் சுவர் கட்டவும், அவளது புகழ் பாடவும், அவளை வழிபடவும் வேண்டும் வண்ணம் அச்சடங்கு அமைந்தது. "கானவர், குன்றகச் சிறுகுடிக் கிளையுடன் கள் குடித்து மகிழ்ந்து தொண்டகச் சிறுபறை முழக்கி, குரவையாடினர்."(8)

குறவர் மாக்கள், தேறல் அருந்தி, வேங்கை மரநிழலில் குரவையாடினர். சிறுகுடிப் பாக்கத்தினர் பெண்டிரோடு சேர்ந்து பறை முழங்க தெருவில் ஆடினர். மைந்தர் மகளிர்க்குத் தலைக்கை தந்து ஆடினர். இவ்வாறு ஆடவரும் மகளிரும் சேர்ந்து ஆடிப்பாடுதலைக் காணமுடியும்.

நிலத்தில் விதை விதைக்கும் போது சடங்குகள் செய்தே தொடங்கியுள்ளனர். திருமுருகாற்றுப்படை விவரிக்கும் வேலன் வெறியாடல் விதைப்புக்கு முந்திய சடங்காகவே தோன்றுகிறது. பலியிட்ட மறியின் குருதியில் விதையைத் தேய்த்து விதைத்தனர். இரத்தம் உயிர்ச்சக்தியின் அறிகுறி. இரத்தத்தில் விதை நனைக்கப்பட்டால் வளரும் என்பது அக்கால நம்பிக்கையாகும். இதனைப் பழங்குடி மக்களிடத்தில் காணமுடிகிறது. அவர்களிடையே நடைபெறும் விழாக்கள், இயற்கையைத் தம் பக்கம்

இழுக்கச் செய்யும் சடங்குள் ஆகும். அவர்கள், விதை, தானியங்களைப் பலியிட்ட குருதியோடு கலந்து தெளித்தால் வளம் பெருகும் என்று நம்பினர்.

அக்காலத்தில் மனித இன விருத்தியும், வேளாண்மைச் செழிப்பும் ஒன்றோடொன்று தொடர்புபடுத்தப்பட்டிருந்தது. பயிர்ச் செழிப்பை விரும்பி நடத்தப்படும் இச்சடங்கில் வேலன், 'மெய் தீண்டி விளையாடும் மகளிர்க்குத் தலைக்கை தந்து ஆடுதல்' குறிக்கப்படுகிறது. "கேரளப் பழங்குடியினரான மலைவேடர், விதைத்தவுடன் மலைக்குப் படையல் போடுவர். அதற்கு வேலன் முன்னணியில் நிற்பான்... மத்தளம் மற்றும் வாத்தியங்கள் இயங்கும், தாள லயத்துடன் ஆடுவான், ஆவேசம் பெற்று முன்னம் கூறுவான், அங்கு நடனம் பயிரை வளரச் செய்வதற்காக ஆடப்பெறுவதாகும். நடனத்தில் உயரத் தாவுதல் என்பது பயிர் அவ்வளவு உயரமாக வளர வேண்டும் என்னும் அடிப்படையிலாகும்"[9] என்பர். இவ்வாறு விதைப்புக்கு முன்னும் பின்னும் பல சடங்குகள் செய்தனர். அறுவடைக்கு முன்னரும் இச்சடங்குகள் நிலவின. அவற்றைப் பற்றிய செய்திகள் சங்க இலக்கியத்தில் இல்லை. பழங்குடி மக்களிடம் அவற்றைக் காண முடிகிறது.

### கொல்லிமலை ஐந்து நாட்டுப்பகுதி பெண்மக்களின் சடங்கு

கொல்லிமலையில் வாழ்பவர்கள் இந்து மலையாளிகள். அவர்கள் தங்களைக் கவுண்டர்கள் என்று கூறிக் கொள்கிறார்கள். சமநிலப் பகுதி மக்களோடு தொடர்பு கொண்டதன் காரணமாக,

அவர்கள் அவர்களது சில பழைய வழக்கங்கள் மறைந்து வருகின்றன. இருப்பினும், அவர்கள் முழுவதும் மாறிவிடவில்லை என்பது கள ஆய்வில் பெறப்படுகிறது. இப்பகுதி வாழ் இந்து மலையாளி இன மக்கள் மகப்பேறு, பூப்பு தொடர்பான சடங்கு முறைகளை நிகழ்த்தி வருகின்றனர்.

**மகப்பேறு**

மகப்பேறு தாய் வீட்டிலேயே நடைபெறுகிறது. பெண்ணை தாய்வீட்டார் அழைத்து வருவர். பெண்ணின் அண்ணன் தம்பியர் சோறு எடுத்துக் கொண்டு மாப்பிள்ளை வீட்டிற்குச் சென்று, அன்றைய தினம் தங்கியிருந்து மறுநாள் அழைத்து வருவர். அழைக்கச் செல்லும்போது சகுனம் பார்ப்பதுண்டு.

மகப்பேறு எளிதாக இல்லாவிட்டால் சாமிகேட்கும் பழக்கம் உண்டு. கோயில் எல்லையில் தகாத காரியங்கள் செய்தாலும், பேசினாலும், பேறுகாலத்தில் துன்பம் ஏற்படுமாம். இச்சந்தர்ப்பத்தில் பூசாரி சூடம், சாம்பிராணி வைத்துத் தெய்வங்களை அழைத்து வாக்குச் சொல்லுவான். பூசாரிக்கு அருள் வருவதும் உண்டு. பெரும்பாலும் பூசாரி ஏதாவது ஒரு குத்தம் (குற்றம்) சொல்லி, அதற்குப் பரிகாரம் சொல்வான். இவ்வின மக்கள் குழந்தைக்கு மொட்டையடித்தல், காதுகுத்துதல் போன்ற நேர்த்திக் கடனைச் செய்கிறார்கள். அவர்களால் அத்தருணத்தில் இறைவனுக்குச் சடங்கு செய்யப்படுகின்றன.

மகப்பேறு பார்க்கத் தனியாக மருத்துவச்சி கிடையாது. பிரசவம் வீட்டில் நடைபெறும். தற்போது, தவிர்க்க முடியாத நிலையில் மருத்துவமனைக்குக் கொண்டு செல்கிறார்கள். நஞ்சுக் கொடி துண்டித்துப் பொதுச் சுடுகாட்டில் புதைத்து மண்சட்டி வைத்து அதனை மூடிவிடுவர். வீட்டு எல்லையில் புதைப்பது இல்லை. வசதியான பணக்கார வீட்டிலும் மகப்பேறு திண்ணையில்தான் நடைபெறுகிறது. 5 நாள் தீட்டு கழிந்த பின்னர்தான், தாய் வீட்டிற்குள் செல்ல முடியும். அன்று தாய்க்குக் கோழிக்குழம்பு வைத்துச் சோறு கொடுப்பர். மருத்துவச்சிக்கு எண்ணெய் முழுக்காட்டி கோழிக்கறியோடு சோறு படைப்பர். பிறந்த குழந்தையை மஞ்சளும், தழையும் சேர்த்து அரைத்த கலவையால் பூசி நீராட்டுவர். பெரும்பாலும் மூன்று நான்கு மாதத்திற்குள் பெயர்வைத்து விடுகிறார்கள். குழந்தைக்கு ஒரு வருடம் ஆகும்போது ஒரு கோயிலில் வைத்து மொட்டையடிப்பர். பெண் குழந்தைகளுக்குக் காது குத்துச் சடங்கு நடத்தப்பெறுகிறது. பெரும்பாலும் ஆண் குழந்தைகளுக்குக் காது குத்துதல் கிடையாது என்கின்றனர்.

குழந்தை பிறந்து இறந்துவிட்டாலோ அல்லது இறந்து பிறந்தாலோ அவர்கள் ‘கருப்பு முடிக்குதல்’ என்ற வழக்கத்தினைக் கொண்டுள்ளனர். சாமி அழைத்துப் பேய் ஓட்டுதலே கருப்பு முடிக்குதல் என்று பெயர். ஊர்ப்பொங்கல் முடிந்த பின்னால் கருப்பு முடுக்குவதும் உண்டு. கையில் எருக்கங்கொம்பை எடுத்துக் கொண்டு

பெண்கள் சிலர் கருப்பை ஓட்டி வருவர். அப்பொழுது எவரேனும் வெளியில் இருந்தால் கருப்பு அடித்துவிடும் என்று நம்புகிறார்கள். குழந்தை பல்முளைத்தபின் செத்தால் பெரியவர்களாகக் கருதிச் சடங்குகள் செய்கின்றனர். இல்லாவிட்டால் சடங்கேதும் இல்லை.

குழந்தைக்கு அரைஞாண், காப்பு அணிவிப்பதுண்டு, வெள்ளெருக்கு நாரைக் கயிறாகத் திரித்து அரைநாணாகக் கட்டுவதுண்டு. கோயிலுக்குக் குழந்தையை அழைத்துச் சென்று மாமன் சோறூட்டுவான். கோயிலில் பிள்ளைச்சோறு கொடுப்பர். இந்தத் தளிகைச் சோற்று உருண்டையைச் 'சாமிச்சோறு' என்று கூறுவர். அதனைக் குழந்தைகளுக்கு ஊட்டி விடுவர். இதில் எவ்விதச் சடங்கும் இல்லை.

சேர்வராயன்மலையில் வாழும் மலையாளிகள், பெண்ணுக்குக் குழந்தை பிறந்தவுடன் தீட்டுக் கழிக்கும் சாங்கியம் செய்கிறார்கள். கர்ப்பம் தரித்த ஒன்பதாவது மாதத்தில் பெண்ணை, தாய் வீட்டுக்கு அழைத்து வருவார்கள். அப்பொழுது கட்டுச்சாதம் கட்டி வளையல் போட்டு அழைத்து வருவர். குழந்தை பிறந்த மூன்றாம் நாள் பட்டக்காரர் வீட்டைச் சுத்தம் செய்து தீட்டுக் கழித்து, அன்றே குழந்தைக்குப் பெயர் சூட்டுகின்றனர். குழந்தைக்கு அண்ணாமலையார், கரிய பெருமாள் கோயில்களில் மட்டுமே முடி இறக்குகின்றனர்.

சங்க இலக்கியங்களில், குழந்தை பெற்ற தாய் தீட்டுடையவளாகக் கருதப்பட்டாள். குறித்த நாட்களுக்குப் பிறகு

அத்தீட்டு (புலவுப் புனிறு) தீர்ந்து, சுற்றமொடு குளத்தில் நீராடி வருதலைப் பற்றி மதுரைக்காஞ்சி (600–603) கூறும். குழந்தை பெற்ற வீட்டில் ஐயவி பூசினர். தாய் நெய் பூசி நீராடிச் சடங்கு மேற்கொண்டாள் (நற்.40,370).

**பூப்பு**

மலையாளி இனப் பெண்கள் பூப்பெய்திவிட்டால் முதலில் அச்செய்தி தாய்மாமனுக்கும், பிறகு மற்ற உறவினர்களுக்கும் தெரியப்படுத்தப்படுகிறது.

பெண் ஆளானவுடன் தாய் மாமன் / மச்சான் வந்து சடங்கு செய்வான். ஊரில் அதற்கென ஒதுக்கப்பட்ட இடத்தில்தான் பூப்படைந்த பெண் தங்கவேண்டும். பெண் குடிசையில் மூன்று மாதங்கள் தனிமையில் வைக்கப்படுகிறாள். பூப்படைந்த பெண்ணுக்கு உணவு தனியாகக் கொடுக்கப்படுகிறது. அப்பெண் குடிப்பதற்குப் பால், நாட்டுக்கோழி முட்டை ஆகியவற்றைக் கொடுக்கின்றனர். உளுந்துக்கஞ்சி கொடுக்கின்றனர். உளுந்துக்கஞ்சி, பச்சரிசி, உளுந்து, பனைவெல்லம் கலந்த சுவையான உணவாகும். இந்த உளுந்துக்களி அல்லது கஞ்சி எல்லா இனத்தினராலும் பெண்ணுக்குக் கொடுக்கின்றனர். இவ்வுணவில் இரும்புச்சத்து அதிகமாக இருக்கிறது. இவ்வுணவு பூப்படைந்தப் பெண்ணுக்கு இரத்தப்போக்கினை ஈடுசெய்யும் விதமாகக் கொடுக்கப்படுகிறது.

தீட்டுக் கழித்த பின் வீட்டிற்கு அழைக்கப்படுவாள். பின்னர் பூப்படைந்த பெண் தங்கியிருந்த குடிசையினைப் பிரித்து அதனைத்

தீயிட்டு எரித்து விடுகின்றனர். அவள் அணிந்திருந்த ஆடைகளும் தீயிட்டு எரிக்கப்படுகிறது. பொதுக் கிணற்றில் குளித்தபிறகே வீட்டிற்குள் அனுமதிக்கப்படுகிறாள். வீட்டு எல்லையில் அவள் மீண்டும் ஒருமுறை குளித்த பின்னரே வீட்டிற்குள் சேர்த்துக் கொள்ளப்படுவாள். வீட்டிற்கு வந்த பெண்ணை அலங்கரிக்கின்றனர். தற்போது பிராமணர்களை வைத்துச் சடங்கு செய்கின்றனர். சடங்கு நிறைவு பெற்றவுடன் கறி விருந்து நடைபெறுகிறது.[10]

மாமன் மகன், அத்தை மகன் உரிமைப் பையன் இவர்களில் யாராவது ஒருவர் பெண் வீடு செல்வர். பெண்ணை உறுதிப்படுத்தப் பையனின் தந்தையும், பெரியவர்களும் பெண் வீடு செல்வர். கவுண்டன் கரைகாரன் இருக்க திருமணம் உறுதிப்படுத்தப்படுகிறது.

சேர்வராயன்மலை மலையாளி பெண் பூப்பெய்திவிட்டால், "ஊருக்குப் பொதுவானதாகக் கட்டப்பட்டிருக்கும் சிறுவீட்டில் கொண்டு வந்து விடுவார்கள். பின்பு 9ஆம் நாள் வீட்டுக்கு அழைப்பர். வீட்டில் வெளித் திண்ணையின் மீது மூன்று நாட்கள் தங்க வைப்பர். நாலாம் நாள் தண்ணி ஊத்தி வீட்டுக்கு அழைப்பர். அன்று மட்டும் மிக நெருங்கிய சொந்த பந்தத்திற்குக் குழிப்பணியாரம் செய்து போடுவர். ஆளான சமயத்தில் அப்பெண்ணுக்குக் 'கவுச்சி' (அசைவ உணவு) தர மாட்டார்கள்"[11] என்கிறார் பிரேமா ரத்தினவேல்.

குன்னுவர் என்னும் பழங்குடியினர், பாலிக்கம் (பூப்பு) ஆகும் வரை பெண்கள் நகையோ மலரோ அணியக்கூடாது. குங்குமம்

வைக்கக் கூடாது. மஞ்சள் பூசக் கூடாது. பூப்பெய்தியதும் பெண் தாய்மாமன் கட்டிய குடிசையில் குறைந்தது ஒன்பது நாட்கள் இருப்பாள். தீட்டுச் சடங்கின் போது மஞ்சள் குளித்து வீட்டுக்கு அழைப்பர். தாய்மாமன் மகன் பல மலை கடந்து பாறையில் பூக்கும் அரிய நுணர்மாலையைக் கொண்டு வருவான். அதனை வீட்டைத் தாங்கும் நிலைமரமான நடைமரத்திற்கு அணிவிப்பர். நடைமரம் புனிதமரம், பின் மாமன் மகனுக்குப் பால்சோறு அளிக்கப் பெறும்.

**திருமணச் சடங்குகள்**

சங்க இலக்கியங்கள், தமிழர்தம் மணச் சடங்குகளை (அகம்.86,136) பதிவு செய்துள்ளன. இச்சடங்குகளை முதன்மைச் சடங்குகள், துணைமைச் சடங்குகள் எனப் பகுத்து விளக்க முடியும்.

இன்றியமையாதனவாகக் கருதப்படும் சடங்குகள் முதன்மைச் சடங்குகள் ஆகும். இச்சடங்குகள் மூலமே திருமணம் உறுதி செய்யப்பெறும். முதன்மைச் சடங்குகளாக,

அ. மங்கல நீராட்டி மலரும் நெல்லும் சொரிந்து வாழ்த்துதல்.

ஆ. சிலம்பு கழித்தல்

இ. கூந்தலில் மலரணிதல்

ஈ. வெண்ணூல் சூட்டுதல்

உ. முன்கை பற்றுதல்

ஊ. புதுச்சோறு சமைத்தல்

என்பவை இடம் பெறுகின்றன. இவற்றுள் மங்கல நீராட்டி மலரும் நெல்லும் சொரிந்து வாழ்த்தும் முறை தென்னிந்தியப்

பழங்குடியினரிடம் காணப்படுகிறது. முக்கியமாக இந்து மலையாளிகளிடம் இச்சடங்கு முறை வழக்கில் உள்ளது.

**அ. மங்கல நீராட்டி மலரும் நெல்லும் சொரிந்து வாழ்த்துதல்**

மங்கல நீராட்டி மலரும் நெல்லும் சொரிந்து வாழ்த்துதலே தமிழர் மணமுறையாகும். அதனைச் சங்க இலக்கியங்கள் உணர்த்துகின்றன. பெண்டிர் உச்சிக் குடத்தராய் நீரினைக் கொணர்ந்து தர அதனைப் புதல்வனைப் பெற்ற வாலிழை மகளிர் நால்வர் கூடி அலரியும் நெல்லும் தூவி மணமக்களை மங்கல நீராட்டி வாழ்த்துகின்றனர். இந்நிகழ்ச்சியோடு திருமணம் நிறைவுற்றது என்பதை, '**வதுவை நன்மணம் கழிந்த பின்றை**' என்ற தொடராட்சி குறிப்பிடுகிறது. இச்சடங்கு இந்து மலையாளிகளிடமும் காணப் பெறுவது குறிப்பிடத்தக்கது.

**பழங்குடியினர் மணச் சடங்கில் மங்கல நீராட்டல்**

மங்கல நீராட்டல் என்னும் சடங்கு தமிழருக்குரிய சடங்காகும். இதனைப் பழங்குடிகளிடம் காணலாகும் மணச் சடங்கு முறைகளைக் கொண்டு பழங்குடிகள் தமிழ்ப் பண்பாட்டின் எச்சங்கள் என்பதை அறியலாம்.

'உதயர்' என்ற பழங்குடியினர்தம் மணச்சடங்கு குறிப்பிடத்தக்கது. மணமகனுக்கு நெருங்கிய உறவினர்களை மணமான பெண்கள் மூவர் இசைவாணர்களுடன் ஓர் அருவிக்குச் செல்வர். அங்கு பூசாரி பூசை செய்த பின்னர்த் தும்பை இலைகளால்

அணி செய்யப் பெற்ற மூன்று பானைகளில் நீர் முகந்து ஊர்வலமாக மணமேடைக்குக் கொண்டு வருவர். மணமேடையில் வைக்கப் பெற்றிருக்கும் மூன்று பாத்திரங்களில் மும்முறை அம்மூவரும் நீரினை ஊற்றுவர். மணமகன் உடன்பிறந்தானோடு மணப்பந்தலைச் சுற்றி வந்த பின்னர் பந்தலில் நுழைந்து அந்நீரில் குளிப்பான்.

மிகச் சிறந்த தமிழைப் பேசும் 'பிளிம்மகார்' என்ற இனத்தவரது மணச்சடங்கு வருமாறு: மணநாளன்று காலையில் மணமகளின் தந்தை ஒரு குடத்தில் நீரைச் சுமந்து வர மணமகன் இல்லத்திற்குச் செல்வர். இக்குடத்திலிருந்து பெண்கள் ஐவர் சிறு கலத்தில் நீரினைப் பெறுவர். பின் இந்நீரால் மணமகனை நீராட்டுவர். இச்சடங்கு மரியாதை நீரு என்று அழைக்கப் பெறும்.

'பாவுரியர்' என்ற இனத்தின் மணமக்கள் மணநாளுக்கு முதல்நாள் மாலை ஊரில் உள்ள தாகுராணி கோயிலுக்குச் சென்று திரும்புவர். திரும்பும் போது தம் சாதி அல்லது உயர்ந்த சாதியைச் சேர்ந்த ஏழு வீடுகளுக்குச் சென்று தண்ணீரைப் பெற்று வந்து அதனை, மணப்பந்தலில் தொங்க விடுவர். மறுநாள் காலை மணமக்கள் அந்நீரில் குளிப்பர்.

'பேடர்' அல்லது 'போயர்' என்ற இனத்து மக்கள், மஞ்சளும் சுண்ணாம்பும் பூசப்பெற்ற நான்கு பானைகளை வைத்து ஒன்பது சுற்றுகள் நூல் சுற்றுவர். இது ஈரணிச் சதுரம் எனப்படும். அவ்வாறு சுற்றப் பெற்ற நூல்களுக்கு நடுவே மணமகனும் சிறுமிகள் இருவரும் அமர்வர். அவர்கள் மீது அரிசி தூவப் பெற்று எண்ணையும் தலையில் வைக்கப் பெறும். 'பூகூமத் தோரு' எனப்படும் மகளிர் ஐவரால்

அவர்கள் நீராட்டப் பெறுவர்.

'பில்லவர்' என்ற இனத்து மணப் பெண்ணின் நெருங்கிய உறவினரான மகளிர் சிலர் ஊர்க் குளத்திற்கோ, பூதஸ்தானம் அல்லது கரிடியின் அருகே உள்ள கிணற்றுக்கோ சென்று மட்குடங்களில் நீர் கொணர்வர். அந்நீரைக் கொண்டு மணமகளை நீராட்டுவர்"(12) என்பர் சிலம்பு நா.செல்வராசு.

தோதவர் இனத்துத் திருமணம் எளிமையானது. சிறுவர்களாக இருக்கும் போதே திருமணம் நிச்சயிக்கப்படுகின்றது. பையனின் பெற்றோர் பெண்ணின் பெற்றோரைச் சந்தித்துப் பேச்சைத் துவக்குகிறார்கள். துணிகளை மாற்றிக் கொள்வதின் மூலம் திருமண ஒப்பந்தம் செய்யப்படுகின்றது. அதன் பிறகு பையனின் பெற்றோர் ஒவ்வொரு ஆண்டும் பெண்ணின் வயதிற்குத் தக்கவாறு பாவாடை சட்டையில் இருந்து புடவை வரை அந்தப் பெண் வயதிற்கு வந்து தன் மகனுடன் வந்து சேரும் வரைப் பரிசாக அளிக்க வேண்டும். பையனுடைய பெற்றோர்கள் ஒரு குறிப்பிட்ட அளவு எருமைகளைப் பெண்ணின் குடும்பத்திற்குப் பரிசாக அளிக்க வேண்டும். மண உறவைக் கணவனோ மனைவியோ யார் விரும்பினாலும் முறித்துக் கொள்ளலாம். பெண்ணால் மணமுறிவு ஏற்பட்டால் பெண் வீட்டார் மணமகன் வீட்டாருக்கு எருமைகளைத் திருப்பித் தரவேண்டும்.

**குறும்பர்களின் மணச் சடங்கு முறைகள்**

நீலகிரியில் மூவகைக் குறும்பர்கள் வாழ்கின்றனர். அவர்கள் முள்ளுக்குறும்பர், பெட்டக்குறும்பர், தேனுக்குறும்பர்

என்போராவர்.

**முள்ளுக்குறும்பர்கள்**

பொதுவாக ஒரு மணமகன் தன் தாய்மாமனின் மகளையோ அல்லது தகப்பனாரின் சகோதரியின் மகளையோ திருமணம் செய்து கொள்வது தென்னிந்தியாவில் எல்லா சாதி, மதத்தினரிடையே காணப்படும் திருமணமுறையாகும். இத்தகைய திருமண முறையை முற்றிலுமாகப் புறக்கணிக்கின்றனர். இவர்கள் பெரும்பாலும் கேரள மாநிலத்தில் வயநாடு பகுதியில் நெடுந்தூரம் சென்று பெண் எடுக்கின்றனர். திருமணச் சடங்குகள் மூன்று அல்லது நான்கு நாட்கள் நடைபெறும். திருமணத்திற்கு இரண்டு நாட்களுக்கு முந்திய தினத்தை 'பெந்துவா' என்று கூறுவார்கள். திருமணத்திற்கு முன் மணமக்கள் காதில் அணிந்துள்ள பீலியை அகற்றிவிட்டு, காதலா என்ற அணிகலன் அணிய வேண்டும். திருமணத்திற்குப் பின் மூன்றாம் நாள் இதனைக் கழற்றிவிட வேண்டும். முள்ளுக் குறும்பர்களின் திருமணச் சடங்குகளானது அவர்கள் வாழும் பகுதியின் தன்மை, பாராம்பரிய தொழில் மற்றும் திருமண முறை ஆகியவற்றின் அடிப்படையில் அமைந்திருக்கிறது.

**தேனுக்குறும்பர்**

தேனுக்குறும்பர்களிடையே இரண்டு வகையில் திருமணங்கள் நடைபெறுகின்றன. அவை: 1.ஒழுங்கு செய்யப்பட்ட திருமணம். 2.விருப்பத் திருமணம் என்பதாகும். பெரியவர்களாலும், பெற்றோர்களாலும் நிச்சயிக்கப்படுகின்ற திருமணம் ஒழுங்கு

செய்யப்பட்ட திருமணம். வயது வந்த ஆணும், பெண்ணும் ஒருவருக்கொருவர் விரும்பி மணம் செய்து கொள்ளுதல் விருப்பத் திருமணமாகும்.

ஓர் ஆணும் ஒரு பெண்ணும் கணவனும் மனைவியுமாக வாழ விரும்பினால் இருவரும் காட்டில் நெடுந்தூரம் சென்று தூரத்திலுள்ள ஏதாவது பாடியில் சென்று குடும்ப வாழ்க்கையை ஆரம்பிப்பார்கள். இவர்கள் பெற்றோரின் ஒப்புதலில்லாமல் செல்வதால் தங்களின் பாடியிலிருந்து வெளியேற்றப்படுவார்கள். இவ்வாறு சென்றவர்களுள் சிலர் குறைந்தது மூன்று மாதங்களுக்குப் பின் திரும்பி வருவது வழக்கம். அவ்வாறு வந்தால் முதலில் பாடியின் தலைவரிடம் மன்னிப்புக் கேட்டுப் பின்னர் அவர்கள் கடவுளின் காலைப் பிடித்து வழிபாடு நடத்திய பின்னர்தான் பாடியில் ஏற்றுக் கொள்வார்கள். இவ்வாறு விருப்பத் திருமணம் செய்து கொள்வதை 'எறுத கெட்டுது' என்று இழிவாகக் கூறுவார்கள். இவர்களிடம் விவாகரத்தும், மறுமணமும் காணப்படுகிறது.

**பெட்டக் குறும்பர்கள்**

பெட்டக் குறும்பர்கள் தாயின் சகோதரனின் மகள் மற்றும் தகப்பனின் சகோதரியின் மகள் ஆகியோரைத் திருமணம் செய்து கொள்கின்றனர். இவர்களின் திருமண முறை எளிமையானதாகக் காணப்படுகிறது. திருமணத்தின் போது மட்டுமே தாலிக்கு முக்கியத்துவம் அளிக்கின்றனர். திருமணமான பெண்கள் எப்போதும் தாலி அணிந்திருக்க வேண்டும் என்ற கட்டாயமில்லை.

திருமணத்திற்குப் பிறகு தாலியைக் கழற்றி வைத்துவிடுவது வழக்கம். பெட்டக்குறும்ப சமுதாயம் திருமண முறையில் பல மாறுதல்களை அனுமதித்தாலும், வேறு பழங்குடி மக்களோடோ அல்லது வேறு சாதி, மதத்தினரோடோ திருமண உறவு கொள்வதை வன்மையாகக் கண்டிக்கிறது. மறுமணம், விதவைத் திருமணம் இவர்களிடையே காணப்படுகிறது.(13)

குறும்பர்களில் பெட்டக் குறும்பரே விருப்பத் திருமணங்களை மிகுதியாகச் செய்து கொள்கின்றனர். இம்மணமுறை முள்ளுக் குறும்பரிடைக் குறைவாகவும், தேனுக் குறும்பரிடையே சற்றே மிகுந்தும் காணப்படுகின்றன.

**குன்னுவர் மணச்சடங்கு முறை**

கொடைக்கானல் மலைத்தொடர்களில் வாழும் குன்னுவர் மணச்சடங்கு எளிமையாகவும், வேறுபாடு உடையதாகவும் காணப்படுகிறது. “பெண் மூத்தவளாக இருந்தாலும் முறைப் பெண்ணைக் குன்னுவ இளைஞன் மணக்கிறான். மாமன் மகள் பலரை ஒருவனே மணக்கும் வழக்கமும் உண்டு. சகோதரன் இறந்தால் அவன் மனைவியரைப் பிற சகோதரர் மணப்பதும் உண்டு. இதனால் நிலம் பிரிவது தவிர்க்கப்படுகிறது. மனம் ஒன்றுபட்ட ஆணும் பெண்ணும் ஊரைவிட்டுச் சிலநாள் ஓடிவிடுவதும் உண்டு. அவர்கள் வந்தபின் கன்னிக்கு 60 பணமும் விதவைக்கு 30 பணமும் அபராதம் விதித்துத் திருமணம் செய்விப்பர். திருமண நிச்சயத்தன்று இரு வீட்டாரும் புதுநெல் குத்தி மொச்சைப் பருப்புடன் நெய்ச்சோறு

(பருப்புச் சோறு) ஒரே வெண்கல வட்டிலில் உண்பர். பின் அதே வட்டிலில் வெற்றிலை பாக்கும் வைப்பர். பெரியவர்கள் மணமகன், மணமகள் தலையில் பால் தேய்ப்பர். வீட்டு மனையில் சடங்குகள் நடைபெறும். கைப்பிடிச்சவன் என்பவன் பெண்ணின் தாயாதி ஆவான்.

ஒரு குடும்பத்தில் ஆண் வாரிசு இல்லாமலும், அந்த வீட்டுப் பெண்ணை மாமன் மகன் மணக்காமலும் போனால் இறந்து போன முறைக்காரர் ஒருவரின் பெயரைச் சொல்லிவிட்டு நடைமரத்திற்குத் திருமணம் செய்விப்பர். அவள் யாரோடும் கூடிப் பிள்ளை பெறலாம். அப்படிப் பிறக்கும் ஆண் குழந்தை அவ்வீட்டின் வாரிசாகும். இப்படிப்பட்ட பெண்கள் வலக்கரத்தில் வெள்ளி வளையல் அணிவர். மணமுறிவைத் தீர்த்துக்கட்டுதல் என்பர். ஒரு சோடி எருது அல்லது ஒரு வட்டிலை கொடுத்துக் கணவனும், பரியத்தொகை அல்லது தங்கநகை கொடுத்து மனைவியும் எளிமையாக மணவிலக்குப் பெறலாம். பின்னர் விரும்பியவர்களை மணக்கலாம்”[(14)] என்பர்.

**படகரின் மணவிலக்கும் மறுமணமும்**

படகர்களிடையே மறுமணம் செய்து கொள்ளும் பழக்கமும் உள்ளது. மனைவியை இழந்தவர்களும், விதவைகளும் மறுமணம் செய்து கொள்ளலாம். மணவிலக்கு ஆண், பெண் ஆகிய இருபாலருக்கும் ஏற்புடையதே. இவர்களுக்குள் ஒருவருக்கு மற்றவரைப் பிடிக்காவிட்டால், தங்கள் சாதியைச் சேர்ந்த வயதிற் பெரியவர்களான ஜாத்திகளிடம் சென்று தங்கள் குறையைத்

தெரிவிப்பார்கள். அவர்களும் விசாரித்து சட்ட நுட்பங்களை ஆராய்வதில் சிக்கிக் கொள்ளாமல், மனிதநேயத்துடன் தீர்ப்பு வழங்குவார்கள். இருவரும் ஒத்துப்போக முடியுமா என்று பார்க்கவும், அவர்களுடைய கோபதாபங்களும், ஆத்திரப்பட்ட உணர்ச்சிகள் குறையவும் கால அவகாசம் அளிக்கிறார்கள். அதன் பின்னரும் இருவரும் ஒத்துப் போகவில்லையெனில், மணவிலக்கிற்கு வழி செய்து தீர்ப்பு வழங்குகிறார்கள். மணவிலக்குப் பெறுவதற்கும், படகர் இன மக்கள் சடங்கு முறைகளைப் பயன்படுத்துகின்றார்கள். கணவன் அல்லது அவன் வீட்டார் இருவரும் சேர்ந்து வீட்டுக் கூரையின் ஒரு சிறு பகுதியைப் பிரித்துக் கையில் எடுத்து, மனைவி வீட்டாரிடம் கொடுப்பார்கள். இச்செயல் கூரை பிரிந்தது போல், கணவனும் மனைவியும் பிரிந்து விட்டதை மறைமுகமாகக் குறிக்கிறது. குழந்தைகளை ஏற்று வளர்க்கும் பொறுப்பு தந்தையைச் சேரும். ஆனால் தற்பொழுது மறுமணம் செய்யும் முறையும், மணவிலக்கும் அருகியே காணப்படுகிறது என்கிறார்கள்.

**இந்து மலையாளிகளின் மணச்சடங்கு முறைகள்**

ஊருக்குக் கிழக்கே கோயில் இருந்தால் திருமணம் வீட்டிலேயே நடைபெறும். ஊருக்கு மேற்கே கோயில் இருந்தால் திருமணம் வீட்டிற்கு அப்பால் நடைபெறும். பெண் உடன் பிறந்தான் கத்தி பிடித்துக் கொண்டு மண வீட்டின் முன் நிற்பான். திருமணம் முடிந்த பின் மணப்பெண் பிறந்தவனைக் கும்பிடுவாள். பிறந்தவனுக்குச் சிறப்புச் செய்து வீட்டின் உள்ளே அழைத்துச் செல்வர்.

மணப்பெண்ணை அழைத்து வரும்போது ஊரின் எல்லையில் கவுண்டன் சம்சாரம் ஆரத்தி எடுத்துப் பொட்டு வைப்பாள். அப்பொழுது பெண் வீட்டார் ஆரத்தித் தட்டில் பணம் போடுவர். இந்தக் காசு கவுண்டன் மனைவியைச் சேரும். வழியில் எத்தனை கிராமங்கள் இருந்தாலும் அத்தனை கிராமத்திலும் அந்தந்தக் கிராமக் கவுண்டன் மனைவி வந்து இந்தச் சடங்கு செய்வாள். அதன் பின்னரே மணப்பெண் அந்தக் கிராமத்தைக் கடந்துசெல்வாள்.

நெல்லைப் பரப்பி, அதன் மேல் பலகையைப் போட்டு, அதன் மீது வேட்டியை விரித்து மனைப்பலகை அமைப்பர். (சங்ககால மரபு) சில இடங்களில் கவுண்டன் தாலி எடுத்துக் கொடுக்க, மாப்பிள்ளை சாமியைக் கும்பிட்டு தாலியை பெண்ணின் கழுத்தில் வைக்க கவுண்டன் மனைவி முடிச்சுப் போடுவாள். முதலி, கவுண்டன், கரைகாரன், ஐயன், தண்டல்காரன் ஆகியோர் வெற்றிலை, அருகம்புல், மஞ்சள் கலந்த ஆரத்தித் தட்டில் காசு போட்டு, 'ஆல்போல் தழைத்து அருகுபோல் வேரொடி' எனச் சொல்லி வாழ்த்துவார்கள். வாழ்த்தியவர்களுக்கு உறவுமுறையினர் சந்தனப்பொட்டு வைப்பர். முதலி, கவுண்டன், கரைகாரன் ஆகியோருக்குத் தாலி முடிச்சுக் கூலியாக 6.25 ரூபாயும் மூணு கொத்துச் சோறும் கொடுப்பது வழக்கம். தற்பொழுது சில கிராமங்களில் சோற்றுக்கும் சேர்த்து ரூ. 25/- வரை பணமாகக் கொடுத்து விடுகின்றனர். மாப்பிள்ளைக்கு மாமன்காரன் தலைப்பட்டம் கட்டும் பழக்கம் கொல்லிமலை ஏழுநாட்டில்

இருக்கிறது. ஐந்து நாட்டில் இல்லை. திருமணத்தன்று இரவு கூத்து நடைபெறும். விவாகரத்து எந்தச் சடங்கும் இல்லாமல் தாலியைக் கழற்றிக் கொடுப்பதோடு அமைகிறது. பெண்ணோ, ஆணோ விவாகரத்துக் கோரிப் பெற முடியும்.

கொல்லிமலை மலையாளிகளின் சமூக வாழ்வு குறித்துக் குறிப்பிடும் ப.கோமளவல்லி, 'கொல்லி மலையாளிகளின் திருமணத்தில் ஊர்க்கவுண்டன் முன்னிலையில் பரிசம் போடப்படும். அதிக வயதானப் பெண்ணும் மறுமணம் செய்து கொள்ளலாம். ஒரு விதவை மறுமணத்தை மறுத்தால் கிராமப் பூசாரி அவளைத் தன்னுடன் வாழ அழைப்பதுண்டு. இதைத் தவிர்க்கவே பெண்கள் மறுமணத்தை ஒப்புக் கொள்வர்' என்கிறார்.[(15)]

திருமணமான பெண் பழங்குடி கிளை இனத்தைச் சார்ந்த யாருடனும் உறவு கொள்ளலாம். இதை மறுக்கும் பெண் ஊர்ப் பஞ்சாயத்தால் விலக்கி வைக்கப்படுவார்கள். உரிமைப் பெண் ஒருத்தி தன்னைவிட வயதில் மிகவும் இளையவனை மணந்து கொள்ளலாம். ஒரு பெண் எவ்வளவு முறை வேண்டுமானாலும் திருமணம் செய்து கொள்ளலாம். அவளுடைய எல்லா குழந்தைகளையும் அவளுடைய தற்போதைய கணவனே பராமரிக்க வேண்டும்.

கொல்லிமலை ஐந்துநாட்டுப் பகுதியில் உள்ள மலையாளிகளின் திருமணச் சடங்குகள் மூன்று நாட்கள் பெண் வீட்டில் நடைபெறும். முதல்நாள் திருமணம் நிச்சயிக்கப்பட்டு,

நிச்சயதார்த்தம் நடைபெறும். இரண்டாம் நாள் தாலி கட்டும் நிகழ்ச்சி நடைபெறும். மூன்றாம் நாள் உறவினர்களுக்குக் கறி விருந்து நடைபெறும். முன்பு பித்தளையில் தாலி அணிந்தனர். மாப்பிள்ளையின் கையில் காப்பு கட்டுதல் உண்டு. தற்போது தங்கத்தில் தாலி அணிகின்றனர்.[16]

இவர்களின் மணச் சடங்கின் போது, மாப்பிள்ளை தாலி கட்டி முடித்தபின், மணமகள் செம்பில் தண்ணீர் கொண்டு சென்று அருகிலுள்ள கிணற்றுக்குள் அத்தண்ணீரை ஊற்ற வேண்டும். தண்ணீருக்குள் வெற்றிலை இருக்கும். திருமணத்தை ஊர்க் கவுண்டர் அல்லது தண்டார் வைத்து நடத்துகிறார்கள். சிலர் பிராமணர்களை வைத்தும் மணச் சடங்கு நடத்துதல் உண்டு. சில ஊர்களில் கோயிலில் வைத்தும் திருமணம் நடைபெறும். அச்சமயத்தில் பிராமணர்களே முக்கிய இடம் பெறுகின்றனர். பூப்பெய்திய குறுகிய காலத்திலேயே திருமணம் நிச்சயிக்கப்பட்டுவிடும். பெரும்பாலும், அரசு விதிகள் கடைபிடிப்பதில்லை. திருமணம் முடிந்த ஒரு வாரத்திற்குப் பின் தாலி பெருக்கிப் போடும் நிகழ்ச்சி தற்போது பழக்கத்தில் உள்ளது. வரதட்சணை வாங்குவதும் இல்லை; கொடுப்பதும் இல்லை. அவரவர் வசதிக்குத் தக்கபடி பெண்ணிற்குச் சீர் செய்கின்றனர். முன்பு கால்நடைகள் வழங்கப்பட்டதைப் போன்று தற்போது கொடுப்பது கிடையாது என்கின்றனர்.[17]

**சேர்வராயன்மலை மலைநாடர்களின் மணச் சடங்குகள்**

ஒரு காலத்தில் மூன்று அண்ணன் தம்பிகள் சேர்வராயன்மலை,

கொல்லிமலை, பச்சைமலை ஆகிய மூன்று மலைப்பகுதிகளுக்கும் பிரிந்து சென்று வாழ்க்கையை மேற்கொண்டுள்ளனர். அவர்களின் சந்ததியினரே இன்றைய நிலையில் அவ்வவ் மலைகளில் வாழ்ந்து வருகின்றனர். இம்மூன்று மலைகளில் வாழும் மக்களும் தங்களுக்குள் கொண்டு கொடுத்துக் கொள்ளுதல் உண்டு.

**மணச் சடங்கு**

மலைநாட்டார்களிடையே உறவுமுறைத் திருமணமே அதிகம். தற்போது இக்கட்டுப்பாட்டில் இருந்து வெளிவந்து விட்டனர். இந்த மாப்பிள்ளைக்கு இந்தப் பெண் என்று பேச்சு உறுதியானவுடன் 10 நாளில் திருமணத்தை நடத்தி விடுகின்றனர். திருமண நாளுக்கு முன்பு எட்டாம் நாளில் மாப்பிள்ளை வீட்டார் பெண்ணுக்குப் பாரியம் போட்டு உறுதி செய்து கொள்கின்றனர். வெற்றிலையை மாற்றி மாற்றி அடுக்கி, பாக்கு வைத்து இவ்வுறுதி செய்யப்படுகிறது. இப்பரியம் போடும் சடங்கு ஊர்க்காரர்கள் முன்னிலையில் நடக்கும். இதை முன்னின்று நடத்துபவர் பட்டக்காரர் ஆவார். இவர் இம்மலைவாழ் மக்களுக்குப் பூசாரி போன்றவர். பெண்ணுக்குப் பரியம் போடும் போது மாப்பிள்ளை, பெண் இருவருமே அந்த இடத்தில் இருப்பர்.

திருமணத்திற்கு முதல்நாள் மாலை பெண்அழைப்பு திருமணத்தில் தாலி கட்டுதல், கங்கை காட்டுதல், பலாமர சாத்திரம் என்ற மூன்று சடங்குகள் நடைபெறும்.

தாலி கட்டும் சடங்கு முடிந்த பின்பு, பெண் மாப்பிள்ளை

இருவரையும் குடைபிடித்து, ஊர்வலமாக அழைத்து வந்து பலாமரத்தடியில் உட்கார வைப்பார்கள். அப்பொழுது வழியெல்லாம் ஊர்ப்பெண்ணைப் பாடல் பாடி, ஆலம் கரைப்பார்கள். பெண்ணை மட்டும் அருகில் உள்ள கிணற்றுக்கோ, ஆற்றுக்கோ அழைத்துச் செல்வர். அங்கு பெண்ணை ஒரு குடத்தில் நீர் மொண்டுவரச் செய்து, அதைக் கங்கை அம்மனாகப் பாவித்து, அதற்குப் பூ வெற்றிலைபாக்கு வைத்து வணங்கச் செய்வர். இச்சடங்கே கங்கை காட்டுதல் என வழக்கில் கூறப்படுகிறது.

அந்நிகழ்விற்குப் பின்னர் பெண்ணைப் பலா மரத்தடிக்கு அழைத்து வந்து மாப்பிள்ளையுடன் உட்கார வைப்பர். பெண்ணும் மாப்பிள்ளையும் ஒரு கூடையில் உள்ள அரிசியைத் தங்கள் இரண்டு கைகளையும் இணைத்து அளப்பர். அப்போது,

> பொண்ணு வல்லம் கைப்பிடித்து
>
> பொறுமுபடி அளங்கும்
>
> தங்கவல்லம் கைப்பிடித்து
>
> தருமுபடி அளக்கும்.

எனப் பாடுகின்றனர். (பொறுமுபடி - பொறுமையுடன் படி, அளங்கும் - அளக்கும், தருமுபடி - தரும முறைப்படி).

இச்சடங்கு முறை, பெண் வாழ்க்கையில் பொறுமையையும், தருமத்தையும் கடைப்பிடித்து வாழ வேண்டும் என்பதையும் வீட்டுக்கு வரும் பெண்ணின் கைப்பட்டுத் தானியம் செழிக்க வேண்டும் என்பதையும் உணர்த்துகிறது. பலாமரம் அவர்கள்

நிலத்திற்குரிய மரம், பல்லாண்டு பயன்தருவது, பலாமரச்சாத்திரம் முடிந்தவுடன் அங்கேயே மொய் எழுதுகின்றனர். பின்னர், ஊர் விருந்து நடைபெறுகிறது.

ஊர் விருந்தின் போது, மக்கள் வட்ட வட்டமாக நெருங்கி அமர்ந்து கொள்கின்றனர். வாழை இலைகளை குறுக்காகப் போடாமல், நீள நீளமாகப் போட்டுக் கொள்கின்றனர். மாப்பிள்ளை வீட்டார் முன்நின்று, பெண் வீட்டாரை வணங்கி விருந்தை ஏற்றுக்கொள்ளுமாறு வேண்டுகின்றனர். பின்பு அவரவர்களே எடுத்துப் போட்டுக் கொண்டு சாப்பிடுகின்றனர். மூன்றாம் நாள் பெண் வீட்டு விருந்து. அத்துடன் திருமணச் சடங்குகள் முடிந்து விடுகின்றன.

மலைநாடர் பெண் தனக்குக் கணவனைப் பிடிக்காவிட்டால் உறவை முறித்துக் கொள்ளலாம். அப்பொழுது அவள் ஊர்த் தீர்வை செலுத்த வேண்டும். ஒரு ஆண், தன் மனைவி பிடிக்கவில்லை என்றால், ஊர் மன்றத்தைக் கூட்டி, ஊர்த்தீர்வை செலுத்திப் பிரிந்து கொள்ளலாம். அவனே விலகுவதால், பெண்ணிற்கு அவன் கொடுத்த பரியப்பணம் திரும்பப் பெற முடியாது. குழந்தைகள் இருந்தால் அவர்களை அவன் ஏற்றுக்கொள்ள வேண்டும். மனைவியிடத்து அனுப்பினால் அக்குழந்தைக்குச் சேரவேண்டிய சொத்தை அப்பொழுதே பிர்த்துத் தரவேண்டும். சொத்து இல்லாத நிலையில் ஜீவனாம்சம் தரவேண்டும். மணமுறிவு ‘துரும்பு அறுத்தல்’ எனப்படும்.(18)

**கத்திரிமலைப் பழங்குடி மக்களின் திருமணச் சடங்கு**

கத்திரிமலை அடிவாரத்தில் உள்ள மலையாளப்பட்டியில் வாழும் பழங்குடிகள், மகனுக்குத் திருமணம் செய்ய விரும்பினால், ஊர்க்கவுண்டருக்கு அறிவிக்க வேண்டும். எந்த ஊரில், எந்தக் குடியில் பெண் இருக்கிறது என்பதை அறிந்து சொல்ல வேண்டும். ஊர்க்கவுண்டர் ஒரு தடியினை வழங்குவார். பெண் பார்க்கச் செல்லும் போது முன்னால் செல்பவர் அந்தத் தடியை முன்னால் எடுத்துச் செல்ல வேண்டும். ஒரு சுரைக்குடுகையில் நீரை நிறைத்து அதனையும் எடுத்துச் செல்ல வேண்டும். அவை இல்லாமல் சென்றால் செல்லும் ஊருக்குச் செய்வித்த அவமானமாகக் கருதப்படும்.

'தடி' தன் ஊர்த்தலைவனிடம் வெளியூர் சென்று பெண் பார்க்கப் பெற்றுக் கொண்ட அனுமதி ஆகும். சுரைக்குடுக்கை நீர், பெண் வீட்டாரிடம் தாங்கள் அன்பு காட்ட கொண்டு வந்த சீர் என்கின்றனர்.[(19)]

மணமகன் இல்லத்தில் திருமணம் நடைபெறும். ஊர்த்தலைவர் மங்கலநாணை எடுத்து மணமகன் கையில் கொடுக்க, மணமகன் மணமகளின் கழுத்தில் கட்டுவார். ஆண்களும் பெண்களும் சேர்ந்து மணமக்களை வாழ்த்திப் பாடுவர்.

**சவ்வாதுமலையின் மலையாளிகளின் மணச் சடங்கு முறைகள்**

சவ்வாது மலையில் கிழக்குப் பகுதியில் வாழும் மலையாளிகள்

காராளக் கவுண்டர் எனப்படுவர். மேற்பகுதியில் வாழ்பவர்கள் வேளாளக் கவுண்டர்கள் எனப்படுவர். ஒரு மலையாளி வாலிபன் ஒரு பெண்ணைத் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்றால், அவன் அந்தப் பெண் வீட்டிற்குச் சென்று சில மாதங்கள் வேலை செய்து வருவான். அவன் தங்களுடைய பெண்ணுக்கு ஏற்றவன் என்று தெரிந்து கொண்ட பெண்ணின் பெற்றோர்கள் அவனுக்குப் பெண் கொடுக்க ஒப்புதல் தெரிவிப்பர்.

**மற்றொரு மணமுறை:** ஒரு இளைஞன் ஒரு பெண்ணை வலிய அழைத்துச் சென்று வீட்டில் வைத்துக் கொள்வான். அந்தப் பெண் சிறிது காலம் அவனொடு வாழ்ந்துவிட்டு பெற்றோர் இல்லத்திற்கு வந்து விடுவாள். குழந்தை பிறந்திருந்தால், அந்தக் குழந்தையும் தாயுடன் வந்துவிடும். பிறகு, அவளை வேறொருவன் திருமணம் செய்து கொள்வான். இரண்டாவது கணவனுக்குப் பிறக்கும் அவளுடைய குழந்தைகளுக்கும் முதல் கணவனே எல்லா வசதிகளும் செய்ய வேண்டும். தற்பொழுது பெற்றோர்களே பார்த்துத் திருமணம் செய்து வைக்கும் முறையைப் பின்பற்றுகின்றனர்.

திருமணம் செய்வதற்கு முன்னர் பெண் வீட்டாருடன் மாப்பிள்ளை வீட்டார் பரிசம் என்ற ஒப்பந்தத்தைச் செய்து கொள்கின்றனர். திருமணம் மணமகன் வீட்டில் அல்லது மணமகள் வீட்டில் நடைபெறுகின்றது. மணமகள் வீட்டில் நடைபெறுவது தலகன்னி திருமணம். தலகன்னி மணத்திற்கு மாப்பிள்ளை வீட்டார் இருபது மரக்கால் அரசி, ஒரு பன்றி, விறகு கொண்டு செல்ல

வேண்டும். திருமணத்தின் முன் நாளில் அவற்றைச் சமைத்து விருந்து அளிப்பர். மணமகனின் தோழனைத் ‘தொமகாரன்’ என்றும் மணமகளின் தோழியைத் ‘தொமக்கார்ச்சி’ என்றும் அழைக்கின்றனர். திருமணம் நாட்டான் தலைமையில் நடைபெறும்.[20]

**இறப்புச் சடங்கு முறை**

எல்லா உயிர்களுக்கும் பிறப்பு என்று ஒன்றிருக்குமானால் இறப்பு என்று ஒன்று நேர்ந்தே தீரும். இருக்கும் வரை தூற்றினாலும், இறந்தபின் போற்றும் சமூகத்தில் வாழ்கிறோம். இறந்தவர் குற்றம் இழைத்தவராயினும், அவருக்கும் சடங்குகள் செய்தே புதைப்பதும்; எரிப்பதும் நடந்தேறுகிறது. பழங்குடிகளில் சிலர் பிணத்தை எரிப்பதும், சிலர் குழி தோண்டிப் புதைக்கவும் செய்கின்றனர்.

அக்காலத்தில் சிலர் பிணத்தைச் சுடுவர். வேறு சிலர் குழி தோண்டிப் புதைப்பர். சிலர், நிலத்துக்குக் கீழே தாழ்ந்த இடங்களில் அடைப்பர். சிலர் தாழியில் வைத்து மூடுவர் என்று அன்றைய முறைகளை,

**“சுடுவோர் இடுவோர் தொடுகுழிப் படுப்போர்**
**தாழ்வயின் அடைப்போர் தாழியிற் கவிப்போர்”**[18]

என்று மணிமேகலை குறிப்பிடுகிறது.

முதுமக்கள் தாழி குறித்தும் இறந்தவர்களைத் தாழியில் இட்டுப் புதைப்பது பற்றியும் சங்க இலக்கிய நூல்களான நற்றிணை(271), புறநானூறு(238,364), பதிற்றுப்பத்து(44), தக்கயாகப்பரணி(376),

குலோத்துங்கச் சோழ உலா ஆகியவை உரைக்கின்றன.

“கோண்டு என்ற பழங்குடிகளில் ஒரு பிரிவினர் கோயர். இவர் கோதாவரி, விசாகப்பட்டினம், ஸ்ரீகாகுளம் ஆகிய மாவட்டங்களில் வாழ்கின்றனர். தெலுங்கு பேசும் இத்திராவிடப் பழங்குடியினர் இறந்தவர்களை எரிப்பர்; எரிந்தவர் எலும்புகளைத் திரட்டி ஓர் இடத்தில் புதைப்பர். புதைத்த அவ்விடத்தில் ஒரு நடுகல்லை நட்டு வழிபடுவர் கதபர் என்ற பழங்குடிகள் ஆந்திராவில் வசிக்கின்றனர். பங்குனி மாதங்களில் விழா எடுப்பர். எருமைப் பலி கொடுப்பர்; இறந்தவர்களைப் புதைப்பர். புதைத்த இடத்தில் நடுகல் நடுவர்”[19] என்பர் க.ப.அறவாணன். இந்து மலையாளி இன மக்களில் நடுகல் நடும் வழக்கம் தற்போது இல்லை. சிறு சிறு கற்களை அடுக்கி வைத்து இறந்தவர்களை வணங்குகின்றனர்.[20]

“கசவர்கள், தமிழகத்து நீலகிரிப் பகுதியில் வாழும் பழங்குடியினர் இவர்களிடம் நடுகல் நடும் பழக்கம் இன்றும் உள்ளது. எவரேனும் இறக்க நேரின், இறந்தவர்தம் கால்களை வெட்டுவர். இப்பழக்கம் ‘குழவி இறப்பினும் ஊன்தடி பிறப்பினும் ஆளன்று’ என்று வாளில் தப்பாப் பண்டைய வழக்கின் எச்சம் போலும். பிணத்தைக் குழியினுள் இட்டு மூடி விடுவர். பெரிய பாறாங்கல்லைக் கொண்டு மூடுவர். அக்கல்லைக் கோட்டைக்கல் என்பர். இறந்த மூன்றாவது நாளன்று பிணத்தை வைத்த இடத்தில் ஒரு கல்லை நடுவர்; பூசை செய்வர். ஒவ்வொர் ஆண்டிலும் அங்கு ஆண்டு பூசை நிகழ்த்துவர். அன்றும் ஒரு கல்லினை நடுவர். அரிசிப்

பொங்கலிடுவர்; அதனைப் படைப்பர்; பூசை செய்வர்”[21] என்பர் சி.சே. செயதேவ், மு.இரகுபதி.

இருளர் என்ற பழங்குடியினர் இறந்தவர்களைப் புதைக்கும் வழக்கத்தினர். “புதைத்த இடத்தில் நடுகல் நடுவர். இருள இனத்தின் உட்பிரிவு ஒவ்வொன்றிற்கும் தனித்தனி நடுகற்கள் உள்ளன. பழைய காலத்தில் குடும்பத்தைச் சேர்ந்த அனைவரையும் இறந்தவுடன் ஒரே குழியில் புதைத்து வந்தனர். சில இடங்களில் ஆண்களுக்கு ஓரிடம். பெண்களுக்கு ஓரிடம் எனப் பிரித்துப் புதைப்பர். இத்தகு பழக்கமெல்லாம் இறப்பிற்குப் பிறகும் அவர் வாழ்கிறார் என்று கருதுவதின் அடிப்படையில் தோன்றியவை போலும்”[22] என்பர் க.ப.அறவாணன்.

**தோதவர்களின் மரணச் சடங்கு**

தொதவர்களின் மரணச் சடங்குகள் பல மாதங்களுக்கு நீடிக்கின்றன. இரண்டு விரிவான சடங்குகள் பசுமை இறுதிச் சடங்கு, உலர்ந்த இறுதிச்சடங்கு என்பன. இறந்தவருடைய அபிமானத்திற்குரிய எருமைகளும் அவனோடு செல்லாவிட்டால் இறந்தவர்களின் ஆவி அந்த இடத்தைவிட்டு நீங்காது என்பது நம்பிக்கை. எனவே, ஒருவன் இறந்துவிட்டால் அவனோடு தொடர்புடைய சொந்த உபயோகத்திற்கான எருமைகளையும் புனித காரியத்திற்கான எருமைகளையும் சேர்த்துப் பசுமை இறுதிச் சடங்கின்போது கொன்றுவிடுவார்கள். தற்போது, கொல்லப்படுகின்ற எருமைகள் குறைவு”[24] என்கிறார்

அர.பெரியாழ்வார்.

**கொல்லிமலை மலையாளிகளின் இறப்புச் சடங்குமுறை**

கொல்லிமலை மலையாளிகள் இறப்புச் சடங்கை ஊர்த் தலைவரை வைத்தே நடத்துகின்றனர். இறந்தவர்களைப் புதைப்பர். ஒடுக்கப்பட்ட மக்கள் இவர்களின் சவ ஊர்வலத்தில் மேளம் அடிக்கிறார்கள். இறந்தவர்களைத் தேர்கட்டி எடுத்துச் செல்வர். இம்மலையாளிகளுக்கு மேளம் (தப்பு) அடிப்பதற்கும், சவச் சடங்கு செய்வதற்கும் சேட்டூர் என்ற ஊரிலிருக்கும் ஒடுக்கப்பட்டவர்களே வருகிறார்கள். ஒவ்வொருவரின் வசதிக்குத் தக்கவாறு அவர்களுக்குக் கூலி கொடுக்கிறார்கள். ஒப்பாரி சொல்லி அழுகிறார்கள். துக்க நிகழ்ச்சிக்கு வந்தவர்கள், தங்களின் வசதிக்கேற்பப் பிணத்தின் மேல் ரூபாய் நோட்டுக்களை வைக்கின்றனர். இறப்பு வீட்டுக்கு வருபவர் நெல், எண்ணெய், ஒரு தேங்காய், மாலை, கோடி போன்றவைகளைக் கொண்டு வருவர். “கோடி என்றால் புதிய ஆடை”(23) என்று சிலப்பதிகாரம் கூறுகிறது. இறந்தவர் அணிந்த ஆபரணங்களை இடுகாட்டில் வைத்து எடுத்துவிடுகின்றனர். பிணத்தைப் புதைத்த மூன்றாம் நாள் கருமாதி, காடாத்து (காடு+ஆற்று) போன்ற நிகழ்ச்சிகளை நடத்துகின்றனர். சமவெளிப் பகுதியினரைப் போன்று ஆண் பிள்ளைகளுக்கு மொட்டை போடுவதில்லை. பெண்களும் கூந்தல் களைவதில்லை.

**சேர்வராயன் மலை மலையாளிகளின் இறப்புச் சடங்கு முறை**

பழங்குடிகளில் ஒருவர் இறந்துவிட்டால் ஊர்க்கவுண்டர்

*வீட்டுக்கு இவ்வளவு என தீர்வை வசூல் செய்வார். அது ஆளுக்கு ஆள் மாறுபடுவதில்லை. அப்பணத்தைக் கொண்டு ஈமச்சடங்குகள் நடத்தப்படும் ஒரு இறப்பு நேர்ந்தால் உடனே, அங்கு ஒரு வெடி வெடிப்பார்கள். அவர்கள் பெரும்பாலும் மலைத் தோட்டங்களில் வேலை செய்பவர்களாக இருப்பதினால், ஆள் ஆளாகச் சென்று சந்தித்துச் செய்தி சொல்வது முடியாத காரியம். எனவே தான் வெடி வெடித்து ஊருக்குச் சேதி சொல்கிறார்கள்.*

*இறந்தவர்களைப் புதைப்பர் இறந்த அன்று இரவு கூத்தாடிகள் பாடுவர். தோட்டி மேளம் அடிப்பதும் உண்டு. இறந்தவர்களைத் தேர்கட்டி எடுத்துச் செல்வர். இறப்பு வீட்டுக்கு வருபவர் நெல், எண்ணெய், ஒரு தேங்காய், மாலை, கோடி போன்றவைகளைக் கொண்டு வருவர். இந்தத் தானியங்களை எல்லாம் சேர்த்து வைத்து 2ஆம் நாளும், 10ஆம் நாளும் ஊருக்குச் சாப்பாடு போடுவார்கள். மூன்றாம் நாள் மூணாம் சாத்திரம். புதைத்த இடத்தில் பால் தெளிப்பு. ஒன்பதாம் நாளில் 9ஆம் சாத்திரம். நான்கு பெண்கள் சேர்ந்து விடிய விடிய ஒப்பாரி பாடுவர். 10ஆம் நாள் காலை 10 மணியளவில் இந்தச் சாங்கியம் முடிவடையும். இதை தருமராசா பாட்டு என்கின்றனர். அன்றே நிறைசெம்பு நீர் வைத்து இறந்தவர்களுக்குப் படையல் போடுவர். அன்று ஊர் முழுக்க கறிச்சாப்பாடு போடுவார்கள். பாடிய பெண்களுக்கும் வெந்நீர் ஊற்றி, பலகாரம் மற்றும் கறிச்சாப்பாடு போடுவர். அத்துடன் இறப்புச்சடங்கு நிறைவடைகிறது.*[28]

**வழிபாட்டுச் சடங்குகள்**

**‘வழிபாடு’ என்னும் சொல்லுக்கு வழியிற் செல்லுக, பின்பற்றுக, வணக்கம், பசனை, சமயக்கோட்பாடு என்னும் பொருள்களைத் தமிழ் லெக்சிகன் தருகிறது.[29]**

**கிரியாவின் தமிழ் அகராதி, வழிபாடு என்னும் சொல்லுக்கு வணங்கும் செயல், பிரார்த்தனை, விளக்கு, வழிபாட்டுப் பாடல்கள் என்னும் பொருட்களைத் தருகிறது.[30] எனவே துன்பங்கள், நோய்கள், துயரங்கள் போன்றவற்றிலிருந்து விடுபட விரும்பியதன் விளைவாக வழிபாடு தோன்றியிருக்கவேண்டும் எனக் கருத இடமுண்டு.**

**மக்கள் எந்தச் செயல் செய்வதாக இருந்தாலும் முதலில் தெய்வத்தை வழிபட்டுப் பின் அச்செயலைச் தொடங்குவார்கள். பழங்காலத்தில் இயற்கை வழிபாடும் பின்னர் உருவ வழிபாடும் தோன்றியது. ‘‘ஆதிகாலத்தில் மக்கள் இயற்கையோடு இயைந்த வாழ்க்கை நடத்தினர். இயற்கையின் சீற்றத்தால் பெரிதும் பாதிக்கப்பட்டனர். இயற்கைச் சக்திகளைத் தெய்வங்களாகக் கருதி வழிபட்டனர். அவற்றிற்கு விழா எடுத்து நன்றி செலுத்தினர்’’[31] என்பர்.**

**‘‘நாடோறும் செய்யும் நற்செயல்களையும் தீய செயல்களுக்காக வருந்திப் பரம்பொருளிடம் முறையிடுவது வழிபாடாகும்.’’[32] எனவே மனிதனின் வாழ்க்கைச் சூழலில் தம்மை**

தீயவை அணுகக் கூடாது. நல்லவை அணுக வேண்டுமென்று தெய்வத்திடம் வேண்ட, அது வழிபாடாக நெகிழ்ந்துள்ளது எனலாம்.

மனிதன் விலங்கு வாழ்க்கையினின்றும் முன்னேறிச் சிறிது நாகரிகம் பெறத் தொடங்கியதும் பல சிந்தனைத் திறன்களைப் பெற்றான். இடி, மின்னல், புயல், வெள்ளம் போன்றவற்றில் பேரழிவுகள் நேரிட்டபோது தன் ஆற்றலுக்கும் மேற்பட்ட ஒரு இயற்கைச் சக்தி உண்டென உணரத் தொடங்கினான். மனிதன் தன் ஆற்றல் ஒரு வரம்பிற்குட்பட்டது என்பதை உணர ஆரம்பித்த நிலையில் தன்னை மீறிய ஒரு சக்தி உள்ளது; அது கட்டுக்கடங்காதது என்பதை உணர்ந்தான். அன்றிலிருந்து கடவுள் வணக்கம் தொடங்கியது.

தெய்வ வழிபாடுகள் தோன்றுவதற்கு அன்பும், அச்சமும் காரணமாயின என்பதை,

''அஞ்சி யாகினும் அன்புபட் டாகினும்
நெஞ்சம் வாழி! நினைநின்றி யூரைநீ''(33)

எனத் திருநாவுக்கரசர் விளக்குவர். இதே கருத்தை பிறிதொரு இடத்தில் இவரே, அஞ்சியாகினும் அன்பு பட்டாகினும் தெய்வத்தை நினை எனக் கூறுவர். இயற்கையிடமும், மரணத்திற்குப் பின்வரும் நிலையிலும் மனிதன் கொண்ட அச்சம் வழிபாட்டிற்கு அடிப்படைக் காரணம் என சிக்மண்ட் பிராய்ட் கூறுவர்.

தொடக்கக்கால வழிபாடு கோயில்களில் இல்லாமல் குன்றுகளிலும், ஆற்றங்கரைகளிலும், ஆலமரம் போன்ற மரத்தடிகளிலும் நடைபெற்று வந்ததனை,

**"ஆலமும் கடம்பும் நல்யாற்று நடுவும்**
**கால்வழக் கறுநிலைக் குன்றமும் பிறவும்**
**அவ்வவை மேய வேறுவேறு பெயரோய்"[34]**

என்ற அடிகள் உணர்த்தும்.

**இயற்கை வழிபாடு**

இலக்கண, இலக்கியங்களில் வழிபாடு குறித்த செய்திகள் உள்ளன. சிறு தெய்வ வழிபாட்டின் தொடக்கமாக இயற்கை வழிபாடு அமைகின்றது. பண்டைக் காலத்து மக்கள் இயற்கைச் சக்திகளால் அவர்களுக்கு நன்மையும், தீமையும் விளைவதாகக் கருதினர். எனவே இயற்கைப் பொருட்களைத் தெய்வங்களாகவே எண்ணினர். சிலப்பதிகாரம் இயற்கை வழிபாட்டினை,

**"திங்களைப் போற்றுதும்! திங்களைப் போற்றுதும்**
**கொங்கலர் தார்சென்னி குளிர் வெண்குடை போன்றுஇவ்**
**அங்கண் உலகு அளித்தலான்**
**ஞாயிறு போற்றுதும்! ஞாயிறு போற்றுதும்"[35]**

எனக் கூறும். இயற்கையின் பாதிப்புக்குட்பட்ட மனிதன் அவற்றின் தாக்குதலிலிருந்தும் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள முயன்ற நிலையில் கடவுட் கோட்பாடும் வழிபாடும் தோன்றின"[36] என்பர் சு.சக்திவேல்.

அச்ச உணர்வே வழிபாட்டின் அடிப்படையாக விளங்குகிறது. அதனை, ‘‘இயற்கையைக் கண்டு அஞ்சிய மனிதன் அதனை அமைதிப்படுத்த வழிபாட்டை உருவாக்கினான். வேத கால மக்கள் இயற்கையினையும் பாம்பு போன்ற உயிரினங்களையும் வழிபட்டு வந்தனர்’’[(37)] என்ற சக்திவேலின் கருத்து அரண் செய்யும். பண்டைத் தமிழரிடம் இயற்கை வழிபாடே இருந்தது என்பதை இதனால் உணர முடியும்.

**நடுகல், வழிபாடு**

பண்டைய காலத்தில் போரில் ஒரு வீரன் வீர மரணம் எய்திடுவானாயின் அவனுக்காக, அவன் நினைவாக ஒரு கல் நட்டு அக்கல்லில் அவனது வீரச் செயல்களைப் பொறித்து அதனை மங்கல நீராட்டி, அதற்குப் பலிகொடுத்து மக்கள் வணங்கினர். இதுவே நடுகல் வழிபாடாக வளர்ந்திருக்கின்றது. ‘‘நடுகல்லிற்கு நாட்காலையில் நன்னீராட்டில் பாலூட்டி நெய்ந்துறை கொடுத்தலாகிய தூபம் போடுதல் மரபாம்[(38)] என்னும் நற்றிணைப் பாடால் அறியலாம்.

**இனக் குழு வழிபாடு**

ஒரு விலங்கு அல்லது தாவரம் அல்லது இயற்கைப் பொருளை வழிபடும் ஒரு அறிய கூட்டத்தை இது குறிக்கும். ஒவ்வொரு கூட்டத்தினரும் ஒரு பொருளைத் தங்கள் இனக்குறியாக கொண்டிருந்தனர்.’’[(39)]அது பெரும்பாலும் விலங்காகவும் மரமாகவும் அரிதாகச் சூரியன், நீர், மழை, நெருப்பு போன்றவைகளாகவும்

இருக்கும். இவ்வினக்குழு மக்களின் கோயில்கள், ‘‘மரம், மண்டபம், கல், நிலம், பாறை, வீடு, மாட்டுத் தொழுவம், காடு போன்ற இடங்களில் அமைந்துள்ளது.’’(40) அவர்களின் வழிபடு நிலையை,




என்ற நிலையில் விளக்க வாய்ப்புண்டு. இவர்களின் வழிபாடு சிறுதெய்வ வழிபாட்டு நிலைக்குள் அடங்குகிறது.

இச்சிறு தெய்வ வழிபாடானது ‘‘பெருந்தெய்வ வழிபாட்டு முறையினின்றும் முற்றிலும் மாறுபட்டதாக அமைந்துள்ளது. இத்தெய்வங்களுக்கு பூஜை செய்ய அந்தணர்கள் இத்தெய்வங்களுக்கு பூசை செய்ய அந்தணர்கள் நியமிக்கப்பெறவில்லை. தெய்வங்களை வணங்கும் இனத்தவருள் ஒருவரே பூசாரியாக இருந்து பூசைக்குரிய பணிகளைக் கவனித்துக் கொள்கின்றனர்.’’(41)

இச்சிறு தெய்வக் கோயில்களில் வரன்முறைப்படுத்தப்பட்ட பூசைகள் நடைபெறுவதில்லை. விரும்பும் நேரங்களில் பூசை செய்து கொள்வர். சிறு தெய்வக் கோயில்கள் அனைத்துமே ஒரு தனிப்பட்ட

ஆளின் நிர்வாகத்தில் அல்லது ஒரு சமுதாயத்தின் கட்டுப்பாட்டில் அல்லது ஓரிரு குடும்பங்களின் கட்டுப்பாட்டில் இருக்கின்றன.

இதற்கெனத் தனி வருமானம் இன்மையில் தங்களுக்குள் வரி வசூல் செய்தே பூசைகளையும் திருவிழாக்களையும் நடத்துகின்றனர். இச்சிறு தெய்வக் கோயில்களில் பணியாற்றும் பூசாரிகளில் பெரும்பான்மையோருக்கு ஊதியம் கிடையாது. ஊதியத்தை எதிர்பார்க்காது தெய்வப் பணிகளை முடிக்கின்றனர்.

**பழங்குடிகளின் வழிபாடு**

தமிழகப் பழங்குடிகளிடம் இன்று நடைமுறைகளில் உள்ள வழிபாட்டு நிலைகளை:

பலகாலமாக இருந்து வரும் பழங்குடி மக்களுக்கே உரிய தெய்வங்கள்/ வழிபாடுகள். பிற மக்களால் ஏற்பட்ட தாக்கத்தால் வந்த நாட்டார் தெய்வங்கள். இந்துமதத் தெய்வங்கள் / வழிபாடுகள் என வரையறுத்துக் கூறலாம். இந்த மூன்று வழிபாட்டு முறைகளில் சமவெளியில் நிரந்தரமாகத் தங்கிவிட்ட பழங்குடி மக்களிடம் பழங்குடி வழிபாட்டுக் கூறுகள் பெரிதும் மறைந்துவிட்டன. சமவெளிப் பழங்குடிகளிடம் மாரியம்மன், கருப்பசாமி, சுடலைமாடன், இசக்கி போன்ற நாட்டார் தெய்வங்களின் வழிபாடு பெருகி வருகிறது. இந்த வழிபாடு அண்மைக்காலத்தில் வந்ததாக இருக்க வேண்டும்.

இந்த சமயத் தெய்வங்களின் வழிபாடு மிக அண்மைக் காலமாகப் பெருகி வருகிறது. பொதுவாகப் பழங்குடி மக்களிடம் சைவத்தை விட வைணவத் தாக்கம் அதிகம். இருளர், எருக்கலா, கசபர், குறிச்சான், சோளிகர் போன்ற பழங்குடியினர் ரங்கசாமி (காரமடை), திருப்பதி ஏழுமலையான் ஆகிய தெய்வங்களை வணங்குகின்றனர். மலையாளிகளும், முதுவர்களும் மட்டுமே தங்களைச் சைவச் சார்புடையவர்களாகக் காட்டிக் கொள்கின்றனர். எருக்கலா, கசபர் ஆகிய பழங்குடிகளின் கோயில்களில் பிராமணப் பூசாரிகள் பங்கு கொள்ள ஆரம்பித்துவிட்டனர்.

பழங்குடிகளிடம் சூரிய, சந்திர, நெருப்பு வழிபாடு உண்டு. மிகப் பெரிய மரங்களில் தெய்வங்கள் உறையும் என்று நம்புகின்றனர். பயிர் செழிக்கவும், வேட்டைத் தொழில் சிறக்கவும் குறிப்பிட்ட தெய்வங்கள் வழிபடப்படுகின்றன.

**சேர்வராயன்மலை பழங்குடிகளின் வழிபாடு**

வருடத்திற்கு ஒருமுறை மலைநாடர்கள் ஊர்ப் பொதுத் திருவிழா கொண்டாடுகின்றனர். பெரும்பாலும் மாரியம்மன் அல்லது காளியம்மனை வழிபடுகின்றனர். ஊருக்கு ஒரு கோயில் இருப்பதால் அவ்வூர்களில் தனித்தனியாகத் திருவிழா நடைபெறும். இவ்விழா பங்குனி மாதத்தில் எட்டு நாட்கள் கொண்டாடப்படும். விழாவை முன்னின்று நடத்துபவர்கள் பட்டக்காரர், ஊர்க்கவுண்டர், மணியக்காரர் மூவரும் திருவிழாவிற்காக ஊரில் தீர்வை வசூல்

செய்வதுண்டு. விழா நாட்களில் ஊர் மக்கள் **கும்பிடிகை** (நேர்த்திக்கடன்) இருந்தால் ஆடு (கிடாய்), கோழி வெட்டுதல் உண்டு. அந்நாட்களில் இரவு முழுவதும் கூத்து நடைபெறும்.

மலைநாடர்கள் அண்ணாமலையார், கரிய பெருமாள் ஆகிய தெய்வங்களை வழிபடுகின்றனர். இத்தெய்வங்களுக்கு ஊருக்கு ஒரு கோயில் இல்லை. பல ஊர்களுக்கு ஒரு கோயிலாக, மிகச் சிலவே உள்ளன. இத்தெய்வங்களுக்கும் விழா எடுப்பர். இவ்விழாவினைக் கொண்டாடும் போது, ஊர்மக்கள் அசைவ உணவு உண்பதில்லை. உயிர் பலியிடும் பழக்கமும் இல்லை. திருவிழாக்களில் இறைவனுக்குக் காணிக்கையாகத் தாழம்பூக் குடை தருவது வழக்கம். பிராமணர்கள் பெருந்தெய்வக் கோயில்களில் பூசாரிகளாக இருந்து வருகின்றனர்.

**கொல்லிமலைத் தெய்வங்கள்**

கொல்லிமலையைச் சுற்றிலும் ஆங்காங்கே பல கோயில்கள் உள்ளன. அவை:

1. அறம் வளர்த்த நாயகி உடனுறை அறப்பளீசுவரர் திருக்கோயில்
2. எட்டுக்கை அம்மன் கோயில்
3. மாரி பெரியண்ணன் கோயில்
4. கொங்கலாய் அம்மன் கோயில்
5. அரங்கத்தப்பன் கோயில்
6. நாச்சியப்பன் கோயில்
7. மாரியம்மன்

8. வெள்ளைப் பிள்ளையார்

9. கருப்பர் (நத்துக்குளி)

என்பனவாகும். பெருந்தெய்வ கோயிலும், சிறு தெய்வக் கோயில்களும் இதில் அடங்கியுள்ளன.

**அறம் வளர்த்த நாயகி உடனுறை அறப்பளீசுவரர் திருக்கோயில்**

இக்கோயில் 12ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது. இக்கோயில் இராசராச சோழனால் கட்டப்பட்டது. விவசாய நிலமாக இருந்த இடத்தில் கோயில் கட்டப்பட்டுள்ளது. ஆகம விதிகளின்படி பூசைகள் நடைபெறுகின்றன. பழங்குடிகள் மட்டுமல்லாது அனைத்துப் பகுதியினர் வந்து வழிபடும் திருக்கோயிலாக உள்ளது. சுற்றுப் பிரகாரத்தை உடைய இக்கோயில் இந்து அறநிலையத் துறையினரால் பராமரிக்கப்பட்டு வருகிறது. பிராமணர்களே கோயிலின் பிரதான பூசாரிகளாக இருந்து வருகின்றனர். இக்கோயிலிலுள்ள அம்மையும் அப்பனும் அறம் வளர்த்து, பாவத்தைப் போக்கியவர்கள் என்ற பெயர்க்காரணம் கூறுப்பெறுகிறது. பெருந்தெய்வ சைவக் கோயிலாக இருப்பதால் உயிர்பலியிடுதல் தடைசெய்யப்பட்டுள்ளது. கோயிலில் பொங்கல் வைத்துப் பூசை செய்கிறார்கள். கோயிலில் முக்கியமாக நெல் கொட்டப்பட்டுள்ளது. கோயிலுக்கு நெல் காணிக்கையாகக் கொடுக்கப்படுகிறது. இக்கோயிலின் தலவரலாறு நூல் தனியாக வெளியிடப்பட்டுள்ளது.

**மாசி பெரியண்ணன் திருக்கோயில்**

கொல்லிமலை சோளக்காட்டிலிருந்து 5 கி.மீ தூரத்தில் உள்ள எருமைநலப்பட்டியிலிருந்து செங்குத்தான மலை மேல் (3 கி.மீ) மாசி பெரியண்ணன் சாமி கோயில் இருக்கிறது. நத்துக்குளி என்ற சிற்றூரிலிருந்தும் மற்றும் மலையின் நான்கு புறமிருந்தும் மக்கள் இக்கோயிலுக்கு வருகின்றனர்.

மாசி பெரியண்ணன் திருவிழா மாசிமாதம் பௌர்ணமி அன்று நடைபெறுகிறது. மாசி பெரியண்ணன் கோயில் கற்கள் ஒன்றன் மேல் ஒன்றாக அடுக்கி மேற்கூரை வைக்கோலால் வேயப்பட்டுள்ளது. வேயப்பட்டுள்ள மேற்கூரை வைக்கோலை ‘காமிச்சம்புல்’ என்கின்றனர். கோயிலிலுள்ள சாமி உள்ளறையில் பூட்டி வைக்கப்பட்டுள்ளது. தேர்த்திருவிழா அன்று வெளியில் எடுக்கப்படுகிறது. கோயிலைச் சுற்றி மணிகள் கட்டப்பட்டுள்ளன. அவை நேர்த்திக்கடனுக்காகக் கட்டப்பட்டுள்ளன. தேங்காய், வாழைப்பழம், ஊதுபத்தி, திருநீறு, குங்குமம் போன்றவை பூசைப் பொருட்களாகப் பயன்படுகின்றன. பூசாரி பூசை நடத்துகிறார். கோயிலுக்கு வந்தவர்கள் ஆங்காங்கே அமர்ந்து தியானத்தில் ஈடுபடுகின்றனர்.

கோயிலின் எதிர்புறம் கொடிமரம் உள்ளது. சங்க இலக்கியத்துள், கொடி அரசனுடன் மட்டுமின்றி, கடவுளர் கோயிலுடன் இணைத்து நினைக்கப்பட்டமை எண்ணத்தக்கது. “கொடிமரத்தைக் கோயிலுக்கு முன் நாட்டி வழிபாடு நிகழ்த்துதல் வரலாறு. அதுவே கொடிநிலை எனப்பட்டது”[(42)] என்ற கருத்து ஈண்டு

நினைத்தற்பாலது. கொடிமரத்தின் அடியில் சுதைச் சிற்பமான சிங்கம் காட்சியளிக்கிறது. கோயிலைச் சுற்றி இரும்பாலான வேல் கம்புகள் ஊன்றப்பட்டுள்ளன.

கொடிமரத்தின் எதிர்ப்புறம் பெரிய சுதையாலான வெள்ளைக் குதிரை கம்பீரமாக உள்ளது. சமவெளிப் பகுதியில் உள்ள அய்யனார் குதிரையை நினைவூட்டும் விதமாக அமைக்கப்பட்டுள்ளது. குதிரை அக்கோயிலோடு தொடர்புடையதாக இருக்கிறது. ஏனெனில் தேர்த்திருவிழாவிற்குக் கீழிருந்து மலைக்குக் குதிரை ஒன்று அழைத்து வரப்படுகிறது. குதிரை சிற்பத்தின் இரு பக்கத்திலும் ஆண், பெண் உருவங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

மாலை ஐந்து மணிக்குச் சிறிய வடிவிலான இரண்டு தேர்கள் அலங்கரிக்கப்பட்டு மலையைச் சுற்றி மேளதாளத்துடன் எடுத்து வரப்படுகிறது. தேர்க்கு முன்னால் குதிரையும் வலம் வருகிறது. அதனைப் பக்தர்கள் பக்தியுடன் இழுத்து வருகின்றனர்.

இக்கோயிலுக்கு 14 ஊர்ப் பூசாரிகள் விரதமிருந்து பூசை வைக்கிறார்கள். அருள் பெற்றவரே தலைமை பூசாரியாக வரமுடியும். பூசாரிகள் அனைவரும் 18 நாட்கள் விரதம் மேற்கொள்கின்றனர். அத்திமரத்தின் அடியில் தான் இக்கோயில் உள்ளது. தல விருட்சமாக இம்மரம் இங்கு உள்ளது.

மாரியம்மன், பிள்ளையார், காளியம்மன் கோயில்கள் இருக்கின்றன. இங்குப் புதிய கற்கால கல் ஆயுதங்கள் பிள்ளையாராக

வணங்கப்படுகின்றன. மாரியம்மன் திருவிழா ஆண்டுதோறும் கொண்டாடப்படுகிறது. ஒரு மலையாளி தன்னுடைய நேர்த்திக்கடனுக்காகக் காளி கோயிலுக்குத் திருவிழா நடத்தினால், தன்னுடைய ஊரினருக்கு ஒரு குறிப்பிட்ட அளவு அரிசியும், பலி ஆட்டின் இறைச்சியில் மூன்றில் இரண்டு பங்கும் கொடுக்க வேண்டும்.

**தொகுப்புரை**

சடங்கு என்பதற்குக் கிரியை, செய்முறை எனத் தமிழகராதி பொருள் தருகிறது. ஒவ்வொரு சமூகத்தினரும் தம் வாழ்வை நெறிப்படுத்தி நடத்திச் செல்ல அமைத்துக் கொண்ட சம்பிரதாயங்கள், நம்பிக்கைகள், கட்டுப்பாடுகள் போன்றவையே சடங்காகும். மனிதன் தன் வாழ்க்கையைக் குறிக்கோள் உடையதாக்கி ஒழுங்குடன் வாழத் தலைப்பட்ட போது ஏற்படுத்திக் கொண்ட ஒரு சாத்திர முறைமையே ‘சடங்கு’ ஆகும். ஒவ்வொரு சமூகத்தினரும் தம் வாழ்வை நெறிப்படுத்தி நடத்திச் செல்ல அமைத்துக் கொண்ட சம்பிரதாயங்கள், நம்பிக்கைகள், கட்டுப்பாடுகள் போன்றவையே சடங்காகும் என்பது பெறப்படுகிறது.

பழங்குடி மக்கள் இயற்கையை மனதில் எண்ணிச் செய்தால், தங்களுக்குப் பாதுகாப்பும், தாங்கள் நினைத்த காரியமும் நிறைவேறும் என்ற நம்பிக்கையில் சடங்குகளைச் செய்துள்ளனர். பழங்குடிகள் பெரும்பாலும் காடு செழிக்கவும், மழை, வளம்

பெருகவும், பயிர் வளரவும், காய், கிழங்குகள் கிடைக்கவும், நோய்நொடிகள் வராமல் இருக்கவும், புயல், வெள்ளம், தீ போன்ற இயற்கை இடர்கள் வராமல் இருக்கவும் சடங்குகளைச் செய்தனர்.

மழை, வளம் ஆகியவற்றை வேண்டிச் சடங்குகள் செய்யப்பட்டன. வேட்டை, விவசாயம் ஆகிய இரண்டிற்கும் மழை மிகவும் அவசியமாகும். மழை வேண்டிச் செய்யப்பட்ட சடங்கு மந்திரச் சடங்காகவும், மந்திரமும் சமயமும் கலந்த சடங்காகவும் விளங்கிய குறிப்புகளை இலக்கியங்களில் வாயிலாக அறியமுடிகிறது.

சடங்குகளின் போது மது அருந்துதல், ஆவேசம் அடைதல் போன்ற நிகழ்வுகள் நடக்கின்றன. ஒவ்வொரு சடங்குகளின் போதும் விதவிதமான உணவுகளைப் படைத்து உண்கின்றனர். உயிர்களைப் பலியிட்டு, குருதி தெளித்தல் தொடர் நிகழ்ச்சியாக சடங்குகளில் காணப்படுகிறது. சடங்குகளின் போது பூ, வாசனைத் திரவியம், (சூடம், சாம்பிராணி, ஊதுபத்தி) தேங்காய், பழங்கள் (வாழை, எலும்பிச்சம்) ஆகியவற்றைப் பயன்படுத்துகின்றனர். ஆடல், பாடல், இசை ஆகிய யாவும் ஒன்றிணைந்து சடங்கின் பகுதியாக அமைந்துள்ளன.

மந்திரத்தோடு கூடிய சடங்குகள் பண்டைக் காலத்தில் நிகழ்ந்தன. காலப்போக்கில் அச்சடங்குகள் தொழில்நுட்பப் பெருக்கத்தால் மறைந்துவிட்டன. மந்திரம் மறைந்து சடங்குகளே இவ்வின மக்களிடம் எஞ்சி நிற்கின்றன என்ற கருத்து

ஆராயப்பட்டுள்ளது.

சடங்கியல் முறைகளைத் தாம் வாழும் சூழலுக்கேற்ப இவ்வினமக்கள் அமைத்துக் கொண்டுள்ளனர்.

இந்து மலையாளிகளின் வாழ்வியல் சடங்குகளான, பிறப்புச் சடங்குகள், பூப்புச் சடங்குகள், திருமணச் சடங்குகள், இறப்புச் சடங்குகள் பற்றிய செய்திகள் விவரிக்கப்பட்டுள்ளன. திருமணங்கள் தற்போது பிராமணர்களை வைத்து நடத்தப்படுகின்றன. முன்பு இவர்கள் மணமுறையில் முதன்மை பெறுவதில்லை. இவ்வின மக்களின் சடங்கு முறைகளில் பண்டைய பழங்குடி மக்களின் சடங்கியல் எச்சங்கள் காணப்படுகின்றன.

மலையாளிகளின் வாழ்வியல் சடங்குகளில் அனைத்திலும் மாமன் உறவு முக்கியத்துவம் பெறுகிறது.

சிறு தெய்வ வழிபாட்டுக் கூறுகள் இவ்வின மக்களின் வழிபாட்டில் மிகுந்துள்ளன.

மலையாளி இனமக்கள் பெருந்தெய்வ வழிபாட்டையும், சிறுதெய்வ வழிபாட்டையும் கடைபிடிக்கின்றனர். பெருந்தெய்வ வழிபாடு ஆகம விதிப்படி பிராமணர்களைக் கொண்டு நிகழ்த்தப் பெறுகிறது. சிறுதெய்வ வழிபாட்டினைப் பூசாரிகளே நடத்துகின்றனர் என்ற கருத்து ஆராய்ந்து கூறப்பட்டுள்ளது.

மாசி பெரியண்ணன் கோயில் திருவிழா மாசி மாதத்தில் நடைபெறுகிறது. பிற தெய்வ வழிபாடுகளும் மாசிமாதம் பௌர்ணமி அன்று நடைபெறுகின்றன.

**சான்றெண் விளக்கம்**

*1.கா.சுப்பிரமணியன், சங்ககாலச் சமுதாயம், பக். 11–12.*

*2. ஐங்:251.*

*3. புறம்:143.*

*4. கா.சுப்பிரமணியன், சங்ககாலச் சமுதாயம், ப. 14.*

*5. மேலது, ப. 14.*

*6. நற்:165.*

*7. கா.சுப்பிரமணியன், சங்ககாலச் சமுதாயம், ப. 19.*

*8. திருமுருகு194–196; மலைபடுகடாம் 318–327.*

*9. பிலோ இருதயநாத், குறுநிலமன்னர்களே குறும்பரானார்கள், தினமணிச்சுடர் அநுபந்தம்,* 15-2-1974.

*10. காண்க: பின்னிணைப்பு: பேட்டி எண்.6*

*11. பிரேமா ரத்தினவேல், சேர்வராயன் மலைநாடர்களின் சடங்குகள், (தமிழ்நாட்டு மலைவாழ் பழங்குடி மக்கள்),பக்.46–47.*

*12. சிலம்பு நா.செல்வராசு, சங்க இலக்கிய மறுவாசிப்பு, பக்.144–145.*

*13. தா.இராபர்ட் சத்திய சோசப், குறும்பர்களின் உறவுமுறை, பக்.37–120.*

*14. செ.இராசு, கொடைக்கானல் குன்னுவர், (தமிழ்நாட்டு மலைவாழ் பழங்குடிகள்), பக்.80–81.*

*15. காண்க: பின்னிணைப்பு: பேட்டி எண்.7*

*16. மேலது, பேட்டி எண்.7*

17. மேலது, பேட்டி எண்.7.

18. காண்க: பின்னிணைப்பு: பேட்டி எண்.6

19. காண்க: பின்னிணைப்பு: பேட்டி எண்.8

20. மேலது, பேட்டி எண்.8

21. மணி:சக்கரவாளக் கோட்டம் உரைத்த காதை: 66–67.

22. க.ப.அறவாணன், அற்றைநாட் காதலும், வீரமும், ப.256.

23. சி.சே. செயதேவ், மு.இரகுபதி, பழங்காலப் பண்பாடும் பழங்குடிகள் பணபாடும், ப.32.

24. மேலது, ப.29.

25. க.ப.அறவாணன், அற்றைநாட் காதலும், வீரமும், ப.256.

26. அர.பெரியாழ்வார், தமிழ்நாட்டு மலைவாழ் பழங்குடிகள் மாறிவரும் நீலகிரி மலையும் மாறாத மலையின மக்களும், ப.61.

27. சிலம்பு: 21:32,

28. காண்க: பின்னிணைப்பு: பேட்டி எண்.7.

29. பா.ரா.சுப்பிரமணியன். க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப.909.

30. முனைவர் மே. அ.பாலமுருகன்- நாட்டுப்புற இலக்கியம் ப-181.

31. மேலது ப.182.

32. முனைவர் சிரா.சந்திரசேகரன்- வழிபாட்டு மரபுகள் ப-1,2.

33. மே.அ.பாலமுருகன், நாட்டுப்புறக் கலை இலக்கியம், பக்.1091-1092

34. பரி: 67-68.

35. சிலம்பு: மங்கல வாழ்த்து: பா.63.

36. சு.சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு ப.51.

37. மேலது, ப.62.

38. நற்: பா.317.

*39. கலைக் களஞ்சியம் தொகுதி ப-176.*

*40. பி.எல்.சாமி-தமிழ் இலக்கியத்தின் தாய்த் தெய்வ வழிபாடு ப.103.*

*41. க. கைலாசபதி - பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும், ப.55.*

*42. க.ப.அறவாணன், அற்றைநாட் காதலும், வீரமும், ப.328.*

# மருத்துவ முறைகள்

பழங்குடியின மக்களின் மருத்துவமுறைகள் குறிப்பாக வாழ்க்கைச் சூழலுக்கும், சுற்றுச் சூழலுக்கும், தொழில் முறைக்கும் ஏற்றவாறு எளிமையாக உள்ளன. உணவே மருந்து; மருந்தே உணவு என வாழ்கின்ற இந்து மலையாளிகளின் அன்றாட உணவுப் பழக்க வழக்கங்களும், மலைகளில் விளையும் மூலிகைகள், அவற்றின் பயன்பாடுகள், பாரம்பரியத்தை விட்டு விலகாத அவர்களின் மருத்துவ முறைகள் ஆகியவற்றை விளக்கி ஆராய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

## பழந்தமிழ் நூல்களில் மருத்துவ முறைகள்

பண்டைய மருத்துவ முறைகள் இன்றும் பழங்குடி மக்களின் நம்பிக்கையோடு பயன்பாட்டில் இருந்து வருகின்றன. பழந்தமிழகத்தின் மருத்துவ முறைகள், மருந்துப் பொருட்கள், மருத்துவ இயல்புகள், உடல்நலத்திற்கான வாழ்வியல் நெறிகள் ஆகியவற்றை பழந்தமிழ் நூல்கள் மூலம் அறிய முடிகின்றது.

பழந்தமிழரின் மருத்துவம் உடல் நலத்திற்கான மருத்துவம், மன நலத்திற்கான மருத்துவம் என இரு கூறுகளாக உள்ளன. உடல் நலத்திற்கான மருத்துவத்தை இயற்கை மருத்துவம் அல்லது கை மருத்துவம், இசை மருத்துவம், நுண் மருத்துவம் (தொழில்நுட்பம் சார்ந்தது) என வகைப்படுத்துவதுண்டு. மன நலத்திற்கான மருத்துவ முறைகள் தேற்றுதல், ஆற்றுப்படுத்துதல், சந்து செய்வித்தல்,

வெறியாட்டுதல் போன்ற முறைகளில் அமைகின்றன. பழங்குடி மக்கள் உடல் நலத்திற்கான மருத்துவ முறைகள் மற்றும் வெறியாடுதல் முறைகளைப் பயன்படுத்தி மனநோய்களைப் போக்கி வருவதனை கள ஆய்வின் வழி அறியப்பெறுகிறது.

**இயற்கை மருத்துவம் (அ) கை மருத்துவம்**

இயற்கை மருத்துவம் அல்லது கை மருத்துவம் என்பது, இயற்கையாக எளிதில் கிடைக்கக் கூடிய மருந்துப் பொருட்களைப் பயன்படுத்திச் செய்யப்படுவது. இவ்வகை மருத்துவ முறைகள், வீட்டில் பெண்கள் முதல் அனைவராலும் எளிதில் கையாளப்பட்டு வந்ததால் இதனைக் கை மருத்துவம் என அழைப்பர். வேம்பைப் பயன்படுத்துதல், ஐயவி புகைத்தல், அத்திப்பாலினைப் பூசுதல் போன்றவை இவ்வகை மருத்துவ முறைகளுள் அடங்கும்.

**வேம்பு**

பழந்தமிழரின் இயற்கை மருத்துவத்தில் முதன்மை இடத்தினைப் பெற்ற பொருள் வேம்பு. இது, தமிழர் வாழ்விலும், வழிபாட்டிலும் கலந்து, தெய்வ நிலைக்கு உயர்த்தப்பட்ட புனிதமான மருந்துப் பொருளாகும். “வேம்பும், கடுகும் தமிழரின் ஆதி மருந்துகளாக, கற்ப மருந்துகளாகத் திகழ்ந்தன”(1) என்பர் வே. நெடுஞ்செழியன். வேம்பு ஒரு கிருமிநாசினி என்பது இன்றைய நவீன மருத்துவத்தாலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒன்று. கிருமிகள் மூலம் பரவக்கூடிய நோய்களைத் தடுக்கும் ஆற்றல் வேம்பிற்கு உண்டு.

இன்றும் சிற்றூர்களில் மக்கள் நோய்வாய்ப்பட்டாலோ, அம்மை நோய் போன்றவை ஏற்பட்டாலோ, தொற்றுநோய் அறிகுறிகள் தென்பட்டாலோ நோய்த் தடுப்பு முறையாக, வீட்டையும், வீட்டைச் சுற்றியுள்ள பகுதிகளையும் தூய்மைப்படுத்தி, வேம்பின் இலைகளை அரைத்து மஞ்சள் போன்றவற்றுடன் கலந்து தெளிப்பதைக் காண்கிறோம். வெளிப்புறமிருந்து நோய்க்கிருமிகள் வீட்டுக்குள் புகாமல் பாதுகாக்கும் பொருட்டு, மனையின் முகப்பில் வேம்பின் தழைகள் கொத்துக் கொத்தாகச் செருகியும் வைக்கப்படுகின்றன. பழந்தமிழர் மருத்துவ முறைகளின் தொடர்ச்சியாகவே இச்செயல்பாடுகள் அமைவதைக் காணமுடிகிறது. மருத்துவத்திற்கு வேம்பு பயன்பட்டதை,

"....... வேம்புசினை ஒடிப்பவும்"(2)

என்றும், வீட்டின் முகப்பில் வேம்பு செருகி இருந்ததை,

"தீங்கனி இரவமொடு வேம்பு மனைச் செரீஇ"(3)

என்ற அடிகள் சுட்டும். வீட்டின் முற்றத்திலும், பலர் கூடுகின்ற பொது மன்றத்திலும் வேம்பினை வளர்த்தல் உடல் நலத்திற்கு நன்மை பயக்கக்கூடியது. பலர் வந்து கூடுகின்ற போது நோய்வாய்ப் பட்டோரிடமிருந்து கிருமிகள் பிறருக்கும் பரவ வாய்ப்புகள் உள்ளன. வேம்பு கிருமிநாசினியாதலால் இச்செயல்பாடு கட்டுப்படுத்தப்படும். அதனாலேயே சங்ககாலத்தில் பலர் கூடுகின்ற ஊர்ப் பொதுமன்றங்களில் வேம்புகள் வளர்க்கப்பட்டுள்ளன. இதனை,

**“மன்ற வேம்பின் மரச்சினை ஒண்டளிர்”**[4]

**“மன்ற வேம்பின் ஒண்குழை மலைத்து”**[5]

**“மன்ற வேம்பின் ஒண்பூ வுறைப்ப”**[6]

என்ற அடிகள் சுட்டுகின்றன. வேம்பின் இலை, பட்டை, விதையிலுள்ள எண்ணெய் போன்றவை பலவகையான தீய நுண்ணுயிரிகளைக் (பாக்டீரியா) கட்டுப்படுத்தும் திறன் படைத்தது. எனவும், ஆங்கில மருந்துக்கும் கட்டுப்படாத காசநோய்க் கிருமிகள் வேப்ப எண்ணெய்க்குக் கட்டுப்படுவதாகவும் இன்றைய ஆய்வு அறிக்கைகள் கூறுகின்றன. வேம்பின் மருத்துவக் குணங்களையும், மருத்துவ முறைகளையும் பன்னெடுங்காலத்திற்கு முன்பே தமிழர் அறிந்திருந்தனர் என்பது உண்மையாகும். மரபுவழி பெற்ற மருத்துவ அறிவால், கிராமங்களில் மக்கள் இன்றும் குடற் புழுக்களை அழிக்க வேப்பம் பட்டைச் சாறு அருந்தவது கண்கூடு.

தொல்காப்பியம் வேம்பையும் கடுகையும் பற்றிக் குறிப்பிடுகிறது. அதனை,

**“வேம்பும் கடுவும் போல வெஞ்சொல்”**[7]

என்ற நூற்பா விளக்கும். ‘முற்பருவத்துக் கைத்துப் பிற்பருவத்து உறுதி பயக்கும் வேம்பும் கடுவும் போல வெய்யவாய சொல்லினைத் தடையின்றிப் பிற்பயக்குமெனக் கருதிப் பாதுகாத்து’ என்று பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் உரை வகுத்துள்ளனர்.

### ஐயவி

வேம்பு, கடுகு போலவே ஐயவி (வெண்சிறுகடுகு) என்ற பொருளையும் காயம்பட்ட வீரர்களைக் குணப்படுத்தும் மருந்தாகப் பயன்படுத்தியதைக் காணமுடிகிறது. ஐயவியிலிருந்து புகையினை உண்டாக்கி நோய் எதிர்ப்புப் பொருளாகப் பயன்படுத்தியதை,

**"நெய்யுடைக் கையர் ஐயவி புகைப்பவும்"**(8)

**"ஐயவி சிதறி"** *(புறம்:281:4)*

என்ற அடிகள் புலப்படுத்துகினறன.

**மிளகு**

வேம்பு, வெண்சிறுகடுகு, இரவம் இவைகள் போல, மிளகும் மிகச் சிறந்த மருந்துப் பொருளாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. தமிழகத்திலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்ட மருந்துப் பொருட்களில் மிளகு முதலிடம் பெறுகிறது. இதனை,

**"யவனர் தந்த வினைமாண் நன்கலம்**
**பொன்னொடு வந்து கறியொடு பெயரும்**
**வளங்கெழு முசிறி"**(9)

என்ற அடிகள் மொழியும். யவனர்கள் அழகிய வேலைப்பாடமைந்த கலங்களில் பொன்னைக் கொண்டுவந்து கொடுத்து, அதற்கு ஈடாக மிளகினைப் பெற்றுச் சென்றதை இப்பாடலடிகள் காட்டுகின்றன. மிளகின் மருத்துவக் குணங்களை யவனர்கள் அறிந்ததாலேயே பண்டமாற்றில் பொன்னிற்கு ஈடாக மிளகைப் பெற்றனர் என்பது தெளிவு.

பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் திரிகடுகம், சிறுபஞ்சமூலம், ஏலாதி ஆகிய மூன்றும் மருந்துகளின் பெயர்களால் தலைப்பைப் பெற்றிருப்பது சிறப்பு. பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் பலவற்றிலும் உடல் நலம் குறித்த கருத்துக்களும், மருந்து, மருத்துவர், நோய்கள் குறித்த செய்திகளும் காணப்படுகின்றன. உடல்நலக் குறைவு மனநலத்தைப் பாதிக்கும் என்பதால் உடல் நலத்தைப் பேண வேண்டியதன் தேவையை வலியுறுத்தினர். அவ்வகையில், உடலின்கண் மூப்பு தோன்றின் இளமை நலம் கெடும் என்பதை,

**“............. மெய்த்தாக**

**மூத்தல் இறுவாய்த்த”**[10]

என்ற அடிகள் சுட்டுகின்றன. குழந்தைகளுக்கு நோய் வந்தால் மிகுந்த துன்பத்தைக் கொடுக்கும் என்பதை,

**“குழவிகள் உற்ற பிணி இன்னா”**[11]

என்ற அடி விளக்கும். தீய ஒழுக்கத்தினால் ஏற்படும் நோய் (உடற் தேய்வு நோய்) பொன் போன்ற அழகிய மேனியைச் சிதைக்கும் என்பதனை,

**“பொய் சிதைக்கும் பொன்போலும் மேனியை”**[12]

என்ற அடி சுட்டும். இந்நோய் பெரும்பிணி எனப்பட்டது. கள்வரைவிட அஞ்சக்கூடிய, உடம்பைக் கரையச் செய்து வருந்துகின்ற தீராத நோய் இது என அடையாளப்படுத்தப்பட்டது. (எயிட்ஸ் என்னும் உயிர்க்கொல்லி நோயாக இருக்கலாம்). இதனை,

**“......... .......... உருவினை**

**உள்ளுருக்கித் தின்னும் பெரும்பிணியும்''**[13]

என்கிறது திரிகடுகம். கொடிய நோய்களாக, சிக்கர் (தலை நோயுடையவர்); திதடர் (பித்தர்), சிதனை (புற்று-சிதலைபோல் வாயுடையார்- வாய்ப்புற்று); துருநாமர் (மூலநோய்) ஆகியோர் சுட்டப்பட்டனர். இவற்றிற்கு வினைப்பயன் காரணமாகச் சொல்லப்பட்டது. பிணியுடையோர்க்கு உலகத்தில் இன்பம் ஏதுமில்லை[14] என்றும், இளமையில் நோயின்றி வாழ்தல் நன்று[15] என்றும் வலியுறுத்தப்பட்டது.

**இசை மருத்துவம்**

இசையால் உண்டாகும் ஒலியலைகள் மூளையில் தூண்டுதலை உண்டாக்கி, உடலில் உள்ள உயிர்வேதி நிகழ்வுகளில் பல மாற்றங்களை ஏற்படுத்துகின்றன என்கிறது இன்றைய அறிவியல். திணை வாழ்விற்கு ஏற்றவாறு குறிஞ்சிப்பண், முல்லைப்பண், மருதப்பண், நெய்தல்பண், பாலைப்பண் எனப் பல்வேறு இசை வடிவங்களையும், பல்வேறு இசைக் கருவிகளையும் கொண்டு, பொழுதிற்குத் தக்கவாறு காலை, மாலை என இசைத்து மகிழ்ந்தனர். பண்டைத் தமிழர் இந்த இசை நுணுக்கங்களைப் பல்வேறு நிலைகளில் பயன்படுத்தி வந்ததைப் போன்று மருத்துவத் துறையிலும் பயன்படுத்தியுள்ளனர். இதனை,

**"………. ………. ஆம்பல் ஊதி**
**இசைமணி எறிந்து காஞ்சி பாடி**
**நெடுநகர் வரைப்பின் கடிநறை புகைஇக்**

காக்கம் வம்மோ காதலந் தோழீ"[16]

என்ற புறநானூற்று அடிகள் சுட்டுகின்றன. இவை, இயற்கை மருத்துவத்தோடு இசை மருத்துவத்தையும் ஒருங்கே சுட்டுகின்றன. இதில், போரில் ஈடுபட்டுப் புண்பட்டுக் கிடக்கும் வீரனின் உயிரினைக் காக்க, ஐயவியைப் பயன்படுத்தியதோடு, ஆம்பல் என்னும் குழலை ஊதியும், காஞ்சிப் பண்ணை இசைத்தும் இசை மருத்துவம் செய்ததையும் அறியமுடிகிறது. இசை மருத்துவம் பற்றிய செய்தியை,

"தீங்கனி இரவமொடு வேம்புமனைச் செரீஇ
வாங்குமருப்பு யாழொடு பல்லியம் கறங்க
......... ......... ......... ...........
காக்கம் வம்மோ காதலந் தோழீ"[17]

என்றும்,

"வேம்புசினை ஒடிப்பவும் காஞ்சி பாடவும்
நெய்யுடைக் கையர் ஐயவி புகைப்பவும்
எல்லா மனையும் கல்லென் றவ்வே"[18]

என்றும் புறநானூறு சுட்டுகிறது. இவற்றில், மகளிர், போரில் புண்பட்ட தம் கணவன்மார்களின் காயங்களை ஆற்றுவதற்கு யாழ், பல்லியம் போன்ற கருவிகளை இசைத்ததும், 'காஞ்சி' என்ற இசை வகையினைப் பாடியதையும் அறியப்படுகிறது. இம்மருத்துவ முறை போரில் காயமடைந்த வீரர்களின் இல்லங்கள் தோறும் செய்யப்பட்டதால் அனைத்து இல்லங்களிலிருந்தும் இசையொலி எழும்பியதாகப் பாடல் காட்டுகிறது. இதனால் இந்த இசை

முறையினை இல்லத்துப் பெண்களே கற்றிருந்தனர் என்பதனையும் அறிய முடிகிறது. அதேபோல, கொடிச்சியர், வரிப்புலி மார்பைக் கிழித்தது போல் போர்க்களத்தில் ஏற்பட்ட வீரர்களின் விழுப்புண்ணை ஆற்றுதற்கு இசைப் பாடலை இசைத்தனர் என்று மலைபடுகடாமும் குறிப்பிடுகிறது.

## நுண் மருத்துவம்

இயற்கை மருத்துவம் என்பதோடு, மருத்துவத்துறையில் நவீனத் தொழில்நுட்பமான அறுவை மருத்துவம் (surgery), புண்ணிற்குப் பஞ்சு வைத்துக் கட்டுப் போடுதல் போன்ற செயல்பாடுகளுடன் கூடிய நுண் மருத்துவ முறைகளும் பழந்தமிழகத்தில் இருந்துள்ளன.

அறுவை மருத்துவ முறையினைக் குறிப்பிடும் பதிற்றுப்பத்து, போர்க்களத்தில் காயம்பட்ட வீரர்களின் மார்புப் புண்களுக்குத் தையல் போடும் போது அப்புண்ணின் குருதியிலே மூழ்கி மறைந்து மேலெழும் நெடிய வெண்மையான ஊசியானது, நீரில் மூழ்கி மேலெழும் சிரற்பறவையின் அலகு போன்று உள்ளது என்கிறது. இதனை,

**“மீன்றேர் கொட்பிற் பனிக்கயம் மூழ்கிச்**
**சிரல் பெயர்ந் தன்ன நெடுவெள் ஊசி**
**நெடுவசி பரந்த வடுவாழ் மார்பின்”**(19)

என்ற அடிகள் சுட்டுகின்றன. இதில், சிரற்பறவை நீரில் மூழ்கி

மேலெழும் போது, அதன் அலகில் மீன்கள் மாட்டி இருபுறமும் தொங்குதல் போல, காயங்களில் ஆழ்ந்து மேலெழும் ஊசியின் காதில் தையல் இழை தொங்குதல் ஒப்புமையாகக் காட்டப்பட்டுள்ளது.

மருத்துவம் முதலிய பல்வேறு துறைகளின் பயன்பாட்டிற்கான வெவ்வேறு வகையிலான ஊசிகள் உருவாக்கப்பட்டிருந்ததையும் அறிய முடிகிறது. தோல் தொழிலில் பயன்படுத்தப்படும் கூரிய ஊசிகள் (பதிற்று:74:13,14), செந்நாயின் பற்கள் போல் விளங்கிய, அரத்தால் அராவப்பட்ட வலிமையான ஊசிகள் (அகம்.199:8) போன்றவற்றோடு, அறுவை மருத்துவத்திற்குப் பயன்படுத்தப்பட்ட நுண்மையான ஊசிகளைப் பற்றி அறியமுடிகிறது. மருத்துவத்துறையில் அறுவை மருத்துவத்திற்குப் பயன்படும் வண்ணம் உருவாக்கிய நுண்மையான நெடிய ஊசியை, நெடுவேள் ஊசி என்கிறது பதிற்றுப்பத்து (42:3).

புண்ணுக்கு மருந்து வைக்கும் போது புண்ணின் மேல் பஞ்சு வைத்துக் கட்டும் இக்கால நவீன மருத்துவ முறை பழங்காலத்திலேயே இருந்ததை,

பஞ்சியும் களையாப் புண்ணர்"[20]

என்னும் புறநானூறு அடி உறுதி செய்கிறது. இக்காட்சி பாசறையின்கண் என்பதால், தற்போது இராணுவ மருத்துவமனைகள் இயங்குதல் போல, அக்காலத்திலும் இராணுவ மருத்துவமனைகள் அமைக்கப்பட்டிருந்ததையும், அம்மருத்துவ

மனைகளில் அறுவை மருத்துவம் அறிந்த சிறப்பு மருத்துவரும், அதற்கான தொழில்நுட்பங்களும், கருவிகளும் இடம் பெற்றிருந்ததையும் அறியமுடிகிறது.

போர்க்களத்தில் காயம்பட்டுப் பாசறையின்கண் இருக்கும் வீரர்களின் புண்களுக்கு, கையில் விளக்குகளை ஏந்திக்கொண்டு ஆராய்ந்து மருந்திடும் மருத்துவரை,

> **"மண்டுஅமர் அழுவந்து எல்லிக் கொண்ட**
> **புண்தேர் விளக்கின் தோன்றும்"**(21)

என அகநானூறு சுட்டுகிறது. அதேபோல், நவீன சிகிச்சை முறையால் போர்க்களத்தில் உடம்பில் பெற்ற விழுப்புண்களின் வடுக்கள் இருந்த இடம் தெரியாமல் மறைந்து, பழைய தோற்றத்துடன் காணப்பட்ட வீரனை,

> **"இறையுறு விழுமம் தாங்கி, அமர்அகத்து**
> **இரும்புசுவைக் கொண்ட விழுப்புண்நோய் தீர்ந்து**
> **மருந்துகொள் மரத்தின் வாள்வடு மயங்கி**
> **வடுவின்றி வடிந்த யாக்கையன் ....."**(22)

என புறநானூற்றுப் பாடலடிகள் காட்டுகின்றன. மருத்துவ குணமுடைய மரத்தையும், மருத்துவ முறைகளால் வடுக்கள் மறைந்த வீரனையும் இவ்வடிகள் புலப்படுத்துகின்றன.

**மருந்து பெறும் முறை (சேகரித்தல்)**

இயற்கை மருத்துவத்திற்குப் பயன்படும் தாவரங்களைப்

பட்டறிவால் அறிந்து வைத்திருந்தனர் பழங்குடி மக்கள். தாவரங்களுக்கு உயிரும் ஓரறிவும் உண்டு என்பது தொல்காப்பியரின் கூற்று (ஒன்று அறிவதுவே உற்று அறிவதுவே-(9:27)மரபியல்). அவ்வகையில், உயிரும் அறிவும் உள்ள தாவரங்களில் இருந்து மருந்தைப் பெறுவதிலும் சில வழிமுறைகள் பின்பற்றப்பட்டுள்ளன. இதனை,

"மரம்சா மருந்தும் கொள்ளார் மாந்தர்"(23)

என்ற பாடலடி சுட்டும். உயிர்களுக்கு ஏற்படுகின்ற பிணிகளைப் போக்குவது மருந்து மரத்தின் இயல்பாகும். பிணியைப் போக்குகிறது என்பதற்காக மரத்தை வேரொடு பிடுங்கிப் பயன்படுத்திவிடக் கூடாது. அப்படி செய்தால் மரம் சாவதோடு, எதிர்காலத் தேவைக்கும் இல்லாமல் போகும் என்ற சிந்தனை மருத்துவம் சார்ந்து உணர்த்தப்பட்டுள்ளது.

### மருத்துவர்

சங்க இலக்கியங்கள், மருத்துவ முறைகள், மருந்துப் பொருட்கள், மருத்துவன் இயல்புகள் குறித்து சுட்டிக் காட்டுகின்றன. சங்க இலக்கியங்களின் தொடர்ச்சியாகவும், பிழிவாகவும் காணப்படுகின்ற திருக்குறளில் மருந்து, மருத்துவம், மருத்துவன் இயல்புகள், நோய், நோய் கண்டறியும் முறைகள், நோயாளியை மருத்துவன் அணுகும் முறைகள், நோயாளிக்குத் துணை செய்வோர், நோயில்லாத வாழ்க்கை, உணவுப் பழக்கம் என

மருத்துவத்துறை குறித்தும் உடல் நலம் குறித்தும் விரிவாகவே பேசப்பட்டுள்ளதை உணர முடிகிறது.

அக்காலத்தில் மருத்துவர், ‘அறவோன்’ (நற்.136), ‘மருத்தன்’, ‘மருத்துவன்’ (கலி.17:20,21; 137:24,25; புறம்.173:11) என அழைக்கப்பட்டனர். தொல்காப்பியர் ‘நோய் மருங்கு அறிநர்’ (தொல்;அக.192) என்கிறார். வள்ளுவர், ‘கற்றான்’ (குறள் 949), ‘தீர்ப்பான்’ (குறள் 950) என்று குறிப்பால் சுட்டுகிறார். கற்றான் என்பவன் மருத்துவ நூல்களைக் கற்றுத் தேர்ந்தவன் என்பதையும், தீர்ப்பான் என்பவன் நோயினைத் தீர்க்கும் மருத்துவ அறிவு பெற்றவன் என்பதையும் குறிக்கும்.

மருத்துவரின் இயல்புகள் இலக்கியங்களில் சுட்டப்படுகின்றன. மருத்துவர் என்பவர், நோயுற்றவர் வேட்கை கொள்ளும் அனைத்தையும் வழங்காமல், நோயின் தன்மைக்கு ஏற்ப மருந்துகளை ஆய்ந்து கொடுத்து நோயினைக் குணப்படுத்தும் தன்மை வாய்ந்தவராக இருந்ததை,

“அரும்பிணி உறுநர்க்கு, வேட்டது கொடா அது,
மருந்து ஆய்ந்து கொடுத்த அறவோன் போல”(24)

என நற்றிணை கூறுகிறது. நோய்க்குத் தகுந்த நன்மருந்தினை ஆய்ந்து கொடுத்து, உடலைப் பிணியிலிருந்து காத்து நன்மைபுரியும் மருத்துவரை,

“.... யாக்கையுண் மருத்துவ னூட்டிய

மருந்துபோன் மருந்தாகி''(25)

எனக் கலித்தொகை சுட்டுகிறது. திருக்குறள், நோய், நோயின் தன்மையைக் கண்டறிந்து, அந்நோயினைத் தணிப்பதற்குரிய வழிமுறைகளை,

''நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்

வாய்நாடி வாய்ப்பச் செயல்''(26)

என்று விளக்குகிறது. மருத்துவன் நோயுற்றவனின் வயதளவையும், நோயின் அளவையும், காலத்தையும் ஆராய்ந்தே செயல்பட வேண்டும் என்பதை,

''உற்றான் அளவும் பிணிஅளவும் காலமும்

கற்றான் கருதிச் செயல்''(27)

எனக் குறிப்பிடுகிறார் வள்ளுவர். இம்மருத்துவத் துறையில் மருந்தாளும் செவிலியும் முக்கியத்துவம் பெறுகிறார். நோய் குணமடையும் தன்மையானது, நோயுற்றவன், நோய் தீர்க்கும் மருத்துவன், மருந்து, அருகிலிருந்து காலம் தவறாமல் மருந்தைக் கொடுக்கும் செவிலி ஆகியோரைப் பொறுத்தே அமையும் என்பதை,

''உற்றவன் தீர்ப்பான் மருந்துஉழைச் செல்வானென்று

அப்பால்நாற் கூற்றே மருந்து''(28)

என்ற குறள் சுட்டுகிறது. நோயாளி மருத்துவரை அணுகும் முறையும் சுட்டப்பட்டுள்ளது. மருத்துவரிடமும், வழக்குரைஞரிடமும் உண்மையை மறைக்கக் கூடாது என்பது இன்றைய மொழி. மருத்துவர் கேட்கும் பொழுதே நோயாளி தன் நோயைச்

சொல்லிவிடுதல் வேண்டும். அப்பொழுதுதான் நோயின் காரணத்தையும் நோயின் தன்மையும் அறிந்து, விரைவில் குணப்படுத்தும் மருத்துவத்தை மேற்கொள்ள முடியும். இதனை,

> .............. மருத்துவன்
>
> சொல்கவென்ற போழ்தே பிணியுரைக்கும்"[29]

என்கிறது நான்மணிக்கடிகை.

## நல வாழ்விற்குத் தமிழர் வகுத்த நெறி

மருத்துவன், மருத்துவ முறைகள், மருத்துவப் பொருள்கள் என மருத்துவம் சார்ந்து பல செய்திகள் பழந்தமிழ் நூல்களில் சுட்டப்பட்டிருப்பினும், நல்லொழுக்கம், சீரான உணவுப் பழக்கம், இயற்கையோடு இயைந்த வாழ்வு போன்றவையே பழந்தமிழர் வலியுறுத்திய வாழ்வியல் நெறிகளாகும். உணவே மருந்தென்பது தமிழர் கண்ட உண்மை. உணவு உட்கொள்ளும் முறை, உணவின் தன்மை, உறங்கும் விதம், இடம்-திசை முறை போன்றவை உடல்நலத்தோடு தொடர்புடையனவாகச் சுட்டப்படுகின்றன.

## உணவு உட்கொள்ளும் முறை

படுத்துக் கொண்டும், நின்று கொண்டும், திறந்த வெளியிலும் உண்ணுதல் கூடாது. விரும்பி அதிகமாகவும் உண்ணுதல் கூடாது. கட்டிலில் அமர்ந்தபடி உண்ணுதல் கூடாது[30] என்கிறது ஆசாரக் கோவை. நாவைக் காத்து, வேண்டிய அளவு மட்டும் உணவு உண்பவனுக்கு நோய்கள் வருவதில்லை என்கிறது சிறுபஞ்சமூலம்.

இதனை,

"காத்துண்பான் காணான் பிணி"(31)

என்ற அடி பகரும். திருவள்ளுவர், உணவு உட்கொள்ளும் முறையினை மிக விளக்கமாகவே எடுத்துரைக்கிறார். முறைப்படி உணவை உட்கொண்டால் மருந்து எடுக்க வேண்டிய தேவையே ஏற்படாது என்பதை,

"மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்திய
தற்றது போற்றி யுணின்"(32)
"அற்றா லளவறிந் துண்க அஃதுடம்பு
பெற்றா னெடிதுய்க்கு மாறு"(33)

என்ற அடிகள் புலப்படுத்துகின்றன. உண்ட உணவு செரித்த பிறகு தேவையானதை ஆராய்ந்து உண்டால் வாழ்நாள் நீடிக்கும் என்றும்; உண்ட உணவானது நன்கு செரித்து, நன்றாகப் பசியெடுத்த பின்னரே முறைப்படி உணவை உட்கொள்ள வேண்டும் (குறள்.944); உடலிற்கு மாறுபாடு செய்யாத உணவினை அளவோடு உண்டு வந்தால் பிணி அண்டாது (குறள்.945); அளவான உணவு உட்கொள்வோருக்கு நிலையான இன்பம் இருக்கும்; அளவு மீறி உண்போருக்குத் துன்பம் மிகும் என்று (குறள்.946,947) உணவு உட்கொள்ளும் முறைகளை வலியுறுத்துகிறார்.

**உணவின் தன்மைக்கேற்ப உண்ணுதல்**

'உண்டது செரித்த பின் உண்ணுதல், அளவு மிகாமல்

உண்ணுதல் எனபன போலவே, கசப்பான உணவு வகைகள் இறுதியிலும், இனிக்கும் பண்டங்கள் முதலிலும், எஞ்சியவை இடையிலும் முறைப்படி உண்ணப்பட வேண்டும் (ஆ.கோ.25); உண்டபின் நீர் உட்புகாதபடி நன்றாக மூன்றுமுறை கொப்பளித்துத் துப்ப வேண்டும், நீர் குடிக்க வேண்டும், வாயை நன்றாக் கழுவ வேண்டும்' என்பன ஆசாரக்கோவையினால் வலியுறுத்தப்படுகிறது.

**உறங்கும் காலம்**

இரவில் பெரியவர்கள் குறைந்தது எட்டு மணிநேரம் உறங்க வேண்டும் என்பதும், பகல் உறக்கம் கூடாது என்பதைப் பற்றி பழந்தமிழ் நூல்கள் வலியுறுத்துகின்றன. பகல் பொழுதில் கண்ணுறக்கம் கூடாது என்று சுட்டுவதோடு (ஆ.கோ.29:1) நோயினை விரும்பி ஏற்றுக் கொள்பவரே பகலில் உறங்க ஆசை கொள்வார் என்பதை,

> **"............ பகல் வளரார்**
>
> **நோயின்மை வேண்டுபவர்"[34]**

என ஆசாரக்கோவை வலியுறுத்துகின்றது.

**உறங்கும் திசை**

படுத்துறங்கும் நேரத்தைப் போலவே திசைகளும் நம் உடல் நலத்தோடு தொடர்புடையனவாக இருக்கின்றன என்பதைப் பழந்தமிழர் நன்கு அறிந்திருந்தனர். அதனால், எத்திசையில் தலை

வைத்துப் படுக்க வேண்டும் என்பதோடு, கட்டாயம் தலை வைத்துப் படுக்கக்கூடாத திசைகளையும் சுட்டிச் சென்றனர். அவ்வகையில் மிக அதிக ஆபத்தை (நோய்) விளைவிக்கக் கூடிய திசைகளாக வடக்கும், கோணங்களும் சுட்டப்படுகின்றன. இதனை,

**"கிடக்குங்கால் கைகூப்பித் தெய்வம் தொழுது**

**வடக்கொடு கோணம் தலைசெய்யார் மீக்கோள்**

**உடற்கொடுத்துச் சேர்தல் வழி"**(35)

என்ற அடிகள் சுட்டும். வடக்கிலும், வடகிழக்கிலும் புவியின் காந்தச் சுழற்சி அதிகமாக இருக்கும். அத்திசைகளில் தலைவைத்துப் படுக்கும் மனிதர்களின் மூளை செயற்திறனை இழக்கும். இரவில் மரத்தடியில் படுக்கக்கூடாது என்பதை,

**"இராமரமும் சேரார்"**(36)

என ஆசாரக்கோவை சுட்டுகிறது. தாவரங்கள் பகலில் உயிர்க்காற்றையும், இரவில் நச்சுக்காற்றையும் வெளியிடுகின்றன என்ற அறிவியல் உண்மை புலப்படுகிறது.

## நாட்டுப்புற மருத்துவம்

நாட்டுப்புறத்து மக்கள் தாமுற்ற நோய்களைத் தீர்க்கக் கையாளும் மருத்துவ முறைகளே நாட்டுப்புற மருத்துவம் எனப்படுகிறது. வீடுதோறும் உள்ள முதியவர்களும் அனுபவசாலிகளும் சிறந்த நாட்டுப்புற மருத்துவர்களாக விளங்குகின்றனர். பட்ட இடம் பருக்கும் என்று இம்மக்கள்

எந்நோயினைப் பற்றியும் கவலைப் படாமல் வாழ்கின்றனர். நாட்டுப்புற மக்கள் பொருளாதாரத்தில் மிகவும் தாழ்ந்த நிலையில் உள்ளதால், அவர்கள் குறைந்த செலவு, நிறைந்த பயன், அபாயமற்ற முறை என்பதால் நாட்டுப்புற மருந்தினைக் கையாளுகின்றனர்.

நாட்டுப்புற மருத்துவத்தினை வீட்டு வைத்தியம், நாட்டு வைத்தியம், கைமுறை வைத்தியம், கைமருந்து வைத்தியம், பாட்டி வைத்தியம், சிடுகா மருந்து எனப் பல்வேறு பெயர்களில் அழைக்கின்றனர். இவற்றை எழுதப்படாத மருந்தியல் முறைகள் எனலாம்.

**நாட்டுப்புற மருத்துவம் – சிறப்புகள்**

நவீன மருந்துகளால் நோய் தீரும். எனினும், அதன் எதிர் விளைவுகளால் இன்னும் பல நோய்கள் தோன்றக் காரணமாகிவிடும். நவீன மருந்துகள் குணப்படுத்த முடியாத நோய்களை நாட்டுப்புற மருந்துகள் குணப்படுத்துகின்றன. நவீன மருத்துவத்தால் இதுவரை மஞ்சள் காமாலைக்குச் சரிவர மருந்து கண்டறியவில்லை. ஆனால், இந்நோய்க்குக் கரிசலாங்கண்ணியும், கீழாநெல்லியும் சிறந்த மருந்துகளாகும்.

உலக நாடுகளிலும் நாட்டுப்புற மருத்துவமே நவீன மருத்துவத்துக்கு அடிப்படையாக; உந்துதலாக அமைந்துள்ளது. குறிப்பாக அரேபியா, சீனா, மலேயா, எகிப்து போன்ற நாடுகளில் பரவலாகப் பாமர மக்களால் பல்வேறு நோய்களுக்கும்

பின்பற்றப்பட்டு வந்த நாட்டுப்புற மருத்துவ முறைகளை உலக மருத்துவ ஆய்வாளர்கள் பலர், அறிவியல் முறையில் சோதனை செய்து வெற்றி கண்டனர்[37] என்பர் க.வெங்கடேசன்.

**நாட்டுப்புற மருத்துவ மூலங்கள்**

நாட்டுப்புற மருத்துவச் செய்திகளை நாட்டுப்புற மக்களிடமிருந்து நேரடியாகக் கேட்டுத் தெரிந்து கொள்வது கடினம். ஆனால், நாட்டுப்புற மக்களது பாடல்களும், பழமொழிகளும் நாட்டுப்புற மருத்துவத்தை வெளிப்படுத்தும் மூலங்களாக உள்ளன. அத்துடன் நாட்டுப்புற மக்களின் நம்பிக்கைகளும், பழக்கவழக்கங்களும் நாட்டுப்புற மருத்துவத்தைப் போற்றிப் பாதுகாக்கும் பேழைகளாக விளங்குகின்றன.

**பாடல்களில் மருத்துவக் குறிப்புகள்**

நாட்டுப்புறப் பாடல்கள் நாட்டுப்புற மக்களின் வாழ்வியலோடு பிணைந்து விளங்குவதால் அவற்றில் தங்கள் மருத்துவ முறைகளைச் சேகரித்து வைத்துள்ளனர். இதனை சரசுவதி வேணுகோபால் கூறும் போது, “நாட்டுப்புறக் கலைகள், பாடல்கள் ஆகியன நாட்டுப்புறங்களில் வாழும் பின் தங்கிய இனத்தாரின் கைகளில் வளர்வது போல் நாட்டுப்புற மருத்துவமும் வளர்கிறது எனலாம். தனிச்சிறப்புடைய இருவேறு மருத்துவப் பள்ளிகள் (Different Schools of medicine with good reputation) செஞ்சியிலும், மதுரையிலும் இருந்திருத்தல் வேண்டும்”[38] என்று குறிப்பிடுகிறார். உடம்பு

வலிக்கு ஏற்ற மருந்தாக ஏலமும் இஞ்சிச்சாறும் விளங்குவதை,

"உடம்பெல்லாம் நோகுதம்மா? -கண்ணே
உனக்கு ஒத்தடம்தான் கொடுக்கட்டும்மா
ஏலமும் இஞ்சிச்சாறும் -கண்ணே உனக்கு
எட்டுச் சொட்டுக் கொடுக்கட்டுமா?"(39 )

என்ற அடிகள் அறையும்.

**பழமொழிகளில் மருத்துவக் குறிப்புகள்**

பழமொழிகள் நமது அனுபவத்தின் சொத்துக்கள். மக்கள் தங்கள் அனுபவங்களைச் சிந்தாமல் சிதறாமல் இவற்றில்தான் சேமித்து வைத்திருக்கிறார்கள்.

ஆற்றுநீர் வாதம் போக்கும்
அருவிநீர் பித்தம் போக்கும்
சோற்றுநீர் இரண்டும் போக்கும்

என்பது பழமொழி. ஆற்று நீரிலும் அருவி நீரிலும் உயர்ந்த தாதுப் பொருட்களும் மூலிகைச் சத்துக்களும் நிறைந்து காணப்படும். நரம்புக் கோளாறுகள் வாதநோய் காரணமாக வரக்கூடியவை. இதற்கு ஆற்று நீரில் குளிப்பது நன்மை தரும். பித்தம் தொடர்பாக வருபவை மூளைக் கோளாறு ஆகியன. இதனை நீக்க அருவி நீரில் குளிப்பது நன்மை தரும்.

**இயற்கை மருத்துவம்**

மக்களுக்குற்ற நோய்களுக்கு மூலிகை, தாது போன்ற

பொருட்களே மருந்தாகும் நிலையை இயற்கை மருத்துவம் என்று குறிப்பிடுவர். வயிற்றுப் பூச்சிகள் அழிய வேப்பிலைக் கொழுந்துடன் வெல்லம் சேர்த்து உண்பர். சீதபேதிக்கு மாதுளைப் பிஞ்சை இடித்துச் சாறாக்கிக் குடிப்பர். இவை இயற்கை மருத்துவத்திற்குச் சான்றுகளாகும்.

**முரட்டு மருத்துவம்**

நாட்டுப்புற மக்கள் சில மருத்துவ முறைகளை மிக முரட்டுத் தனமாகக் கையாண்டு வருவதனை முரட்டு மருத்துவம் என அழைக்கப்படுகிறது. காளை மாடு, பன்றி போன்ற மிருகங்களுக்கு இனப் பெருக்கத்தை தடுக்கக் 'காயடித்தல்', 'விதையெடுத்தல்' போன்ற வன்முறைகளில் ஈடுபடுகின்றனர்.

பேயோட்டுதல் என்ற பெயரில் நோயுற்றவர்களைத் துடைப்பம், உலக்கை போன்றவற்றால் கடுமையாக அடித்துத் துன்புறுத்துகின்றனர்.

விசமிறக்குதல் என்ற பெயரில் கடிவாய்களைக் கத்தியால் கீறிவிடுதல், நாய் கடித்தால் செருப்பால் அடிப்பதும் முரட்டு மருத்துவங்களாகும்.

**பழங்குடி மக்களும் மூலிகைகளும்**

பழங்குடி மக்கள் தாவரங்களைப் பற்றிய நல்லறிவு படைத்தவர்கள். இவர்கள் காடுகளில் உள்ள பழங்கள், குறிப்பாகக் காட்டு வாழைப்பழம் மற்றும் மருந்தாகப் பயன்படும் கடுக்காய்,

வேம்பாடம், ஆவாரம்பிசின், தேன்மெழுகு, தேன் போன்றவற்றைச் சேகரித்து வாழ்கிறார்கள். இம்மலைப் பகுதியில் வாழும் இவர்களில் சிலர் மருத்துவர்களாகவும் விளங்குகின்றனர். இம்மக்கள் மருந்தாகப் பயன்படுத்தி வரும் தாவரங்களை நேரில் பார்த்தும், மருத்துவர்களைச் சந்தித்தும் திரட்டிய செய்திகளைக் கொண்டு, மூலிகையின் தமிழ்ப்பெயர், மலைமக்கள் பயன்படுத்தும் பெயர், அதன் பயன்பாடு ஆகியவை வரிசைப் படுத்தப்பட்டள்ளன.

*1.* **அற்றுரவி (நடுக்கி)** – தண்டிலிருந்து பிழிந்து எடுக்கப்பட்ட சாற்றைக் காய்ச்சலுக்கு மருந்தாக உட்கொள்கின்றனர்.

*2.* **உண்ணிச்செடி (தூசி)** இலையினை அரைத்த குழம்பு தோல் படைக்கும், தோலில் ஏற்படும் சிறுசிறு தடிப்புக்கும் மருந்து.

*3.* **உத்தாமண (வேலிப்பருத்தி)** உத்தாமணி இலையும் சீத்தில் இலையும் சேர்த்து அரைத்து அத்துடன் ஒரு கோழி முட்டையையும் நன்றாகக் கலந்து உடல் வலிக்கு மருந்தாக உட்கொள்கின்றனர்.

*4.* **காக்கணம் (வெள்ளைக்காக்கணம்)** இச்செடியின் வேரும் வசம்பும் சேர்த்துத் தண்ணீரில் கொதிக்க வைத்து வடித்த சாறு இருமலுக்கு மருந்து. காக்கணம் இலையை அரைத்த குழம்பு உடம்பில் ஏற்படும் கட்டிகளுக்கும் கொப்புளங்களுக்கும் மருந்து.

*5.* **காட்டுக்கருணை (காட்டுச்சேனா)** காட்டுக்கருணைக் கிழங்குடன் கொடுக்காப்புளி விதையின் தோலும் சேர்த்து அரைத்த குழம்பு விரை வீக்கத்திற்கு மேல்பூச்சு மருந்து.

*6.* **காட்டுப்புகையிலை (தீல்குஸ்)** இதன் தண்டுப் பாகத்திலிருந்து

உரித்தெடுக்கப்படும் தோலினைப் பல்வலி உள்ள இடத்தில் வைக்கப் பல் வலி குறைகிறது. இதன் இலை மாடுகளுக்கு ஏற்படும் கழிச்சல் நோய்க்கு மருந்து.

*7.* **காட்டு முருங்கை ( காட்டு முருங்கி)** பழங்குடிகள் இந்த மரத்தின் முதிர்ந்த பட்டையினை இடித்துச் சாறு பிழிந்து அந்தச் சாற்றுடன் சிறிதளவு மிளகுப்பொடி சேர்த்துக் கருச்சிதைவு மருந்தாகப் பயன்படுத்துகின்றனர். கர்பமுற்ற முதல் மூன்று மாதங்களுக்குள் சாப்பிட்டால் இது பயனுள்ளதாக இருக்கும்.

*8.* **காட்டுள்ளி (காட்டுள்ளி)** காட்டுள்ளியை நேராக வெட்டி, அதில் சிறிதளவு உப்பு சேர்த்து வைத்து, தீயில் இட்டுச் சுட்டுக் கால் ஆணிக்குக் காலில் வைத்துக் கட்டுகின்றனர்.

*9.* **கீழாநெல்லி (கீழாநெல்லி)** இதனை மஞ்சள் காமாலை நோய்க்கு மருந்தாகப் பயன்படுத்துகின்றனர். இச்செடியின் இலையை அரைத்துத் தேங்காய்ப் பாலில் கலந்து உட்கொள்கின்றனர்.

*10.* **கொள்ளு (கொள்)** பெண்களுக்கு மாதவிடாயின் பொழுது வயிற்று வலியைக் குறைக்க, கொதிக்க வைத்தக் கொள்ளுச்சாற்றைக் கொடுக்கின்றனர்.

*11.* **சிறுதும்பை (கொத்தல்ஸ்திபு)** இலையினை அரைத்தக் குழம்பாக்கித் தலைவலிக்கு நெற்றியின் இருபக்கங்களிலும் பூசுகின்றனர். சாற்றினைச் சிறியம்மை நோய்க்கு மருந்தாக உடம்பின்மீது தெளிக்கின்றனர். இலையையும் பூவையும் சேர்த்து அரைத்து அதனை வெறிநாய் கடிக்கு மருந்தாகக் கொடுக்கின்றனர்.

12. **சிறுநெருஞ்சி (நெருஞ்சி)** இதன் விதையினைப் பொடி செய்து தண்ணீரில் இட்டுக் கொதிக்க வைத்து வடிகட்டிய நீர் சிறுநீரகம் தொடர்பான நோய்களுக்கு மருந்தாகப் பயன்படுகிறது.

13. **சீரகம் (சீரகம்)** குழந்தைப்பேறு காலத்தில் ஏற்படும் வலி குறைக்கச் சீரகச்சாறும் சுத்தமான நெய்யும் மருந்து.

14. **சுடக்குத் தக்காளி (உரித்த துவர்)** பழுத்த பழத்தை உணவாக உட்கொள்கின்றனர். இலையை அரைத்து அந்தக் குழம்பினைத் தோலில் ஏற்படும் கொப்பளங்களுக்கு மருந்தாகப் பூசுகின்றனர்.

15. **செம்பருத்தி (செம்பருத்தி)** செம்பருத்திப் பூவின் மொட்டினைப் பச்சரிசி, தேங்காய்ப்பால், பனைவெல்லம் இவற்றுடன் சேர்த்துக் கஞ்சியாக்கி அதனைப் பெண்களின் குழந்தைப் பேற்றிற்குப் பின்னால் ஏற்படும் குருதிப் போக்கினைத் தடுக்கும் மருந்தாகப் பயன்படுத்துகின்றனர்.

16. **தண்ணீர்விட்டான் கிழங்கு (சதாவரி)** குழந்தைகளுக்கு ஏற்படும் கனை நோய்க்கு மருந்தாகப் பயன்படுகிறது.

17. **தான்றிக்காய் (கடுக்காய்)** இதன் காயினைப் பொடி செய்து தாய்ப்பாலில் கரைத்துக் குழந்தைகளுக்கு ஏற்படும் வயிற்றுப் போக்குக்கு மருந்தாகக் கொடுக்கின்றனர்.

18. **தென் பச்சை (பொன்னாரி)** இது பல்வலிக்கு மருந்தாக வாயில் இட்டு மெல்லப்படுகிறது. வெட்டுக்காயங்களுக்கும் மருந்தாகப் பயன்படுத்துகின்றனர்.

19. **தேள் கொடுக்காய் (நாகவிடக்காய்)** இதன் விதையைப் பாம்புக்

கடிக்கு மருந்தாகப் பயன்படுத்துகின்றனர். விதையினைச் சிறுநீரில் அரைத்துக் கொடுக்கின்றனர். ஆணுக்குக் கொடுப்பதாக இருந்தால் பெண்ணின் சிறுநீரிலும், பெண்ணுக்கு ஆணின் சிறுநீரிலும் அரைத்து உட்கொள்கின்றனர்.

*20.* **தும்பை (சாகிப்)** *இலைச் சாற்றினைத் தலைவலிக்கு மருந்தாகப் பயன்படுத்துகின்றனர்.*

*21.* **தூதுவளை (தூதுவளை)** *இதன் சாற்றைத் தண்ணீரில் இட்டுக் கொதிக்க வைத்து வடிகட்டி இருமல் நோய்க்கு மருந்தாகப் பயன்படுத்துகின்றனர்.*

*22.* **நஞ்சறுப்பான் (நஞ்சறுத்தான் பொடி)** *இதன் இலையையும் சிறு வெங்காயத்தையும் சிறிதளவு மிளகையும் வைத்து அரைத்து இளைப்பு நோய்க்கு (ஆஸ்துமா) மருந்தாகக் கொடுக்கின்றனர்.*

*23.* **நன்னாரி (நறுநட்டி)** *நன்னாரி வேரும், சதாவரி வேரும் சேர்த்துத் தேங்காய்ப் பாலில் நன்றாகக் கொதிக்க வைத்து வடிகட்டி, உடல் குளிர்ச்சிக்கும் ஊட்டத்திற்கும் மருந்தாகப் பயன்படுத்துகின்றனர்.*

*24.* **நிலப்பனங்கிழங்கு (நிலப்பனா)** *இதன் கிழங்கை நன்றாகப் பொடி செய்து தேனுடன் கலந்து ஆண்களுக்குத் தாதுவிருத்திக்கு மருந்தாகப் பயன்படுத்துகின்றனர்.*

*25.* **புளிக்கீரை (பசால்கீர்)** *தண்டும் இலையும் உணவு. இது வயிற்றில் உள்ள கிருமியை வெளியேற்றும்.*

*26.* **பெருப்பி (மாண்டு ஈசி)** *இந்த மரத்தின் கனத்த பட்டையினை இடித்துச் சாறு பிழிந்து அந்தச் சாற்றுடன் சிறிதளவு தேன் கலந்து*

உட்கொள்ள வேண்டும். மாதவிடாய்க்குப் பின் தொடர்ந்து மூன்று நாட்கள் மாலை வேளையில் சாப்பிட்டால் பெண்கள் கருத்தரிக்க மாட்டார்கள்.

**27. பேய்மிரட்டி (கருந்தும்பா)** இதன் இலையை நன்றாகக் காய வைத்துப் பொடித்துப் பசும்பாலுடன் கலந்து வயிற்றிலுள்ள பூச்சிகளை ஒழிக்க மருந்தாகப் பயன்படுத்துகின்றனர்.

**28. பேராத்தை (அரத்தை)** இதன் தரைகீழ்த் தண்டினைத் தண்ணீரில் கொதிக்க வைத்து வடிகட்டி வாதநோய்க்கும் காய்ச்சலுக்கும் மருந்தாகப் பயன்படுத்துகின்றனர். அரத்தை, இஞ்சி, முருங்கப்பட்டை, முள்முருங்கப்பட்டை ஆகியவற்றைத் தண்ணீரில் இட்டுக் கொதிக்க வைத்து வடிகட்டி வாந்தி, பேதி நோய்களுக்கு மருந்தாகப் பயன்படுத்துகின்றர்.

**29. மணத்தக்காளி (மண்தக்காளிகீர்)** வயிற்றுவலிக்கு இலைகளும் பழுத்த பழங்களும் மருந்தாகப் பயன்படுகின்றன.

**30. மிளகரணை (வசீர்)** இலையைத் தண்ணீர் விட்டு அரைத்துக் குழம்பாக்கி அதனை உடல்வலி உள்ள இடங்களில் பூசுகின்றனர்.

**31. முடக்கறுத்தான் (உழிஞை)** இலையை இடித்துச் சாறு பிழிந்து, கஞ்சித் தண்ணீருடன் சேர்த்துக் கர்ப்பமுற்றிருக்கும் பெண்களுக்குக் கொடுக்கின்றனர். குழந்தைப்பேற்றின் போது ஏற்படும் வலியைக் குறைக்கவும், பிரசவம் எளிதாக நடக்கவும் உழிஞை இலைச் சாற்றுடன் சிறிது பெருஞ்சீரகத்தையும் சேர்த்துத் தண்ணீரில் கொதிக்க வைத்து வடிகட்டி உட்கொள்கின்றனர்.

*32.* **முள்ளுக்கீரை (சிறுகீரை)** இலையை வாயிலும் வயிற்றிலும் உள்ள புண்களை ஆற்றவல்ல மருந்தாகப் பயன்படுத்துகின்றனர்.

*33.* **மூக்குத்திப்பூண்டு (தூதக்கீடு)** இளம் தண்டு, இலை இவற்றைச் சிறிதளவு உப்பு மஞ்சளுடன் அரைத்து அதனைச் சொறி சிரங்குகளுக்கு பயன்படுத்துகின்றனர்.

*34.* **வல்லாரை (குடியீர்)** இலையுடன் சிறிதளவு மிளகும் உப்பும் சேர்த்து அரைக்கப்பட்ட குழம்பு உடல் சூடு தணிக்கும்.

*35.* **வில்வம் (வில்லுவம்)** இதன் பழம் வயிற்றுப் பொருமலுக்கும் வயிற்றுக் கழிச்சலுக்கும் மருந்தாகப் பயன்படுகிறது.

*36.* **விலாரி (விளாரி)** இலையினைச் சிறிது தண்ணீர் விட்டு அரைத்து அந்தச் சாற்றினை வெட்டுக் காயத்தைக் குணப்படுத்தும் மருந்தாகப் பயன்படுத்துகின்றனர். காயத்தைச் சுற்றி கட்டுப்போட இலையை பயன்படுத்துகின்றனர். விலாரி இலையையும் உண்ணிச் செடியின் காயினையும் சேர்த்துத் (சுண்ணாம்பு இல்லாமல்) தாம்பூலம் போல் மென்று சாப்பிடுகின்றனர்.

*37.* **வெள்ளைக்குன்றி (வெள்ளைக்குன்னி)** இதன் வேருடன் சிறிதளவு இஞ்சியும் வசம்பும் சேர்த்துத் தண்ணீரில் கொதிக்க வைத்து இருமலுக்கு மருந்தாகப் பயன்படுத்துகின்றனர்.[40]

பழங்குடி மக்களில் சிலருக்கு மரபு வழி மருத்துவமும், பச்சிலை மூலிகை பற்றியும் தெரிந்திருக்கிறது. காடர்கள் குழந்தை பெறாமல் இருக்கவும், குழந்தை பெறுவதற்கும் உரிய மூலிகைகளை அறிந்திருக்கின்றனர்.

தொன்னாவேர், வெட்டிவேர், வெங்காவேர் ஆகிய செடிகளின் வேரைக் காயவைத்துப் பொடித்து, அதனுடன் மான்கொம்பின் பொடியையும் சேர்த்து நல்லகா என்ற மாத்திரையைத் தயார் செய்து தீட்டான பெண்களுக்கு 9-10 நாட்களுக்குக் கொடுப்பர். இதைச் சாப்பிடும் போது, புளி, எலுமிச்சை சேர்க்கக்கூடாது. இந்த மருந்து கர்ப்பத்தைத் தற்காலிகமாக நிறுத்தும். நல்லகா மாத்திரை தின்றவருக்கு மீண்டும் குழந்தைபேறு வேண்டுமென்றால் ஒரு கசாயம் கொடுக்கின்றனர். வேளி, தான்னி, பூவம் ஆகிய மூன்று செடிகளின் வேரை, இரண்டு லிட்டர் தண்ணீரில் கொதிக்க வைத்து 1/16ஆக எடுத்து பெண்ணுக்கு வெறும் வயிற்றில் 3 நாட்கள் கொடுத்தால் போதும். மலையின மக்களிடம் மகப்பேற்றின் போது, எளிதாகக் குழந்தை பிறப்பதற்குரிய மருந்து உண்டு. மலையாளிகள் கருத்தடை மற்றும் கருச்சிதைவிற்குப் பயன்படுத்தும் மூலிகைகளை தற்கால ஆய்விற்கு உட்படுத்தி அதனைப் பயன்பாட்டிற்குக் கொண்டுவரலாம்.

மலையின மக்கள் மூலிகைகளைப் பயன்படுத்தும் முறை ஏனைய மக்கள் பயன்படுத்தும் முறையிலிருந்து மாறுபட்டுள்ளது. தற்போது மாற்றம் காணப்படுவதையும் அறியமுடிகிறது.

**இந்துமலையாளிகளின் குழந்தை மருத்துவம்**

இல்வாழ்க்கை இனிமை பெற குழந்தைச செல்வமே காரணமாகும். பெற்றக் குழந்தையைப் பேணிக் காப்பது

பெற்றோரது கடமையாகும். மானிடராய் பிறத்தல் அரிது; அதனினும் அரிது கூன், குருடு, செவிடு, பிணி நீங்கிப் பிறத்தல் அரிது என்பது ஔவையின் கூற்று. குழந்தையைப் பெற்றெடுத்தால் மட்டும் போதாது. அவர்களுக்கு ஏற்படும் சிறுசிறு நோய்களைத் தீர்க்கும் முறையையும் தெரிந்து வைத்திருப்பது இன்றைய பெற்றோர்களின் தேவையாகும்.

**வயிற்றோட்டம் (வயிற்றுப்போக்கு)**

வயிற்றுப்போக்கு, பேதி என்பன பெருங்குடல் பாதிப்பின் காரணமாகத் தோன்றும் நோயாகும். அடிக்கடி நீர்த்த நிலையில் கழிவு போவதை வயிற்றோட்டம் என்பர். இரத்தம் கலந்த சீதத்துடன் போவதை வயிற்றுக் கடுப்பு அல்லது பேதி என்பர். குழந்தைகளுக்கு ஏற்படும் வயிற்றோட்டத்திற்கு எளிதில் சீரணிக்க முடியாத உணவு வகைகள் கொடுக்கப்படுவதே முக்கிய காரணமாகக் கூறலாம். தாய்ப்பால் ஊட்டப்படாத குழந்தைகளுக்கே இந்நோய் மிகுதியாகத் தோன்றுகிறது. பாலுட்டும் தாயின் மன உணர்வுகளில் ஏற்படும் மாற்றங்களும், அவளது உணவு முறையில் ஏற்படும் மாற்றங்களும் குழந்தைகளுக்கு வயிற்றோட்டத்தைத் தோற்றுவிக்கலாம். இந்நோய்க்குக் கொல்லிமலை மலையாளிகள் பலவகையான மருத்துவ முறைகளை கையாளுகின்றனர்.

1. நீர்முள்ளி விதையை இடித்துப் பசும்பாலிலோ அல்லது நீரிலோ கலந்து தினமும் ஒரு சங்களவு காலை, மதியம், மாலை என

மூன்று வேளையும் கொடுக்கிறார்கள்.

*2.* நிலக்கொழுஞ்சி, நிலாவரை, பெரியாநங்கை, சிறியாநங்கை, சிறிய வெங்காயம் ஆகியவற்றை ஒன்றாக சேர்த்தரைத்து, அதன் சாற்றை காலை, மாலை என இருவேளை அரை சங்களவு கொடுத்து வந்தால் குணமாகும் என்கிறார்கள். இம்முறையைச் செய்யும் போது குழந்தையின் தாய் உணவில் உப்பு சேர்க்காமல் சாப்பிட வேண்டும். மேலும் தாயும் மேற்கூறப்பட்ட மருந்தைக் குடிக்க வேண்டும்.

*3.* நாய்துளசியை அரைத்து அதன் சாறுடன் எலுமிச்சம் பழத்தின் சாற்றையும் சேர்த்துக் கொடுத்து வந்தால் வயிற்றோட்டம் நிற்கும் என்கிறார்கள்.

*4.* புளிச்சகீரையை அரைத்து அதன் சாற்றை அரைச் சங்களவு கொடுத்து வந்தால் வயிற்றோட்டம் நிற்கும் என்கிறார்கள்.

*5.* பாகற்காய் செடியை அரைத்து அதன் சாற்றை அரை சங்களவு கொடுத்து வந்தால் குணமாகும் என்கிறார்கள்.

*6.* சிறுகீரையை அரைத்து அதன் சாற்றில் சிறிது ஓமம் சேர்த்துக் குடித்தால் குணமாகும் என்கின்றனர்.

*7.* செங்குமரிக் கற்றாழையின் சோற்றைக் காயவைத்து இடித்துப் பொடி செய்து வேளை ஒன்றுக்கு இரண்டு கைவிரலளவு பசும்பாலில் கலந்து கொடுத்தால் வயிற்றுப்போக்குக் குணமாகும்.

*8.* வேப்ப மரப்பட்டையின் மேல் தோலை நீக்கிவிட்டு அதை நன்றாக அரைத்துப் பொட்டுக் கடலையளவு தண்ணீரில் கலந்து கொடுத்தால் பேதி நிற்கும் என்கின்றனர்.

**வாந்தி**

*குழந்தை வாந்தி எடுப்பதற்குப் பல காரணங்கள் சொல்லப் படுகின்றன. மாறுபட்ட உணவு முறைகளால் ஏற்படும் ஒவ்வாமை, தேவைக்கு மீறிய உணவு போன்ற காரணங்களால் குழந்தைக்கு வாந்தி ஏற்படலாம். குழந்தைகள் சிலருக்கு அடிக்கடி வாந்தி வந்து கொண்டே இருக்கும். பசியின் தூண்டுதலால் குழந்தை பால் அருந்தும் போது சிறிதளவு, காற்றும் குழந்தையின் வயிற்றுக்குள் போக வாய்ப்புள்ளது. இதன் காரணமாக இரைப்பையினுள் அதிக அழுத்தத்தை ஏற்படுத்திக் குழந்தை பாலை வெளித்தள்ளவும் நேரிடும். இவ்வகை வாந்தி சிறிது நேரத்தில் எவ்வித மருத்துவமும் செய்யாமலேயே தானே நின்று விடும். அவை பின் வருமாறு:*

*1. இந்நோய்க்கு வசம்பை அரைத்துத் தாய்ப்பாலில் கலந்து கொடுத்தால் வாந்தி நிற்கும்.*

*2. மஞ்சள் வசம்பு ஆகியவற்றை அரைத்து அதன் சாற்றைக் குழந்தையின் நாக்கில் இரண்டு அல்லது மூன்று சொட்டு வைக்க வாந்தி நிற்கும்.*

*3. வாழைமரத்திலுள்ள தேரைப் பூச்சியை எடுத்தரைத்துப் பசும் நெய்யில் வறுத்துக் காலை, மதியம், மாலை என மூன்று வேளையும் கொடுத்து வந்தால் வாந்தி நிற்கும்.*

*4. சிறிது கிராம்பைத் தண்ணீரில் வேக வைத்து வடிகட்டி அத்தண்ணீரை ஒரு தேக்கரண்டி அளவு கொடுத்து வந்தல் வாந்தி நிற்கும்.*

**சளி**

நோய் எதிர்ப்புச் சக்தி குறைவினால் விரைவில் தொற்றிக் கொள்ளும் நோய்களுள் சளியும் ஒன்று. மூன்று அல்லது நான்கு நாட்களுக்குள் தானாகவே குணமாகிவிடும். கொல்லிமலை மலையாளிகள் இந்நோய்க்குப் பல்வேறு மருத்துவமுறைகளைக் கையாளுகின்றனர்.

1. கருந்துளசிச் சாற்றை அரைச் சங்களவு கொடுத்து வந்தால் சளி முறியும்.

2. பூண்டு, சிறிய வெங்காயம் ஆகியவற்றை அரைத்து விளக்கெண்ணெய்யில் காய்ச்சிச் சூடு தணிந்த பின் உச்சந்தலையில் தேய்த்து வரச் சளி குணமாகும்.

3. கோழிக்குஞ்சு இரசமோ, நண்டு இரசமோ, கொள்ளு இரசமோ, மிளகு இரசமோ வைத்துக் குழந்தையின் தாய் குடித்து வந்தால் குழந்தைக்குச் சளி முறியும்.

4. எலுமிச்சை மர இலையின் கொழுந்து, நார்த்தங்காய் இலைக் கொழுந்து ஆகியவற்றுடன் மஞ்சளையும் சேர்த்து இடித்து விளக்கெண்ணையில் வதக்கி உச்சந்தலையில் தேய்த்துவரச் சளி முறியும்.

5. கொத்தமல்லியையும் சித்ரத்தையையும் தண்ணீரில் கொதிக்க வைத்து வடிகட்டிக் காலை, மதியம், இரவு என மூன்று வேளையும் இரண்டு சங்களவு கொடுத்து வந்தால் சளி முறியும்.

6. வெங்காயம், மஞ்சள் ஆகியவற்றை அரைத்து விளக்கெண்ணையில் வதக்கி உச்சந்தலையில் தேய்த்துவரச் சளி

முறியும்.

*7.* செங்குமரிக் கற்றாழையைக் காயவைத்து, இடித்துப் பொடி செய்து அதில் இரண்டு விரல் அளவு எடுத்துத் தேனிலோ, பசும்பாலிலோ கலந்து கொடுத்து வரச் சளி முறியும்.

**இருமல்**

சளியின் தன்மை கூடும்போது சில வேளைகளில் வறட்டு இருமலும் சேர்ந்து கொள்ளும். இதற்கு மலையாளிகள் பின்வரும் மருந்துகளைக் கொடுக்கின்றனர்.

*1.* பச்சை நன்னாரி வேரை அரைத்துப் பசும்பாலில் கலந்து கொடுத்து வந்தால் குணமாகும்.

*2.* பனங்கற்கண்டை இடித்துக் கொடுக்க இருமல் நிற்கும்.

*3.* விளக்கெண்ணையைக் காய்ச்சி சூடு தணிந்த பின் நடு நாக்கில் தடவி வரக் குணமாகும்.

*4.* தூதுவளைச் செடியைக் காயவைத்துப் பொடியாக்கி அதனுடன் சிறிய வெங்காயத்தையும், சிறிதளவு கல்லுப்பையும் சேர்த்து நல்லெண்ணையில் இட்டுக் காய்ச்சி, சூடு தணிந்த பின் மூன்று நாட்கள் தினமும் மூன்று வேளை நாக்கில் ஒரு சொட்டு அளவு கொடுக்க இருமல் தீரும்.

**கக்குவான்**

இந்நோய் தொற்றுநோயாகக் கருதப்படுகிறது. இந்நோய்

*கண்ட குழந்தைகளுக்குத் தும்மலும், இருமலும் நீர் நிறைந்த கண்களும், சோம்பலும், இரவில் தூக்கமின்மையும் இருக்கும். இந்நோய்க்குரிய மருந்துகள் பின்வருமாறு:*

*1. நாயுருவித் தழையை அரைத்துக் கொடுத்து வந்தால் கக்குவான் குணமாகும்.*

*2. அன்னாசிப்பழத்தின் சாற்றில் தேங்காய் எண்ணெய் சேர்த்து ஒரு சட்டியிலிட்டுச் சூடு செய்து தாங்கும் சூட்டில் குழந்தைக்குக் கொடுத்துவர இந்நோய் தீரும்.*

*3. சீம்பைக் காயை நூலில் கோர்த்து, குழந்தையின் கழுத்தில் கட்டி வைத்தால் குணமாகும்.*

*4. கரடிக்கறியை நன்கு கறுக்கி, அதனுடன் தேனைச் சேர்த்து குழந்தைக்குக் கொடுத்தால் குணமாகும்.*

*5. வௌவாலின் மீது விளக்கெண்ணெய் தடவி, நெருப்பில் வாட்டி, அரைத்துப் பாலுடன் கலந்து கொடுத்தால் குணமாகும்.*

**தேள்கடி**

*மலையாளிகளில் சிலர் தேள்கடிக்கு மந்திரங்களைக் கூறுகின்றனர். தேள்கடித்த இடத்தில் மருந்து வைப்பதில்லை. 'அத்தி குச்சி எவள் சாண் கிரி கிரி சலசல' என்று தேள்கடித்த இடத்தில் விளக்குமாற்றுக் குச்சியை வைத்து அடித்து 108 தடவை சொல்லச் சொல்கிறார்கள். அவ்வாறு கூறினால் நஞ்சு இறங்கிவிடும் என நம்புகின்றனர். சிலர் தேள்கடிக்குப் புகையிலையை மெல்லச்*

சொல்கிறார்கள்.[41]

## வேலன் வெறியாட்டுதல்

மன நலத்திற்கான மருத்துவ முறைகள் தேற்றுதல், ஆற்றுப்படுத்துதல், சந்து செய்வித்தல், வெறியாட்டுதல் போன்ற முறைகளில் அமைகின்றன. பழங்குடி மக்கள் வெறியாடுதல் முறைகளைப் பயன்படுத்தி நோயுற்றவர்களை ஆற்றுப்படுத்தும் நிகழ்ச்சிகளும் காணப்படுகின்றன.

தலைவியின் காதல் நோய் நீங்க முருகனை அழைத்து ஆற்றுப்படுத்துவதாகச் சங்கப்பாடல்கள் வெறியாடல் செய்திகளைப் பதிவு செய்துள்ளன. களவுக் கால வாழ்க்கையில் பிரிவு நேரிடும் போது தலைவிக்குக் காதல் நோய் ஏற்படுவதான ஒரு நம்பிக்கை சங்கச் சமூகத்தில் நிலவி இருந்தது. காதல் நோயால் மெலிவுற்ற தலைவியின் நிலை கண்டு தாயர் மிக வருந்துவர். இந்நோய்குரிய காரணத்தை அறிய வேலன் வரவழைக்கப் பெறுவான். அவன் கழங்கு முதலிய குறிகளின் மூலம் இந்நோய் முருகனால் வந்தது என்று கூறுவான். முருகனால் அணங்கப் பெற்ற பெண்ணின் நோய் நீங்க வெறியாடல் நிகழ்த்தப் பெறும். வெறியாட்டின் மூலம் பெண்ணைப் பிடித்திருந்த நோய் விலக்கப் பெறும். பெண்ணிடமிருந்து முருகனை விலக்கக் குருதிப்பலி இட்டு முருகன் ஆற்றுப்படுத்தப்படுவான். இதனை,

“மென்தோள் நெகிழ்த்த செல்லல் வேலன்

வென்றி நெடுவேள் என்னும் அன்னையும்

அதுவென உணரும்"[42]

என்ற குறுந்தொகைப் பாடலால் அறியமுடிகிறது. இந்நிகழ்ச்சிகளைப் பல பாடல்கள் விவரித்துள்ளன.

களவு அலராதல், காமம் மெய்ப்படத் தோன்றுதல், உடல் மெலிதல், பசலை படர்தல் முதலியன உள்ளிட்ட காமநோய் தலைவிக்குத் தலைவனாலும் அதாவது களவுக் காலத்தில் தலைவனாலும் நேரும், முருகனாலும் நேரும். முருகனால் நேரிட்ட இந்த நோயைப் போக்கவே வெறியாடல் நிகழ்த்தப்பட்டது.

இந்த வெறியாடல் நாட்டுப்புற பூசாரிகளால் நிகழ்த்தப் பெறும் மந்திர வழிபாடாக அமைகிறது. திருநீறு மந்திரித்தல், வேப்பிலை அடித்தல், பேயோட்டுதல் முதலிய மந்திரச் சடங்குகள் நடைபெறுகின்றன. பழங்குடியின மக்களிடமும் இவ்வகையான சடங்கு முறைகள் நிகழ்த்தப் பெறுகின்றன. இத்தகைய சடங்குகளைச் 'சடங்கு முறைகள்' என்ற இயலில் விரிவாக எடுத்துரைக்கப் பட்டுள்ளது.

இத்தகைய வெறியாடலின் பின்னணியில் வசியப்படுத்துதலும் இடம்பெறுகின்றன. "வசியப்படுத்துதலில் மந்திரங்கள் மட்டுமின்றி மருந்துகளும் பயன்பட்டுள்ளதை அறியமுடிகிறது. மருந்தில் ஊமத்தைச் சாறு முக்கியத்துவம் பெற்றுள்ளது. ஊமத்தைச் சாறு உன்மத்தத்தை உண்டாக்கும். இதனால் மதிமயக்கமும், வெறியும், மிக்க காமமும் தோன்றும் என்று சித்த மருத்துவம் கூறுகின்றது. இது

இக்காலத்து நாட்டுப்புற வழக்காற்றில் 'மருந்து வைத்தல்' என்பதோடு நெருங்கிய தொடர்புடையது"[43] என்பர் சிலம்பு.நா.செல்வராசு.

மலையாளிகளின் மந்திரச் சடங்கு திருநீறு போடுதல், பேயோட்டுதல், குறிசொல்லுதல் போன்றவற்றோடு தொடர்புடையதாக இருக்கிறது. (எ.கா. கொல்லிமலை மாசி பெரியண்ணசாமி கோயில் விழா) மருந்து வைத்தல் அல்லது வசியம் செய்தல் இப்பகுதியில் இல்லை என்றும் கூறுகிறார்கள்.

மகப்பேறு எளிதாக இல்லாவிட்டால் சாமி கேட்கும் பழக்கம் இம்மலையாளிகளிடம் காணப்படுகிறது. கோயில் எல்லையில் தகாத காரியங்கள் செய்தாலும், பேசினாலும் பேறு காலத்தில் துன்பம் ஏற்படுமாம். இச்சந்தர்ப்பத்தில் பூசாரி சூடம், சாம்பிராணி வைத்துத் தெய்வங்களை அழைத்து வாக்குச் சொல்லுவான். பூசாரிக்கு அருள் வருவதும் உண்டு. பெரும்பாலும் பூசாரி ஏதாவது ஒரு குத்தம் (குற்றம்) சொல்லி, அதற்குப் பரிகாரம் சொல்வான். இவ்வாறாக வெறியாட்டுதல் நிகழ்ச்சி சாமி அழைத்தல் என்ற நிகழ்வோடு ஒன்றிப்போகிறது.

**தொகுப்புரை**

இயற்கையையும், இயற்கையோடு இயைந்த பொருள்களையும் மருந்துகளாக்கி சங்ககால மக்கள் இன்ப வாழ்வு வாழ்ந்துள்ளமை அறியப்பெறுகிறது.

பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் மருத்துவம் குறித்தும், மருந்து வகைகள் குறித்தும் மிகுதியாகப் பேசப்படுகிறது. திரிகடுகம், சிறுபஞ்சமூலம், ஏலாதி என்று மருந்துகளின் தன்மைகளையும் தேவைகளையும் முன்வைத்து நூல்களின் தலைப்புகளும், மருந்தியல் சிறப்பால் ஆசிரியர்களின் பெயர்களும் அமைந்திருந்ததைக் காணமுடிகிறது.

உடம்பை வளர்ப்பதற்கு உணவை உட்கொள்ளாமல் உயிரைப் பேணுதற்கு உணவு உட்கொள்ளும் தன்மை, முறையான உறக்கம், இயற்கையோடு இயைந்த வாழ்வியல் போன்றவை மனிதனை நோயிலிருந்து காத்துச் செம்மைப்படுத்தும் என்பதும் பெறப்படுகிறது.

சித்தர்களின் காலத்தில் தமிழ் மருத்துவத்தின் பயன்பாடும், ஆய்வும் சிறப்பான இடத்தில் இருந்தன. சித்தர்களின் மருத்துவத்தை இன்றும் பழங்குடியின மக்கள் தொடர்ந்து பயன்படுத்தி வருவதும் அறியலாகிறது.

இயற்கையோடு வாழ்ந்துவரும் மலையாளிகள் தங்களுக்கு ஏற்படும் சிறுசிறு நோய்களுக்குத் தாங்களாகவே மருத்துவம் செய்து கொள்கிறார்கள். பிரசவம் மற்றும் அவசரகாலச் சிகிச்சைக்குத் தற்போது அரசு மருத்துவமனைகளை நாடுகின்றனர். முன்பு மருத்துவச்சிகளை வைத்து பிள்ளைப்பேறு பார்த்தார்கள். மகப்பேறு பார்க்கத் தனியாக மருத்துவச்சி கிடையாது. மருத்துவமனைகளில்

பேறுகாலம் நடக்கிறது.

நீண்ட நாட்கள் குணமாகாத நோய்களுக்கு மலையாளிகள் பூசாரிகளை நம்புகின்றனர்.

குழந்தைகளுக்கு ஏற்படும் நோய்களுக்குத் தாய்மார்கள் மருந்து உண்கிறார்கள். மருந்து தாய்ப்பாலின் வழியாகக் குழந்தைகளுக்குப் புகட்டப்படுகிறது.

மலையில் உள்ள மூலிகைகளைப் பற்றியும் அதன் பயன்பாடு பற்றியும் அறிந்து வைத்துள்ளனர். சித்த மருத்துவர்களும் இருக்கிறார்கள்.

புதிய புதிய நோய்களின் வருகையால் புதிய மருந்துகள் கண்டுபிடிப்பது மிக அவசியமாகக் காணப்படுகிறது. பழங்குடி மக்கள் பயன்படுத்தும் மூலிகைகளை ஆராய்ந்து, புதிய நோய்களுக்கு மருந்து கண்டுபிடிக்க அம்மூலிகைகள் உதவியாக இருக்கும்.

மன நலத்திற்கான மருத்துவ முறைகள் தேற்றுதல், ஆற்றுப்படுத்துதல், சந்து செய்வித்தல், வெறியாட்டுதல் போன்ற முறைகளில் அமைகின்றன. பழங்குடி மக்கள் உடல் நலத்திற்கான மருத்துவ முறைகள் மட்டுமல்லாமல் வெறியாடுதல் போன்ற முறைகளைப் பயன்படுத்தி மனநோய்களைப் போக்கி வருகின்றனர் என்பது கள ஆய்வில் பெறப்படுகிறது.

வெறியாடுதல் என்பது ஒருவகையான ஆற்றுப்படுத்துதலாகும். ஆற்றுப்படுத்துதல் என்பது ஆலோசனை (Counselling) கூறுதலின் வழி

மனநோயுற்றவர்களை அமைதிப்படுத்தும் முயற்சியாகும். சங்ககாலம் தொட்டு இது நடைமுறையில் இருந்து வந்தாலும், சில மாற்றங்களுடன் இது இன்று தொடர்கின்றது என்பது பெறப்படுகிறது.

பழங்குடி மக்களின் மருத்துவ முறைகள் வாய்மொழியாகவே கடைபிடிக்கப்பட்டு வருகின்றன. அதனை ஆவணப்படுத்தும் விதமாக, அம்மூலிகைகளை பற்றிய செய்திகளை பதிப்பித்து, நூல்களாக வெளியிட்டால் வரும் தலைமுறையினருக்குப் பயன்படும்.

**சான்றெண் விளக்கம்**

1. முனைவர் வே. நெடுஞ்செழியன், தமிழர் கண்ட தாவரவியல், ப.50.
2. புறம்:296:1.
3. மேலது, 296:1.
4. மேலது, 76:4.
5. மேலது, 79:2.
6. மேலது, 371:7.
7. தொல்.செய்.111.
8. புறம்:296:2.
9. அகம்:149:9-11.
10. நான்.19:1-2.
11. இன்னா. 35:3.
12. நான்.19:2

13. திரி.18:2-3.

14. சி.மூ.84.

15. நாலடி. 219:1-2.

16. புறம். 281:4-7.

17. மேலது, 281.

18. புறம். 296:1-3.

19. பதிற்று.42:2-4.

20. புறம்.353:16.

21. அகம்.111:13-14.

22. புறம்.180:2-5.

23. நற்.226:1.

24. மேலது, 136:2-3.

25. கலி;17:19-20.

26. குறள்.948.

27. மேலது, 949.

28. மேலது, 950.

29. நான்மணிக்கடிகை.77:2-3.

30. ஆசாரக் கோவை, பா.23.

31. சி.மூ.8:4.

32. குறள்.942.

33. மேலது, 943.

34. ஆ.கோ.பா.57:3-4.

35. மேலது, பா.30.

36. மேலது, பா. 13:2.

***37.*** ***டாக்டர் க.வெங்கடேசன், ஆய்வு நோக்கில் நாட்டுப்புற மருத்துவம், ப.152..***

***38.*** ***டாக்டர் சரசுவதி வேணுகோபால், நாட்டுப்புறப் பாடல்கள் சமூக ஒப்பாய்வு, ப.104.***

***39.*** ***கி.வா.ஜகந்நாதன், மலையருவி, ப.246.***

***40.*** ***காண்க: பின்னிணைப்பு, பேட்டி எண்.9.***

***41.*** ***காண்க: பின்னிணைப்பு, பேட்டி எண்.10.***

***42.*** ***குறுந்.111.***

***43.*** ***சிலம்பு நா.செல்வராசு, சங்க இலக்கிய மறுவாசிப்பு, ப. 119.***

## இயல் – 5
## பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும்

பழங்குடியினரிடையே பல நம்பிக்கைகள் நிலவி வருகின்றன. நன்மையின்பால் உள்ள ஆர்வமும், தீமையின்பால் உள்ள அச்சமும் பெரும்பான்மையான நம்பிக்கைகளுக்கு அடிப்படைக் காரணிகளாக விளங்குகின்றன. நாளை விடியும் என்ற நம்பிக்கையில் தான் மனிதனின் வாழ்க்கை இயங்குகிறது. பயத்திற்காகவும் பின் பணத்திற்காகவும் வணங்கப்படுகின்ற கடவுளர்களுக்குச் செய்கின்ற விழாக்களும், சடங்குகளும் நம்பிக்கையின் பாற்பட்டதாகவே விளங்குகின்றன. இந்து மலையாளியின மக்களிடையே நிலவும் நம்பிக்கைகளையும், அவற்றின் அடியாகப் பிறந்த பழக்கவழக்கங்களையும் பற்றி விளக்குவது இவ்வியலின் நோக்கமாகும்.

### பழக்கவழக்கங்கள்

பழகிக் கொள்வது பழக்கமென்றால், வழங்கி வருவது வழக்கம். “மனிதன் தொன்றுதொட்டுப் பிறர் வாழ்வினின்றும் பலவற்றைப் பழகிக் கொள்கின்றான். ‘தொட்டிற் பழக்கம் சுடுகாடு மட்டும்’ என்றும் ஒரு பழமொழி சொல்வார்கள். ஆதலால், பழக்கம் என்பது மனிதனைப் பற்றிக் கொண்டபின் எளிதில் விட்டுவிடாது என்று அறிந்து கொள்கின்றோம். மனிதனது பழக்கவழக்கங்கள் அவன் பிறந்தமண், சாதி, சமயம் ஆகியவற்றிற்கு ஏற்ப மாறுபட்டு விளங்குகின்றன. மனிதனது சார்புகளைப் பொறுத்தும் அவனது

பழக்கவழக்கங்கள் மாறுவதுண்டு. மாற்றப்பெறும் பழக்க வழக்கங்கள் என்றும், மாறாத தன்மைகளையுடைய பழக்க வழக்கங்கள் என்றும், இருவகையாகப் பகுத்துக் கொள்ளலாம்''[1] என்பர் சு.சண்முகசுந்தரம்.

குறிப்பிட்ட நிகழ்ச்சிகள் தொடர்ந்து மக்களால் பின்பற்றப்படுமானால் அவை சடங்குகளாகும். மனிதனது பிறப்பிலும் இறப்பிலும் திருமணத்திலும் வழிபாட்டிலும் சடங்குகள் நிறைந்து காணப்படுகின்றன. பெரும்பான்மையான சடங்குகள் சமய வண்ணம் பூசப்பட்டவைகளாக விளங்குகின்றன. சடங்குகள் சமயத்தின் அடிப்படையில் சடங்குகள் விளங்குகின்றன. சடங்குகளை நடத்துபவர்கள் சமுதாயத்தால் சிறப்பிக்கப்படும் பேற்றினைப் பெற்றுள்ளனர்.

பழக்கம் என்பது ஒருவர் பழகிய முறையினைப்பற்றி வருவதாகும். ''தனிமனிதனின் பயிற்சி அல்லது ஒழுகும் முறையினைப் பழக்கம் எனவும், இத்தனிமனிதர் செயல்பாடு பொதுமை நிலையில் அதாவது ஒரு குழு அல்லது ஒரு இனம், அல்லது ஒரு மதம், அல்லது ஒரு நாடு என்ற முறையில் பயிலப்படும் பொழுது, வழக்கமாகவும் நின்று இவை ஒருங்கிணைந்த நிலையில் பழக்க வழக்கமெனச் சுட்டப்படுகின்றன எனலாம். இவை பின்னர் தலைமுறை தலைமுறையாகப் பின்பற்றப்படும் பொழுது மரபாக மலர்கின்றன''[2] என்று கு.பகவதி குறிப்பிடுகின்றார்.

ஓரினத்தின் பண்பாடும், பழக்கவழக்கங்களும் அவரவர் வாழும் இடம், சூழல், அவர்கள் செய்யும் தொழில், அவர்கள் பிறரோடு கொள்ளும் தொடர்பு, கல்வி போன்றவற்றால் அமைகின்றன. பண்பாடு என்ற அமைப்பிற்குள் ஒழுக்க நெறிகள், கட்டுப்பாடுகள், சடங்கு முறைகள், பழக்க வழக்கங்கள், கலைகள், பண்புகள் ஆகியன இடம்பெறுகின்றன.

**மலையின மக்களின் பண்பாடும் பழக்கவழக்கமும்**

மலையின மக்களின் பண்பாட்டுள் இசைக் கலையும் ஒன்றாகும். மலைவளம் சார்ந்த மக்கள் தொல்குடி மக்களில் முதன்மையிடம் பெறுகின்றனர். “மலையின மக்களின் இசை எத்தன்மை வாய்ந்தது; இசைப் பாடல் எத்தன்மை கொண்டது என அறிவது இன்றியமையாதது. குன்றத்து மக்களின் வாழ்க்கையை அவர்தம் பாடல், ஆடல் இவற்றில் பொதிந்துள்ள இசைத் தன்மைகள் குறித்து ஒரு படைப்பாளி என்னும் நோக்கில் சிலப்பதிகார குன்றக்குரவையில் இளங்கோவடிகள் பயன்படுத்தியுள்ளார். தொல்குடி மக்களுடைய வழக்காறுகள், இசை வடிவங்கள், பாடல் வடிவங்கள் ஆகியவற்றை அடியொற்றியே காலப்போக்கில் எழுத்து, மொழி இலக்கியங்கள் உருப்பெற்றுள்ளமை குறித்து இலக்கிய வல்லுநர்கள் மற்றும் ஆராய்ச்சியாளர்கள் (சி.எம்.பௌரா, சாட்விக்) குறிப்பிட்டுள்ளமை இங்கு எண்ணுதற்குரியது.

இயற்கையோடு இயைந்து வாழ்ந்த மக்கள், இலை, செடி,

கொடிகள், வேர்கள் போன்றவற்றைக் கைக்கொண்டு மரக் கிளைகளில் ஊஞ்சல் கட்டி ஆட்டி, அசைத்துப் பாடி விளையாடிய ஊசல் வரிப்பாட்டு என்பது தொல்குடி மக்களுக்குச் சொந்தமானது. மலைக்குன்றில் வாழ்ந்த மக்களைப் பற்றிக் குன்றக்குரவையில் இளங்கோவடிகள் 'சிறுகுடியீரே, சிறுகுடியீரே' என்று பாடல் செய்துள்ளமை அம்மண்ணையும், அம்மக்களையும் மனம் கொண்டவாறு படைப்பு உருவாக்கம் செய்துள்ளார். பாடல்கள் மற்றும் ஆடல்களில் வடிவங்களை, கலை வடிவங்களைக் கையாண்டுள்ளார். இளங்கோவடிகள் கோவலன், கண்ணகி கதையை மையமாக வைத்துச் சிலம்பினைக் கலைப் படைப்பாகச் செய்துள்ளமை வியப்பினை உண்டாக்குகிறது.

மரத்தின் விழுதுகள், கொடிகள் ஆகியவற்றை மரக் கிளைகளில் கட்டி ஊஞ்சல் ஆடும் பழக்கம் இன்றைக்கும் உள்ளது. "ஊஞ்சல் ஆடும் பொழுது முன்னும் பின்னும் போகும் கால அளவிற்கேற்ப பாடலின் தாளம் அமைந்திருக்கும் பாடலின் சீர்களும் அடி அமைப்பும் ஊஞ்சலின் வேகத்தையும், ஆட எடுத்துக் கொள்ளும் தொலைவையும் ஒட்டி அமையும். தமிழ் மரபு வழிப்பட்ட ஊஞ்சல் பாட்டின் சான்றாகச் சிலப்பதிகார ஊசல்வரி விளங்குவதைக் காணலாம்"[(3)] என்பர் கரு.அழ.குணசேகரன். இசையோடு தொடர்புடைய நிலையில் வள்ளைப்பாட்டு, குறவன் குறத்திப்பாட்டு, தாலாட்டு, திருமணப்பாட்டு, ஒப்பாரி ஆகியன விளங்குகின்றன.

## வள்ளைப்பாட்டு

பாறையில் குழி தோண்டி அல்லது உரலில் தானியத்தை இட்டு உலக்கை கொண்டு குத்திப் பதப்படுத்தும் பெண்கள் பாடும் உலக்கைப் பாட்டே வள்ளைப் பாட்டாகும். மூங்கில் அரிசி, தினை போன்ற தானியங்களை உலக்கை கொண்டு குத்தி, உமி நீக்கிய அரிசியை உண்டு வாழ்கின்ற மக்கள் அன்றும் இன்றும் மலைகளில் வாழ்ந்து வருகின்றனர். சிலம்பில் வள்ளைப் பாட்டு இடம்பெற்றுள்ளது. இதனை,

> **“தீக்கரும்பு நல்லுலக்கை யாகச் செழுமுத்தம்**
> **பூங்காஞ்சி நீழ லவைப்பார் புகார்மகளிர்**
> **ஆழிக் கொடித்திண்தேர்ச் செம்பியன் வம்பலர்தார்ப்**
> **பாழித் தடவரைத்தோட் பாடலே பாடல்;**
> **பாவைமா ரார்க்கும் பாடலே பாடல்”**(4)

என்று இளங்கோவடிகள் குறிப்பிடுகிறார். மலையின மக்கள் வாழிடங்களில் பாறைகளில் காணப்படும் பள்ளப் (குழி) பகுதிகளை உரலாகப் பாவித்து உலக்கை கொண்டு தானியங்களைப் பதப்படுத்துவர். கொல்லிமலை மாசி பெரியண்ணசாமி திருவிழாவின் போது மலையினப் பெண்கள் இத்தகைய பாறைகளில் உள்ள குழிகளைப் பயன்படுத்தி, தானியங்களை உலக்கை கொண்டு குத்துவதும், ஊற வைத்த பருப்பு வகைகளை உரல் கொண்டு அரைப்பதும் இன்று வழக்கத்தில் இருந்து வருகிறது.

**குறவன் குறத்திப் பாடல்கள்**

குறவன் குறத்தியர் பாடல்கள் தொல்காப்பிய காலத்திலிருந்தே இருந்து வருகின்றன. ‘கட்டினும் கழங்கினும் வெறியென’ எனும் தொல்காப்பிய நூற்பாவும், ‘அகவன் மகளே’ என்னும் குறுந்தொகைப் பாடலும் குறித்திப் பாடலுக்குத் தொன்மைச் சான்றுகளாகும். தமிழர்களின் பண்பாடு, கலாச்சாரத்தோடும், வாழ்க்கையோடும் இசை ஒன்றெனக் கலந்துவிட்டது. குறவன், குறத்தி ஆட்டத்தில் பாசி, மணி, சீப்பு போன்ற பொருட்களைப் பண்டமாற்றுப் பெறவேண்டி,

**“பச்சப்பாசீ பவளப்பாசீ வாங்கலியோ ஆயாலோ**

**பச்சப் புள்ளைக்கு கோத்துப் போட்டா**

**நல்லா இருக்கும் ஆயாலோ தா அசக் அசக் ...”**

எனக் குறவனும், குறத்தியும் தமது விற்பனைப் பொருட்களை ஆடிப் பாடிக் கூட்டம் சேர்த்து விபரங்களைக் கூவிக் கூறி நிகழ்த்தும் கலையைக் காணமுடிகிறது. தற்போது நரிக்குறவர்களின் பாடலாக இது விளங்குகிறது. கொல்லிமலையில் நரிக்குறவர்கள் யாரும் இல்லை என்பது கள ஆய்வில் பெறப்படுகிறது. வியாபாரம் செய்வதற்கே மலைக்கு வந்து செல்கிறார்கள்.

குறவர் பாடல்களில் வியாபாரப் பொருட்களின் பெயர்களும் குறிக்கப் பெறுகின்றன. குறவர், காடை, கவுதாரி, ஊசி போன்ற பொருட்களை விற்றுச் செல்வர். இதனை,

**“காட கவுதாரீ, மைனா வாங்கலியோ அம்மாலோ**

கட்டிவச்சீ போரட்டர மிட்ட போரடும் அம்மாரலோ (மிட்ட - முட்டை)

சீத்தூசி சோடி ரெண்டு வாங்கலியோ அம்மாரலோ

சீலை தச்சு போரட்டர நெல்லா இருக்கும் அம்மாரலோ"

எனும் பாடல் வெளிப்படுத்துகிறது. பறவைகளை வேட்டையாடும் பழக்கமும் இதன்வழிப் புலனாகிறது. ஆடைகளைத் தைப்பதற்கு மிகச் சிறிய ஊசிகளை இவர்கள் தொல் பழங்காலத்தில் உருவாக்கியிருக்க வேண்டும் என்னும் எண்ணத்தை 'ஊசி' விற்பனை செய்வதால் உணர முடிகிறது. இயந்திர உற்பத்திக்கு முன்னர் பழங்குடியினர் ஆயுதங்களை அவர்களாகவே உருவாக்கி இருந்தமையை வரலாற்றுச் சான்றுகளால் அறிய முடிகிறது.

குறவனும் குறத்தியும் பாடுகின்ற காதல் பாடல்களும் காணப்படுகின்றன. காதல் மனித ஆன்மாவின் சுகமான உச்சரிப்பாகும். காலத்தையே கரைக்கின்ற அற்புதமான அமிலமாகும். கனவுக்குச் சிறகளித்து நினைவைச் சிறைப்படுத்தும் வித்தியாசமான வாழ்வு முறையாகும். குறவன் தன் காதலை மென்மையாக வெளிப்படுத்தும் போது,

"பச்சமலை ஓரத்திலே - குறத்தீ

பாசிப்பயிறு வறுக்கையிலே - நானும்

பம்ப சத்தம் கேட்டவுடன்

பக்கம் வந்து வாரிடுவேன்!"

என்று பாடுகிறான். இதற்கு மறுமொழியாகத் தன் உணர்வைக் குறத்தி,

"கொல்லிமலை பக்கத்திலே

குறும்பாறு மேய்க் கயிலே

கொம்பு சத்தம் கேட்டவுடன்

கூட வந்து வாடிடுவேன்!"

எனப் பாடுகிறாள். காதலர் பிரிவைக் குறிப்பால் உணர்த்தும் பாடல்களாக உள்ளன. மலையாளி இனப் பெண்கள் பல பாடல்களை உணர்வோடு பாடுவதை வழக்கமாகக் கொண்டுள்ளனர். அதனை,

"தன்ன னான தன்ன னான

தன்ன னான தன்ன னான

னான னன்ன னான ன்னன

னான னன்ன னான ன்ன

அடிநா பிறந்தது இந்த கொல்லிமலை குறத்தி

அடிநா பிறந்தது இந்த கொல்லிமலை குறத்தி

வாழவந்தி வாழவந்தி

ஆடவந்ததுதான் இந்த செம்மேடு

இப்ப பாட வந்ததுதான் சக்கரப்பட்டி

அடிதன்ன னான தன்ன னான புள்ள

தன்ன னான தன்ன னான

குறத்தி: அரேய் மாமா

பாட்டுக்குத்தான் நான் பாட்ட எடுத்தேன்

பாட்டத்தான் நா படிப்பேன்

பாட்டத்தான் நா படிப்பேன் மாமா

எதிர்ப்பாட்டுக்கு எதிர்ப்பாட்டு இங்க பாடனோ மாமா

ஏணி வச்சு இங்க நா பல்ல ஒடிப்பேன்

குறவன்: அரே புள்ள!

ஆத்திலதான் இங்க ஊத்து வெட்டி புள்ள

அதில் நீயும் நானும் பல் விளக்கி

அடி ராத்திரிதான் சொன்ன சொல்லு எனக்கு

ரம்பம் அறுக்குதடி

குறத்தி: அரே சாமி கவுண்டரு

னான னன்ன னான ன்னன

அரே மாமா

வாசலிலேதான் இங்க வன்னிமரம் மாமா

வாது பேரனா இங்க ஒடு மரம்

வம்பு வந்திங்கு சேருதடி

தன்ன னான தன்ன னான புள்ள

தன்ன னான தன்ன னான

ஊருக்குத்தான் அங்க தெக்காலத்தான் மாமா

ஊசிபோல அங்க கம்பங்காடு

அங்க கம்பங்கதிரு அறுக்கயிலே புள்ள எனக்கு

ஏத்தம் வந்திங்க எழுப்புதடி தன்ன

வடக்க பேரயி இங்க பண்ண வச்சேன்

வாழமரம் அங்க இரண்டு வச்சேன்

வாழப்பழம் அங்க திங்க திங்க புள்ள

உங்கப்பன் வரய வரய சப்புறரண்டி அட

தெக்கப்பேரயி இங்க பண்ண வச்சேன்

தென்னப்புள்ள அங்க ரெண்டு வச்சேன்

அங்க தென்னங்கரய் தின்ன தின்ன புள்ள

ஒங்கப்பன்

சீவி சிலும்பி இங்க பரக்குறரண்டி அடி

தன்ன னரன தன்ன னரன புள்ள

தன்ன னரன தன்ன னரன

……… …….

என்ற பாடல்கள் வெளிப்படுத்துகின்றன.

கொல்லிமலையை வல்வில் ஓரி ஆட்சி புரிந்துள்ளார். (புறம்.152, 153, 204; சிறுபாண்.110) இவர் கடையேழு வள்ளல்களில் ஒருவர். இவரைக் குறித்து அம்மலை வாழ் இந்து மலையாளிகள் பாடல்கள் பாடுகின்றனர். அதனை,

தன்னரனே தன்னனரனே

தன்னரனே தன்னனரனே

இந்த சேலம் ஜில்லர சேர்ந்தது கொரல்லிமல

அன்பரன கொரல்லிமல

அழகுச்சந்த கொரல்லிமல (தன்ன)

கொரல்லிமல குடகுமல

குடகுசரர்ந்த வீரமல

அந்த குடகுசரர்ந்த வீரமல

அன்னரசிப்பழம் பழுத்த

அழகரனத்தர வீரமல

அழகரன கொரல்லிமல

ரரசான கொல்லிமல

அந்த அழகான கொல்லிமல

ரரசான கொல்லிமல

வல்வில் ஓரி ஆண்ட மல

வகையான கொல்லிமல (தன்னா)

அந்த வல்வில் ஓரி ஆண்ட மல

வகைவகையான கொல்லிமல

பூவால பழம் பழுத்து

பூலோகந்தான் வீசுதம்மா ... (தன்னா)

அந்த பூலோகந்தான் வீசுதம்மா

அந்த பூலோகந்தான் வீசுதம்மா

கருவாழப் பழம் பழுத்து

கானகந்தான் வீசுதம்மா ..... (கருவாழ)

கொல்லிமலயிலதான்

என்னென்ன சிங்காரமாம் ..... (கொல்லிமல)

வண்டி நெக பாடிருந்தேன்

வான்கோழி கூவுதம்மா.... (வண்டி)

தூரத்து கூடு கட்டும்

தூக்கணாங் குருவிகளே

ஆகார ஓடிருதம்

அன்னமயில் கூவியிருந்தோம் .... (தன்ன)

ஆகார ஓடிருதம்

அன்னமயில் கூவியிருந்தோம்

வேலியல அலாந்திருக்கும்

வெள்ளலரி மலர்களே ........ (வேலி)

கோதிநர் பூக்களே

**இந்த நாட்டில தான்**

**என்ன என்ன சிங்காரமாம்**

என்ற பாடல்கள் மெய்ப்பிக்கும்.

**தாலாட்டுப்பாடல்**

தால் என்றால் நாக்கு. நாவை ஆட்டி ஆட்டிப் பாடும் பாட்டு தாலாட்டு. ஆன்மாவிற்கும், உடலுக்கும் சேர்த்துப் பொறுப்பு ஏற்பவள் தாய். அதனால் தான் தாலாட்டில் உயிர்ப்பு இருக்கிறது. பிறந்த வீட்டின் பெருமையைத் தாய் தனது தாலாட்டில் வைப்பது தமிழர் மரபு. மலையின மக்களும் அதற்கு விதிவிலக்கல்ல. நாட்டுப்புறப் பாடல்களில் ஒரு கூறாக விளங்கும் தாலாட்டுப் பாடல்களை மலையின மக்கள் பாடுகின்றனர். அவற்றுள் ஒன்றாக,

**ராரி ராரிரோ .... ராரோ ... ஓ...ஓ...ஓ...**

**ராரி கண்ணா ராரோ....**

**அந்த புங்கந்தூரி புளியந்தூரி**

**ராரி கண்ணம்மா கண்ணா**

**பொன் மாமன் கட்டுந்தூரி ராரோ ... ஓ...**

**பொன் மாமன் தூரிலதான் கண்ணம்மா கண்ணா**

**போய் கண்ணு நித்திரையான் ஆராரோ**

**அந்த ராரி ரெண்டு தூரிதானோ ராரோ கண்ணா**

**அந்த புங்கத் தூரி புளியந்தூரி ராரி கண்ணய்யா ராரி**

**ராரி ராரி கண்ணா ராரி மயிலம்மா**

**பொன்மாமன் கட்டுந்தூரி ராரி மயிலம்மா**

**உங்க பொன் மாமந் தூரிலதான் ராரி ராரோ ராரி**

போய் கண்ணு நித்திரையான் தூரி தூராரோ

அந்த மனத்துல கிணறு வெட்டி

ராரீ கண்ணம்மா ராரீ

.......... ........... ...............

என்ற தாலாட்டுப் பாடல் விளங்குகிறது.

**திருமணப்பாடல்**

சேர்வராயன்மலையில் வாழும் இவ்வினமக்களிடம் திருமணப் பாடல்கள் உள்ளன. இப்பாடல்கள் அம்மானைப் பாடல்களுக்கு முன்னோடியாக இருந்திருக்க வாய்ப்புண்டு. இதிகாச வீர பாத்திரங்களைத் தங்கள் குலத்துத் தலைவன் மீது ஏற்றிச் சொல்லும் வகையிலும் பாடல்கள் பாடப்படுகின்றன. இப்பாடல்களை விழாக்காலங்களில் மட்டும் பாடுகின்றனர். அப்பாடல்களைத் தமது வழிபடு தெய்வத்திற்குரிய திருமறைப் பாடல்களாகக் கருதுகிறார்கள். பெண்கள் அணிவகுத்தபடி காலடியும் கையொலியும் அமைத்துப் பாடுகின்றனர். இவைகளில் அவர்களின் தொழில், மருத்துவம், காதல் தொடர்பான பொருண்மைகள் இடம்பெற்றுள்ளன. இப்பாடல்கள் இவ்வினமக்கள் காஞ்சிபுரத்தில் இருந்து வந்தவர்கள் என்பதைப் புலப்படுத்துகின்றன.

திருமணத்திற்குப் பின் பெண்ணும், மாப்பிள்ளையும் எங்ஙனம் வாழ வேண்டும் என்பதனை,

“சீனரா வீரலை

சிக்கீனு புடிச்சீ

தெரீஞ்சீருக்கும் தெரீயாதீருக்கும்

ஒன்னுகூடி

சுகமாக வாழ

ஒருத்திக்கு ஒரு மகனா

ஒருத்தி பெத்த பாலகனா

காரி குதிரையும்

கனைக்க மேளமும்

ஈஞ்சியும் இடமல்லியும்

எல்லோரும் சுகமாக வாழு!''

''கல்லுல நெல்லு முளைச்சாப்ல

கழுத்துல தாமரை பூத்தாப்ல

ஆறுபோல் தழை தழைச்சீ

அருகுபோல் வேரோடி

மூங்கி முடிச்சி முடியாத வந்து

நீர்ல நெல்லு முளைச்சாப்ல

நீத்த கன்னு தளைச்சாப்ல

ஆறுபோல் தழை தழைச்சீ

அருகுபோல் வேரோடி

மூங்கி முடிச்சி முடியாத வந்து

திட்டுல நெல்லு முளைச்சாப்ல

தெருவுல மலரோடி வாழனும்

பதினாறும் பெற்று பெரு வாழ்க!''

என்ற பாடல்கள் விளக்குகின்றன. திருமணம் செய்வதற்கு முன்னர் பெண் வீட்டாருடன் மாப்பிள்ளை வீட்டார் பரியம் (பரிசம்) என்ற ஒப்பந்தத்தைச் செய்து கொள்கின்றனர். திருமணம் மணமகன்

வீட்டில் அல்லது மணமகள் வீட்டில் நடைபெறுகின்றது. மணமகள் வீட்டில் நடைபெறுவது தலகன்னித் திருமணம். தலகன்னி மணத்திற்கு மாப்பிள்ளை வீட்டார் இருபது மரக்கால் அரிசி, ஒரு பன்றி, விறகு கொண்டு செல்ல வேண்டும். திருமணத்திற்கு முதல்நாள் நாள் அவற்றைச் சமைத்து விருந்து அளிப்பர். மணமகனின் நண்பனைத் தொமக்காரன் என்றும் மணமகளின் தோழியைத் தொமக்கார்ச்சி என்றும் அழைக்கின்றனர். திருமணம் நாட்டார்கள் தலைமையில் நடைபெறும்.

மலைவாழ் மக்களின் பழக்க வழக்கங்கள் தற்போது மாற்றம் பெற்று வருகிறது. மற்றவர்களோடு காதல் திருமணம் செய்து கொள்கின்றனர். முன்பு பிறரோடு காதல் திருமணம் செய்தால் ஊரைவிட்டு ஒதுக்கி வைப்பர். அதற்குக் ‘குத்து’ என்று பெயர். இம்மக்கள் குற்றம் என்பதே குத்து என்றாகிவிட்டது என்கின்றனர். இக்குற்றத்திற்குக் கூட்டம் போட்டு முடிவு செய்து தண்டனை வழங்குகின்றனர். இவர்கள் காவல்நிலையம் செல்வதில்லை. சில வேளைகளில் கட்டப்பஞ்சாயத்து செய்து காவல்நிலையம் செல்வதைத் தவிர்க்கின்றனர். அதற்கு அவர்கள் ஊருக்கு உணவிடுதல் வேண்டும்; கோயிலுக்குப் பொருள் செலுத்துதல் வேண்டும் என்ற வழக்கம் இருந்து வருகிறது.(5)

வயதில் குறைந்த ஆண்கள், முதியவர்கள், சிறார்களுக்கு இவ்வினப் பெண்கள் மரியாதை கொடுக்க வேண்டும் என்ற வழக்கம் இருந்து வருகிறது.

## ஒப்பாரிப்பாடல்

இந்து மலையாளி ஒருவர் இறந்துவிட்டால் இவ்வினத்தார் வீடுகளில் இருந்து ஊர்க்கவுண்டர் தீர்வைப் பெறுகிறார். அப்பணத்தைக் கொண்டு ஈமச்சடங்குகள் நிகழ்த்தப்படும். ஒரு இறப்பு நேர்ந்தால் உடனே, அங்கு ஒரு வெடி வெடிப்பார்கள். ஆள் ஆளாகச் சென்று சந்தித்துச் செய்தி சொல்வது முடியாத காரியம். ஆகவே, வெடி வெடிப்பதை அவர்கள் வழக்கமாகக் கொண்டுள்ளனர்.

மலையாளிகளில் ஒருவர் இறந்துவிட்டால் அவர்கள் மேல் பணம் போடுகின்றனர். இது அவர்களின் பழக்கவழக்கங்களில் ஒன்றாகக் கருதப்பெறுகிறது. கணவன் இறந்துவிட்டால் மனைவி உடன்கட்டை ஏறுவதில்லை. கூந்தல் களைவதில்லை. சதி மாதாக்களை (உடன்கட்டை ஏறும் பெண்களைச் சதி மாதாக்கள் என்று அழைப்பர்) இவர்கள் அறிந்திருக்கவில்லை. இறந்தவர்களுக்குத் தப்படிப்பதற்காகச் சேட்டூரிலிருந்து பறையர்களை வரவழைக்கின்றனர். அத்தொழிலைச் செய்வதற்காக அவர்களுக்குக் கூலி கொடுக்கின்றனர்.(6) இறந்தவர்களுக்காக இவர்களால் பாடப்பெறும் துயரப்பாட்டு, ஒப்பாரிப் பாடல்களாகப் பெயர் பெறுகின்றன. அதனை,

**“அந்த சித்தரய மாசத்துல**

**அம்மா என்னப் பெத்த மாதாவே**

எனக்கு சீல வயரு ஓடுதம்மா

என்னப் பெத்த மக

நங்க செட்டி நல்லா கடை புகுந்தா

என்ன மாதா நீங்க சீல நல்லா

வில மதிச்சா

கண்ணே! நம்ம சீல நல்ல இரநூறடி

தங்கமே உனக்கு சீறு நகையா மூந்நூறடி

அம்மா நாங்க சீல நல்லா மடிச்சு கட்டி

என்ன பெத்த மக நாங்க சின்ன நல்லா ரயிலேறி

அம்ம சேலம் நாங்க போயிறங்கி

என்ன பெத்த மாதா நாங்க

சேலத்துலதான் வீதியிலதான் என்ன

மாதவே செல்ல மக்க ஆருதுன்னா

அம்மா என்ன பெத்தவரு வந்திருந்தா

என்னப் பெத்த மக நம்ம சீல நல்லா

நனையாது என்னுமது சீறுநகையும் மங்காது

அம்மா உங்களையுந்தான் காணாமின்னு

என்னபெத்த மக இன்னக்கி சீல நல்லா

........ ......... ........... ............”

என்பவை விளக்குகின்றன.

**பிற பழக்கவழக்கங்கள்**

ஊர்த்தலைவருக்கு மரியாதை கொடுக்கும் மலைவாழ் மக்கள்

சமூகக் கட்டுப்பாடுடையவர்கள். ஊர்க்கவுண்டன் அல்லது கரைகாரன் ஆகியோர் ஊரின் கட்டுப்பாட்டையும் வழிமுறைகளையும் நடத்திச் செல்வர். ஒவ்வொரு நாட்டிற்கும் ஒவ்வொரு பட்டக்காரர் இருப்பர். இவர்கள் அனைவரினும் கொல்லிமலை வளப்பூர் நாட்டுப் பட்டக்காரரே தலைமையானவர். ஊர்ப்பொது நிகழ்ச்சிகளிலும், நன்மை, தீமைகளிலும் இப்பட்டக்காரருக்கு (கவுண்டன், கரைகாரன்) மரியாதை வழங்கப்படுகிறது.

கொல்லிமலையில் மாசி பெரியண்ணன் திருவிழா மூன்று நாட்கள் நடைபெறுகின்றது. முதல்நாள் திருவிழாவில் ‘மாடு மாலை தாண்டும்’ நிகழ்ச்சி நடைபெறுகிறது. மாடுகளைக் குளிக்க வைத்து, சந்தனம், குங்குமப்பொட்டு வைத்து நிகழ்ச்சிக்குத் தயார் படுத்துகிறார்கள். எல்லைக்கோடு அமைத்து மாடுகளை வரிசையாக வைத்து விரட்டுகிறார்கள். முதலில் எல்லைக்கோட்டைத் தாண்டும் மாட்டின் உரிமையாளருக்கு ‘மணியக்காரர்’ பட்டம் சூட்டப்படுகிறது. இந்நிகழ்வில் கலந்து கொள்பவர்கள் பாரம்பரிய உடை அணிந்து மலையில் விளையும் பொருட்களுடன் ஆடிப்பாடி மகிழ்கின்றனர். ஆடிப்பாடி மகிழும் போது ஒரு கையில் குச்சி கொண்டு குழு நடனம் ஆடுவதை இவ்வின மக்கள் பழக்கமாகக் கொண்டுள்ளனர்.

### மதம் சார்ந்த பழக்க வழக்கங்கள்

இந்து மலையாளி இன மக்கள் இந்து சமயத்தைச் சார்ந்தவர்களாக உள்ளனர். கிருத்துவர்களின் போதனைகள் அவர்களிடம் சென்று சேரவில்லை. வைணவ கலாச்சாரம் மிகுந்து காணப்படுகிறது. முன்பு பிராமணர்களிடமிருந்து தப்பிக்கவே மலையாளிகளின் மூதாதையர் கொல்லிமலைக்கு வந்ததால், இவர்கள் பிராமணர்களுக்கு முக்கியத்துவம் தருவதில்லை. தம் வீடுகளுக்குள் அவர்களை அனுமதிப்பதில்லை. தற்போது நிலைமை தலைகீழாக மாறிவிட்டது. இவர்களின் அனைத்துத் தேவைகளுக்கும் பிராமணர்களே முக்கியப் பங்கு வகிக்கின்றனர். திருமணம், பூப்பு, புதுமனை புகுதல் போன்ற நிகழ்ச்சிகளில் பிராமணர்களின் ஆதிக்கம் நிறைந்து காணப்படுகிறது.

## நம்பிக்கைகள்

நம்பிக்கை என்பது ஒன்றின் உண்மையை ஏற்றுக் கொள்வதாகும். நம்பிக்கைகளின் அடிப்படை மனிதனின் அகமனம் என்பர். மூளைக்கு அகமனமானது காரண காரியங்களுக்கு அப்பாற்பட்ட எண்ணங்களை உணர்த்துகிறது. மூளையில் பதியும் அவ்வெண்ணங்கள் உண்மையாகி உறுதிப்படும் போது நம்பிக்கையாகிறது. பழங்குடி மக்கள் தம் வாழ்வில் கொண்டுள்ள நம்பிக்கைகள் எண்ணற்றவை.

மனிதனிடம் நம்பிக்கைகள் தோன்றுவதற்குப் பல காரணங்கள் உள்ளன. ஒருவரது பழந்துணியை இரவல் கொடுக்கக்கூடாது என்ற

நம்பிக்கையானது, பழந்துணியின் மூலம் அதற்குரியவருக்குத் தீவினை செய்யமுடியும் என்ற செய்வினை மூலம் தோன்றியிருக்க வேண்டும். பல நம்பிக்கைகளின் பின்புலத்தில் அறிவியல் ஆதாரமாக உள்ளது என்பது மறுக்க முடியாத உண்மையாகும். தேவகோட்டை பி.நாராயணனின் கருத்தை முன்மொழியும் க.சண்முகசுந்தரம், ‘‘ஏன் தெற்கே தலை வைத்துப் படுக்க வேண்டும். வடக்கே தலை வைத்துப் படுக்கக் கூடாது. மனித உடலில் எலக்ட்ரோ மாக்னெடிக் அலைகள் உள்ளன. இவற்றிற்கு மூலஸ்தானம் மூளைதான். உலகத்தை எடுத்துக் கொண்டால் அதன் மாக்கெனடிக் பகுதியின் மூலஸ்தானம் வடதுருவம். ஆகவே, வடக்கே தலை வைத்துப் படுத்துக் கொண்டால் மூளையின் காந்த சக்தியும் உலகத்தின் காந்த சக்தியும் மோதிக் கொண்டு மூளை பாதிப்புக்கு ஆளாகி விடும் என்று விஞ்ஞானிகள் கூறுகின்றன’’[(7)] என்று விளக்கமளிக்கிறார்.

**காலந்தோறும் நம்பிக்கைகள்**

தொல்காப்பிய காலத்தில் பறவைச் சகுனம் பற்றிய நம்பிக்கைகள் இருந்திருக்கின்றன. (தொல். பொருள்.91) கூகை அலறினால் சாவு வரும் என்ற நம்பிக்கை புறநானூற்றுக் காலத்தில் (புறம்.280) இருந்ததை அறியமுடிகிறது.

தமிழரின் அனைத்து செயல்களுக்கும் நாள் குறிக்கும் மரபு தொன்றுதொட்டு வருவதாகும். தொடங்கும் காரியம் சிறப்பாக, வெற்றிகரமாக நிறைவு பெற நாள் குறிப்பது தமிழரின் பழக்கமாக

இருந்து வருகிறது. பெயர் சூட்ட; தொழில் தொடங்க; திருமணம் நிகழ்த்த; வீடு கட்ட என்று பல்வேறு செயல்களுக்கும் நாள் குறிப்பது அவசியமாகக் கருதப்படுகிறது. நல்லநாளில் தொடங்கும் காரியம் நன்மையில் முடியும் என்பது நம் தமிழரின் ஆழமான நம்பிக்கையாகும். நல்லநாள் பார்த்துத் திருமணம் நிகழ்ந்த சில செய்தி அகநானூற்றில் பதிவு செய்யப்பட்டுள்ளதை,

> புள்ளு புணர்ந் தினியவாகத் தெள்ளொளி
> அங்க ணிருவிசும்பு விளங்கத் திங்கள்
> சகடம் மண்டிய துகள்தீர் கூட்டத்துக்
> கடிநகர் புனைந்து கடவுட் பேணிப்
> படுமண முழவொடு பரூஉப்பணை இமிழ
> வதுவை மண்ணிய மகளிர்''(8)

என்று பாடல் கூறுகிறது.

காகம் கரைந்தால் விருந்தினர் வருவார் என்று குறுந்தொகை கூறுகிறது. (குறுந். 391) தற்போதும் இந்த நம்பிக்கை நடைமுறையில் உள்ளது.

தும்மல் வந்தால் வேண்டியவர்கள் நினைப்பர் என்று நம்பித் திருக்குறள் தலைவி, தலைவனோடு ஊடல் கொள்ளுகின்றாள்.

பச்சோந்தி இடமிருந்து வலம் சென்றால் நல்ல சகுனம் என்று அறப்பளீச்சர சதகம் கூறுகிறது.

கனவுகள் பலிக்கும் என்று நம்பிச் சீதையைத் திரிசடை

தேற்றுகிறாள். இடக்கண் துடித்தால் நல்லது நடக்கும் என்று சீதையும் நம்புகிறாள்.

கலிங்கத்துப்பரணியில் வரும் பெண்கள் கூடல் இழைத்துப் பார்க்கின்றனர். அவ்வாறு பார்த்ததில் ஒற்றை எண்ணே வருகிறது. ஆகவே, தம் கணவர் விரைவில் திரும்பி வரமாட்டார் என்று நம்புகின்றனர். கூடலிழைக்கத் தங்கள் கையால் குவித்த சிறு மணல் மேடு. அவர்கள் கண்களிலிருந்து சொரியும் நீரால் கரைந்து போகும்படி மனங்கரைந்து அழுகின்றனர். இதனை,

"வெய்யில் அனைத்து உருகிப் பையஅ கன்றவர்தாம்

மீள்வர்எ னக்கருதிக் கூடல்வி ளைத்து அறவே

கையில்அ னைத்தமணல் கண்பனி சோர்புனலில்

கரையவி ழுந்து அழுவீர்! கடைதிறமின்! திறமினோ!"(9)

என்ற பாடல் சுட்டுகிறது. இதனால் மகளிர் கூடல் இழைத்துப் பார்க்கும் நம்பிக்கையை உணரமுடிகிறது.

## நாட்டுப்புற மக்களின் நம்பிக்கைகள்

கண்ணேறு பட்டால் குழந்தைக்குத் தீங்கு ஏற்படும். எனவே சுண்ணாம்பையும் மஞ்சளையும் கலந்து ஆரத்தி (ஆலத்தி) சுற்ற வேண்டும் என்பது நம்பிக்கை. இதனை ஒரு தாலாட்டுப் பாடல்,

"கண்ணான கண்ணாக்கக்

கண்நோக்கும் வாராமல்

சுற்றி எறி கண்ணார்க்கு"

என்று குறிப்பிடுகிறது.

பல்லியின் ஒலி ஒரு முக்கியமான நம்பிக்கையாகப் பரவியுள்ளது. இதனை ஒரு ஒப்பாரிப் பாடல்,

**“மதிலேறும் பல்லிக்கு - ஒரு**
**வார்த்தைக்கே இடமானேன்**
**சுவரேறும் பல்லிக்கு- ஒரு**
**சொல்லுக்கு இடமானேன்”**

என்று கூறுகிறது.

**பழங்குடியினரின் சொலவடைகள்**

எதார்த்த இலக்கியம் அல்லது மக்கள் இலக்கியம் என்பது மக்களால் படைக்கப்பட்ட இலக்கியமாகும். இது ஏட்டிலும் எழுத்திலும் வராமல் வாய்மொழியில் மட்டுமே இருப்பதாகும். மக்கள் தங்களின் வேலைகளுக்கிடையில் படைத்து, அவர்களுக்குள்ளேயே பகிர்ந்தும் மகிழ்ந்தும் கொள்வதாகும். இவை நாட்டுப்புற இலக்கியம் அல்லது நாட்டார் இலக்கியம் என்று அழைக்கப்பெறுகிறது.

எந்தவிதக் கற்பனையும் இல்லாமல் யதார்த்தமாக மக்களிடமிருந்து வெளிப்படுவது சொலவடையாகும். சொலவடைக்கும் பழமொழிக்கும் மிகுந்த வேறுபாடு உள்ளது. பழமொழிகள் என்பவை படித்தவர்களால் பண்டித முறையில் வெளிப்படுத்தப்படுபவையாகும். சொலவடைகள் மக்களின் வழக்கு மொழிகளால்; பேச்சு மொழிகளால் கூறப்படுபவையாகும். உதாரணமாக, ‘முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்’ என்பது பழமொழி. இதனையே மக்கள் தங்கள் பேச்சு வழக்கில்,

*‘வெளக்கமாற தின்னக் கழுத, ஈக்கி ஈக்கியாதான் வெளிக்கிருக்கும்’ என்பது அதனை ஒத்தச் சொலவடையாகும்.*

**(1) குட்டி போடற ஆடு குட்டி போட்டா**

**வறட்டு ஆட்டுக்கு வந்த வலியென்ன?**

**(2) சிரங்கு பிடிச்ச கையும் பீல்லி புடிச்ச**

**வாயும் சும்மா இருக்காது**

**(3) வித்தாரக் கள்ளி விறகு ஒடிக்கப் போனாளாம்**

**கத்தாழ முள்ளு கொத்தோட பாஞ்சுதாம்**

*இத்தகையச் சொலவடைகள் ‘இழிசனர் வழக்கு’ என்று புறந்தள்ளப்பட்டவையாக உள்ளன. செவ்வியல் தமிழ், இலக்கணத் தமிழ், செந்தமிழ், பழந்தமிழ் செய்யுள்கள் என்று மன்னர்களிடமும், மடங்களிடமும் முடங்கிக் கிடந்தத் தமிழை மக்கள் இலக்கியமாக இன்னும் நினைவில் வைத்திருப்பவர்களில் பழங்குடிகளும் ஒருவராக உள்ளனர்.*

*கல்வி வந்தபிறகு, படிக்காத மக்களின் வழக்குச் சொற்களைப் பயன்படுத்துவது இன்று குறைந்துவிட்டது. இதைப் பேசுவது இன்றைய நடைமுறையில் இழிவாகக் கருதுகின்ற நிலைமையும் உள்ளது. மக்கள் இலக்கியம் அதாவது பழமொழிகள், சொலவடைகள், விடுகதைகள் அழிந்து கொண்டு வருகின்றன. இத்தகைய மக்கள் இலக்கியத்தை இந்து மலையாளிகள் இன்றும் தேவைப்படும் பொழுதெல்லாம் பயன்படுத்துவது ஆய்வின் வழி கண்டறியப்பட்டுள்ளது.*

### நம்பிக்கைகளின் வகைகள்

நம்பிக்கைகள் பல வகைப்படும். இதனை மக்கள் தம் வாழ்வின் ஒவ்வொரு நிலையிலும் பகுத்துக் கொள்ளலாம். பத்தாவது பெண் நல்லதல்ல என்ற நம்பிக்கை திட்டமிடாத குடும்பம் அழிந்துவிடும் என்ற அடிப்படை எண்ணத்தால் நியாயமானது. காக்கை கரைந்தால் விருந்து வரும் என்ற நம்பிக்கை மூடத்தனமாகும். உண்ணும் போது படிக்கக்கூடாது; இலையைத் தாண்டக் கூடாது; ஆடையைக் கடிக்கக்கூடாது. ஆண் மூலம் அரசாளும்; பெண் மூலம் அரசழியும். குழந்தைகளைத் தாண்டக்கூடாது. திருமணச் சடங்குகளில் சுமங்கலிகள் மட்டும் பங்கு கொள்ளவேண்டும். காக்கைக் கரைந்தால் விருந்து வரும். பூனை குறுக்கே வந்தால் சகுனம் சரியில்லை; நரி முகத்தில் விழித்தால் சிறப்பு வரும்; கழுதை கத்தினால் நல்ல சகுனம். பகல் கனவு பலிக்காது; கனவில் மரணம் என்றால் சுபம்; திருமணம் வந்தால் இழவு. மரண நாளில் மழை பெய்தால் நல்லது. துக்க வீட்டிற்குச் சென்றால் குளிக்க வேண்டும். சனிப் பிணம் தனியாக போகாது. செவ்வாய் அமங்கல நாள்; திங்கள் வடக்கே சூலம்; வெள்ளியன்று கடன் கொடுக்க மாட்டார்கள் என்பன போன்ற சில நம்பிக்கைகள் மக்களிடையே உலவி வருகின்றன.

**வழிபாட்டு நம்பிக்கைகள்**

மக்கள் தம் துன்பங்களை இறைவனிடம் விண்ணப்பித்தால் அத்துன்பங்கள் நீங்கி உய்ய வழிகிட்டும்; அதற்கான வழியை இறைவன் அமைத்துக் கொடுப்பான் என்னும் நம்பிக்கையில்தான்

மக்கள் தெய்வத்தை வணங்குகின்றனர். நம்பிக்கை இல்லையேல் வாழக்கையே இல்லை எனலாம். வழிபாடு, பழக்கவழக்கங்கள் சடங்குகள் முதலியன நம்பிக்கையின் அடிப்படையிலேயே அமைகின்றனர் என்பர்.[10]

பழங்குடி மக்களுடைய நம்பிக்கைகள், பழக்க வழக்கங்களுடன் மிகுந்த தொடர்பு உடையனவாய் இருக்கின்றன. மக்கள் தங்கள் வாழ்வில் ஏற்பட்ட பட்டறிவின் காரணமாக இச் செயலை செய்தல் தகும். இச்செயலைச் செய்தல் தகாது என உணர்ந்தனர். இவ்வண்ணமே பிற்காலத்தில் நம்பிக்கையாகவும், வழக்கமாகவும் மாறிவிட்டது. ஆயினும் இத்தகைய நம்பிக்கைகள் என்று தோற்றம் கொண்டன என எவராலும் கூற இயலாது. இன்றைய நாகரிக மனிதனிடம் காணப்படும் பல நம்பிக்கைகள் நாகரிகமற்ற பழங்குடி மக்களிடமும் காணப்படுகின்றன.[11] இந்நம்பிக்கையானது சமூக அமைப்பு, சமயம், சகுனங்கள் ஆகியவற்றோடும் மிக நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளது. சமயத்தின் மீது மக்கள் கொண்ட நம்பிக்கைக்கு அவர்கள் கூறும் காரணம் உண்மையாகவும் இருக்கலாம்; பொய்யாகவும் இருக்கலாம். ஆயினும் அவர்கட்குத் தெய்வத்தின் மீது உள்ள நம்பிக்கை மட்டும் உண்மையானது ஆகும்.

> “அன்று தொட்டுப் பாண்டிய நாடு மழைவறங் கூர்ந்து
> வறுமை யெய்தி வெப்பு நோயுங் குருவுந் தொடரக்
> கொற்கையிலிருந்த வெற்றி வேற் செழியன் நங்கைக்குப்
> பொற் கொல்லர் ஆயிரவரைக் கொன்று களவேள்வி

யால் விழாவொரு சாந்தி செய்ய நாடு மலிய மழை

பெய்து நோயும் துன்பமும் நீங்கியது"[12]

இதனால் அச்சங்கலந்த வழிபாட்டுணர்வு, சாந்தி செய்தல், பலன் பெறுதல், பலியிடுதல் போன்றவை சிலப்பதிகாரக் காலத்திலேயே இடம் பெற்றுள்ளதனை அறியமுடிகிறது.

நமது நாடு தெய்வ நம்பிக்கை மிகுந்த நாடு, குழந்தைப் பேறு இல்லாத மக்கள், தெய்வத்தை வணங்கினால் அப்பேறு கிட்டும் என நம்புகின்றனர். தங்கட்குத் துன்பம் நேருங்காலைத் தெய்வத்திடம் தன் துன்பத்தை முறையிட்டுப், பால், தேன் போன்ற பொருட்களைக் கொண்டு வந்து தெய்வ உருவத்தை அபிசேகம் செய்தால் துன்பம் நீங்கும் என நம்பிக்கை கொண்டுள்ளனர். பால் தானம் செய்தால் குழந்தை பிறக்கும். பிச்சைக்கு வந்தோரைப் புறக்கணித்தால் குழந்தைப் பேறு இன்றிப் போகும் என்னும் நம்பிக்கை உள்ளது.[13]

சமூகத்தின் பண்பாட்டு மரபினை அறிவிக்கவல்லது அச்சமுதாயத்தின் நம்பிக்கைகளேயாகும். நம்பிக்கைகள் மக்களால் உருவாக்கப்பட்டுச் சமுதாயத்தில் புறக்கப்படுகின்றன. இந்நம்பிக்கைகள் மரபுவழியில் காலம் காலமாக ஒரு தலைமுறையினரிடமிருந்து மற்றொரு தலைமுறையினருக்குப் பரவி வருகின்றனர் என்பர்.[14]

ஒரு சமுதாயத்தின் நம்பிக்கைகளைக் கொண்டு அச்சமுதாயத்தின் அறிவுத்திறனை அளவிட்டுக் கூற இயலும். சிந்தனை வளர்ச்சி மிகு சமுதாயத்தில் நம்பிக்கைகள் குறைவாகவும்

*சிந்தனைத் திறன் குறைவாக உள்ள சமுதாயத்தில் நம்பிக்கைகள் மிகுதியாகவும் உள்ளன. ஒரு வளர்ச்சி அடைந்த மனிதனிடம் பத்தாயிரக்கணக்கான நம்பிக்கைகளும் நூற்றுக்கணக்கான வழக்கங்களும் எண்ணிக்கைக்கு உட்பட்ட சில குறிக்கோள்களும் இருப்பதாகச் சமூக அறிவியல் கலைக் களஞ்சியம் கூறுகின்றது.*[15]

*திருவிழாவின் போது பூசாரியின் மேல் தெய் அருள் இரங்கி நேர்த்திக் கடனுக்காக வெட்டப்பட்ட ஆடுகளின் இரத்தத்தை எல்லாம் பூசாரி குடித்துக் கொண்டே இருப்பார். பூசாரியின் வழியாக பலியிடப்படும் இரத்தத்தை தெய்வம் ஏற்றுக் கொள்வதாக நம்புகின்றனர்.*[16] *பலியிடப்படும் ஆடுகள் தலை ஆடாக இருந்தால் நல்லது. மேலும் உடல் ஒச்சமில்லாமல் (குறை) இருத்தல் வேண்டும். ஒரே நிறமுடைய ஆடுகளை பலி கொடுத்தால் நினைத்த காரியம் நடக்கும். வழிபாட்டுச் செயல்கள் நம்பிக்கை அடிப்படையில் நிகழ்கின்றன. வழிபாட்டு முறையில் பலி முறைக்குச் சிறப்பிடம் உண்டு.*[17]

*நாட்டுப்புற மக்களிடையே தெய்வ நம்பிக்கையாக இருப்பவை 1. சத்தியம் பலித்திடும். 2. தகடுவைத்தல் 3. தொழுதால் துன்பம் நீங்கும் 4. பிள்ளைவரம் 5. தீ மிதித்தல் 6. இரத்தம் குடித்தல் 7. மஞ்சள் நீராடல் 8. மயானம் செல்லல் 9. சாட்டையால் அடித்தல் 10. மழை வருமென்றால் வரும். 11. நோய்கள் நீங்கும் 12. பேய்கள் விலகும். 13. நல்ல பலன் உண்டாகும்.*[18]

சிறு தெய்வங்கள் கதைகள், பழமொழிகள், பாடல்கள் நம்பிக்கைகள் என்று ஏராளமான வழக்காறுகளைக் கொண்டு விளங்குகின்றன. தெய்வங்கள் மனிதர்களாய்த் தோன்றி வாழ்ந்து மாண்ட கதை, பழி தீர்த்த கதை, தெய்வம் தற்போதைய இருப்பிடத்தில் வந்து அமர்ந்த கதை. அதன் அதீத செயல்கள் என்று தெய்வக் கதைகள் நிறைந்திருக்கும். கதைகளில்லாத சிறு தெய்வங்களே இல்லை. இக்கதைகள் அனைத்தும் நம்பிக்கையின் அடிப்படையில் தோற்றம் பெற்று வழிவழியாக மக்களின் வாய் மொழியாக வழங்கப்பட்டு வருகின்றன.

கற்கடவுள் தங்களை மின்னல், இடி ஆகிய அபாயங்களிலிருந்து காப்பாற்றும் எனக் கொல்லிமலை இந்து மலையாளிகள் நம்புகின்றனர். மழை பொய்த்த காலங்களில் சாண உருண்டை ஒன்றைப் பிள்ளையாராகப் பாவித்து பன்றியைப் பலியிடுகிறார்கள். பன்றி இறைச்சியை உண்பார்கள். பேய், பிசாசுகளைத் திருப்திப்படுத்தக் கோழி, ஆடு, பன்றி ஆகியவற்றைப் பலி கொடுக்கின்றார்கள். குழந்தை பிறப்பு, திருமணம் ஆகியவற்றின் போது மூதாதையரை வழிபடுகின்றனர்.

திருமாலையும், சிவபெருமானையும் வழிபடுகின்றனர். காளி கிராம தேவதை, நாச்சி, கொங்கலாயி ஆகிய கிராம தேவதைகள் இவர்களது விருப்பத் தெய்வங்கள். நாச்சிக்கு உருவமில்லை. நிலத்தை உழத் தொடங்கும் போது இத்தெய்வங்களுக்குச் சிறப்பான பூசைகள் நடைபெறும். பொங்கல், தீபாவளி, ஆடி பதினெட்டு ஆகிய

பண்டிகைகளையும் கொண்டாடுகின்றனர்.

சேர்வராயன்மலைவாசிகள் வருடத்திற்கு ஒருமுறை ஊர்ப் பொதுத் திருவிழா கொண்டாடுகின்றனர். இம்மக்கள் பெரும்பாலும் மாரியம்மன், காளியம்மனை வழிபடுகின்றனர்.

சவ்வாதுமலை ஊர்களில் மாரியம்மன், பிள்ளையார், காளிகோயில்கள் இருக்கின்றன. இங்கு புதிய கற்கால கல் ஆயுதங்கள் பிள்ளையாராக வணங்கப்படுகின்றன. மாரியம்மன் திருவிழா ஆண்டுதோறும் கொண்டாடப்படுகின்றது. ஒரு மலையாளி தன்னுடைய பிரார்த்தனைக்காகக் காளி கோயிலுக்குத் திருவிழா நடத்தினால் தன்னுடைய ஊரினருக்கு ஒரு குறிப்பிட்ட அளவு அரிசியும், பலி ஆட்டின் இறைச்சியில் மூன்றில் இரண்டு பங்கும் கொடுக்க வேண்டும் என்கின்றனர்.

கொல்லிமலையில் அறம் வளர்த்த நாயகி உடனுறை அறப்பளிசுவர் என்ற பெருந்தெய்வ வழிபாடும் உண்டு. எட்டுக்கை அம்மன் (கொல்லிப்பாவை), மாசி பெரியண்ணசாமி, கொங்கலாய் அம்மன், அரங்கத்தப்பன், நாச்சியம்மன் போன்ற சிறுதெய்வங்களும் வழிபடப்படுகின்றன.

மலையாளிகள் பழனி முருகன் கோயிலுக்குச் செல்வதை வழக்கமாகக் கொண்டுள்ளனர். கேரளத்தில் உள்ள அய்யப்பன் கோயிலுக்கும் சிலர் செல்வதுண்டு. முருகன் அருள் செய்வான் என்ற நம்பிக்கை இம்மக்களிடம் காணப்படுகிறது. இம்மக்கள் முருகனைப்

பாடியதை,

“கூனனல்ல முருகையா
குருடரெல்லாம் அங்கு
கோல்போட்டு ஏறுதையா முருகையா
சப்பாணியல்ல முருகையா
தாசரெல்லாம் அங்கு
தடிபோட்டு ஏறுதய்யா முருகையா
மொண்டியல்ல முருகையா
மூடவரெல்லாம் அங்கு
மண்டியிட்டு ஏறுதையா முருகையா
தேன் மணக்கும் முருகையா
தினை மணக்கும் இது
தென்பழனிச் சன்னதியில் முருகையா
நெற்றியிலே நீரிருக்கும் அரோகரா
நீரிருக்கும் சடையிருக்கும் அரோகரா”

என்பது உணர்த்தும். வாழ்க்கையில் கபடும் சூதும் அறியா இம்மக்களின் பாடல்களில் மண்வாசனை மட்டுமல்ல; மலைவாசனையும் வீசிக் கொண்டிருக்கிறது.

பழனியிலிருந்தும் இங்கு (மலைக்கு) குலசாமி கும்பிடுவதற்கு மக்கள் வருவதை களஆய்வின் வழிக் காணமுடிகிறது.

கொல்லிமலை உச்சியில் மாசி பெரியண்ணசாமி கோயில்

இருக்கிறது. அக்கோயிலில் நினைத்த காரியம் நினைவேறுவதற்கும், நிறைவேறிய காரியத்திற்காகவும் கற்களை அடுக்கி வைக்கின்றனர். இத்தகைய நம்பிக்கைகளில் அவர்கள் உறுதியாகவும் உள்ளனர். அந்தக் கோயிலைச் சுற்றி இரும்பாலான வேல் நட்டு வைக்கின்றனர். சிலர் கோயிலைச் சுற்றி மணி கட்டுகின்றனர்.

**வெறியாட்டு**

வெறியாட்டு என்னும் வெறியாட்டம் என்பது உணர்வு முறுக்கேறித் தன்நிலை மறந்து வெறி கொண்டு ஆடும் ஆட்டம் ஆகும். இன்று சாமி குடியேறி ஆண்களும் பெண்களும் சாமியாட்டம் ஆடுவதையே வெறியாட்டம் என்று கொள்ள இடமுண்டு. இதனை,

**"வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்**

**வெறியாட டயர்ந்த காந்தளும்"**(19 )

**"வேலன் வெறியயர் களத்துச் சிறுபல தாஅய்**

**விரவுவீ உறைத்து"**(20)

**"செந்நெல் வான்பொரி சிதறியன்ன"**(21)

என்பன விளக்குகின்றன. பழங்குடி மக்கள் இன்றும் மலைகளில் வெறிகொண்டு சாமியாட்டம் ஆடுகின்றனர். வேலன் எனும் முருகன் நினைவு ஏற்றி ஆடவரும் பெண்டிரும் உணர்வு முறுக்கேறிய நிலையில் வெறிகொண்டு அன்று ஆடிய ஆட்டம் வெறியாட்டம் ஆகும். இன்று அதனையே சாமியாட்டங்கள் சடங்குமுறை

நிகழ்வுடன் பலி கொடுத்து ஆடப்படுகின்றன.

கொல்லிமலையில் மாசி மாதம் பௌர்ணமியன்று மட்டும் கொண்டாடப்படும் மாசிபெரியண்ணசாமி கோயிலின் திருவிழா வேலன் வெறியாட்டு நிகழ்ச்சியோடு தொடர்புடையதாக இருக்கிறது. தங்கள் வாழ்க்கையில் வளம் பெறுவதற்காக சாமியாடியிடம் குறி கேட்கிறார்கள். சமவெளி மக்களே அதிகம் வருகின்றனர். சென்ற ஆண்டு வேண்டிக் கொண்டது நிறைவேறி விட்டால் கோயிலுக்குத் தேவையானவற்றை செய்கிறார்கள். வேலன் வெறியாட்டு நிகழ்ச்சி ஒலி, ஒளி காட்சியாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது.

கிலாக்காடு என்ற கிராமத்தில் இளைய இராமன் கோயில் திருவிழா நடைபெறுகிறது. சாமியாட்டம் நடைபெறுகிறது. இங்கும் சாமியாடி குறி சொல்கிறார். ஒவ்வொரு வாரமும் சனிக்கிழமை மாலை 6 மணிக்கு பேயோட்டம் நிகழ்ச்சி நடைபெறுகிறது. பேயின் தீமையிலிருந்து தப்பிட சங்ககால மக்கள் இலவம், வேம்பு இவற்றின் இலைகளை வீட்டிற் செருகினர். யாழும் பிற கருவிகளும் முழங்கினர். வெண் சிறுகடுகைப் புகைத்தனர். ஆம்பற் குழலை ஊதினர். இங்ஙனம் பண்டைத் தமிழரிடம் இருந்த பேய் பற்றிய நம்பிக்கைகள் இன்றும் பழங்குடியினரிடம் காணப்படுகின்றன.

**தொகுப்புரை**

மனிதனது பழக்கவழக்கங்கள் அவன் பிறந்தமண், சாதி, சமயம்

ஆகியவற்றிற்கு ஏற்ப மாறுபட்டு விளங்குகின்றன. மனிதனது சார்புகளைப் பொறுத்தும் அவனது பழக்கவழக்கங்கள் மாறுவதுண்டு. பழகிக் கொள்வது பழக்கம், வழங்கி வருவது வழக்கம்.

நம்பிக்கையை மனிதனது மூன்றாவது கை என்பர். சிற்றூர் மக்களின் நம்பிக்கைகள் வலுவானவை. அதனால் பல மூட நம்பிக்கைகளையும்கூட அம்மக்களால் உதறிவிட முடிவதில்லை. அவர்களின் நம்பிக்கைகள் கரு முதல் கல்லறை வரை தொடர்கின்றன. தொடர்ந்து பரம்பரை பரம்பரையாக, தொடர் நிகழ்வாக நம்பிக்கைகள் இருக்கின்றன. எனவேதான் இந்த நம்பிக்கைகள் மரபுகளின் அடையாளங்களோடு விளங்குகின்றன.

நம்பிக்கைகள் அக்காலம் முதல் இக்காலம் வரைக்கும் மக்களிடையே காணப்படுகின்ற உயரிய பண்பாட்டின் சின்னமாகத் திகழ்கின்றன. எந்தவொரு செயலும் வெற்றியோடு முடிய வேண்டும் என்பதில் அனைவருக்கும் விருப்பமும் எதிர்ப்பார்ப்பும் இருப்பதைக் காணமுடிகிறது.

தோற்றத்திலும் பேசும் மொழியிலும் பழக்கவழக்கங்களிலும் தொன்மையைப் பிரதிப்பலிக்கும் இந்து மலையாளிகளின் பாடல்கள், கோமாளிப் பாடல்கள், கேளிக்கைப் பாடல்கள், விழாக் காலங்களில் நடைபெறும் தெருக்கூத்து நாடகங்கள், தாலாட்டுப் பாடல்கள், திருமணப் பாடல்கள், இறப்புப் பாடல்கள் எனப்

பலவகையாக உள்ளன. பாடும் போது அவர்களின் உடற்மொழி உணர்ச்சி பாவத்துடன் காணப்படுகிறது.

சங்க காலத்தில் காணப்படுவதைப் போல, மலையின மக்கள் வாழிடத்தில் பாறைகளில் காணப்படும் பள்ளப் (குழி) பகுதிகளை உரலாகப் பாவித்து உலக்கை கொண்டு தானியங்களைப் பதப்படுத்துகின்றனர். மலையினப் பெண்கள் இத்தகைய பாறைகளில் உள்ள குழிகளைப் பயன்படுத்தி, தானியங்களை உலக்கை கொண்டு குத்தியதையும், ஊற வைத்த பருப்பு வகைகளை உரல் கொண்டும் அரைத்ததையும் கள ஆய்வின் வழி அறியமுடிகிறது.

மலைவாழ் மக்களின் பழக்க வழக்கங்கள் தற்போது மாற்றம் பெற்று வருகின்றன. இம்மக்கள் மற்றவர்களோடு காதல் திருமணம் செய்து கொள்கின்றனர். முன்பு பிறரோடு காதல் திருமணம் செய்தால் ஊரைவிட்டு ஒதுக்கி வைப்பர். இதற்குத் தண்டனையாக ஊருக்கு உணவிடுதல்; கோயிலுக்குப் பொருள் செலுத்துதல் ஆகியவை உள்ளன.

மலையாளிகளில் ஒருவர் இறந்துவிட்டால் அவர்கள் மேல் பணம் போடுகின்றனர். இது அவர்களின் பழக்கவழக்கங்களில் ஒன்றாகக் கருதப்பெறுகிறது. சேட்டூரிலிருந்து பறையர்களை வரவழைத்துத் தப்படிக்கின்றனர். பிணத்தை மேளத்தோடு பாடைகட்டித் தூக்கிச் சென்று புதைக்கின்றனர்.

கொல்லிமலையில் மாசி பெரியண்ணன் திருவிழாவில்

முதல்நாளில், ‘மாடு மாலை தாண்டும்’ நிகழ்ச்சி நடைபெறுகிறது. எல்லைக்கோட்டைத் தாண்டும் மாட்டின் உரிமையாளருக்கு ‘மணியக்காரர்’ என்ற பட்டம் சூட்டப்படுகிறது.

மலையாளிகள் இந்து சமயத்தைச் சார்ந்தவர்களாக உள்ளன. முன்பு பிராமணர்களைப் புறக்கணித்த இவர்கள் தற்போது அனைத்துத் தேவைகளுக்கும், சடங்குகளுக்கும் பிராமணர்களைப் பயன்படுத்துகின்றனர்.

மலையாளிகள் ஆடு, மாடு, கோழி வளர்க்கின்றனர். மாட்டின் இறைச்சி மட்டும் உண்பதில்லை; ஆனால் பன்றியின் இறைச்சியை உண்கின்றனர்.

கற்கடவுள் தங்களை மின்னல், இடி ஆகிய அபாயங்களிலிருந்து காப்பாற்றும் என மலையாளிகள் நம்புகின்றனர். பேய், பிசாசுகளைத் திருப்திப்படுத்தக் கோழி, ஆடு, பன்றி ஆகியவற்றைப் பலி கொடுக்கின்றார்கள். பேயோட்டும் நிகழ்ச்சியும் நடைபெறுகிறது. பெரும்பாலும் பெண்களையே பேய் (அணங்கு) பிடித்தாட்டுகிறது. குழந்தையின் பிறப்பு, திருமணம் ஆகியவற்றின் போது மூதாதையரை வழிபடுகின்றனர்.

கொல்லிமலையில் மாசி மாதம் பௌர்ணமியன்று மட்டும் கொண்டாடப்படும் மாசிபெரியண்ணசாமி கோயிலின் திருவிழா வேலன் வெறியாட்டு நிகழ்ச்சியோடு தொடர்புடையதாக இருக்கிறது. தங்கள் வாழ்க்கையில் வளம் பெறுவதற்காக

சாமியாடியிடம் குறி கேட்கிறார்கள். வேண்டியது நிறைவேறி விட்டால் கோயிலுக்குத் தேவையானவற்றை செய்கிறார்கள்.

கோயிலில் நினைத்த காரியம் நிறைவேறுவதற்கும், நிறைவேறிய காரியத்திற்காகவும் கற்களை அடுக்கி வைக்கின்றனர். இத்தகைய நம்பிக்கைகளில் அவர்கள் உறுதியாகவும் உள்ளனர். கோயிலைச் சுற்றி இரும்பாலான வேல் நட்டு வைக்கின்றனர். சிலர் கோயிலைச் சுற்றி மணி கட்டுகின்றனர்.

**சான்றெண் விளக்கம்**

*1. சு.சண்முகசுந்தரம், நாட்டுப்புற இயல், பக்.25-26.*

*2. கு.பகவதி, தமிழர் ஆடைகள், ப.120.*

*3. கரு.அழ.குணசேகரன், வஞ்சிக்காண்டத்தில் மலையின மக்களிசைப் பாடல் தன்மைகள், ப.6-7.*

*4. சிலம்பு:வஞ்சிக்காண்டம், வாழ்த்துக்காதை:26.*

*5. காண்க: பின்னிணைப்பு, பேட்டி எண்.5.*

*6. காண்க: பின்னிணைப்பு, பேட்டி எண்.6.*

*7. க.சண்முகசுந்தரம், நாட்டுப்புற இயல், ப.150.*

*8. அகம்.136.*

*9. கலிங்கத்துப்பரணி, 51.*

*10. ஆறு.இராமநாதன், நாட்டுப்புறப் பாடல்கள் காட்டும் தமிழர் வாழ்வியல், ப.241.*

*11. க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.105.*

*12. அ.அறிவுநம்பி, நாட்டுப்புறக் களங்கள், ப.94.*

*13. வி.சரசுவதி, நாட்டுப்புறப் பாடல்கள் சமூக ஒப்பாய்வு, ப.176.*

***14.* காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.105.**

***15.*** A grown person probably has ten thousands of beliefs hundred of attitudes but only dozens of valules - International encyclopedia of social science, Vol. 1&2/ p.455.

***16.* சு.சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு, ப.69.**

***17.* இரா.பாலசுப்பிரமணியன், நாட்டுப்புற வாழ்வியல், பக்.69-70.**

***18.* சு.சண்முகசுந்தரம், நாட்டுப்புற இயல், ப.167.**

***19.* தொல்.பொருள்.63.**

***20.* அகம்.114.**

***21.* குறுந்.53.**

## முடிவுரை

தோற்றத்திலும் பேசும் மொழியிலும் பழக்கவழக்கத்திலும் தொன்மையைப் பிரதிபலிக்கும் மக்களே பழங்குடியினர் ஆவர். பழங்குடி மக்களின் எளிமை, இயற்கையோடு இயைந்த வாழ்வு, நீண்ட மரபுள்ள அவர்களின் மருத்துவம் போன்றவை பாதுகாக்கக் கூடியவையாக உள்ளன. பழங்குடிகள் பொதுவாகப் பண்பாட்டிலும் சமூக வளர்ச்சியிலும் தன்னிறைவு கொண்டவர்களாகக் காணப்படுகின்றனர். பிற சமூகத்தினரோடு கலந்து உறவு கொள்ளாத நிலையில், தங்களது கலை, பண்பாடு, மரபு ஆகியவைகள் தன்னிறைவைக் கொடுப்பதாக எண்ணுகின்றனர்.

பழங்குடி மக்கள் என்பதற்குப் பழமையான குடிகள் என்று பொருள். இனவியல் என்பது ஒரு குறிப்பிட்ட இனத்தை மட்டும் ஆய்வு செய்வதாகும். இனவரைவியல் என்பது ஒன்றுக்கு மேற்பட்ட இனக்குழுக்களை ஆய்வு செய்வதாகும். அந்தவகையில் இவ்வாய்வு, இந்து மலையாளிகள் என்ற ஓரினத்தைப் பற்றிய இனவியல் ஆய்வாகக் கருதப்பெறுகிறது.

கடையேழு வள்ளல்களில் ஒருவனான வல்வில் ஓரி கொல்லிமலையை ஆட்சி செய்ததை இலக்கியங்கள் (புறநானூறு, சிறுபாணாற்றுப்படை) பதிவு செய்துள்ளன.

வரையறுக்கப்பட்ட பழங்குடிகளுக்கும் (ST), வரையறுக்கப்பட்ட இன வகுப்புகளுக்கும் (SC) வேற்றுமைகள்

உள்ளன. இவ்விரு வரையறுக்கப்பட்ட இன வகைகள் பொருளாதாரத்திலும், பண்பாட்டிலும் விளிம்புநிலை மக்களாக இருந்த போதிலும், இந்து மலையாளிகள் சமூகத்தில் தாழ்நிலையை அடையவில்லை என்பதும், சுய சார்புடையவர்களாகத் தனித்துக் காணப்படுபவர்கள் என்பதும் ஆய்வில் பெறப்படுகிறது.

மலையாளிகள் இம்மலைகளின் பூர்வ குடிகள் அல்ல. இவர்களுக்கென்று தனியாக மொழி கிடையாது. ஆங்கிலம் கலந்து தமிழ் பேசுபவர்களாக இருக்கின்றனர். நீண்ட காலமாக சமவெளிப் பகுதியினருடன் தொடர்பில்லாத காரணத்தினால், அவர்களின் பழக்கவழக்கங்கள், வாழ்க்கை முறைகள் தனித்துக் காணப்படுகின்றன. இதனால் இவர்கள் மலைகளின் பூர்வகுடிகள் அல்ல; வந்தேறிகள் என்பது ஆய்வில் பெறப்படுகிறது.

தொல்காப்பியத்தில் செய்தி என்பது தொழிலைக் குறிக்கும். மலையாளிகளின் முக்கியத் தொழில் விவசாயம், தேனீ வளர்த்தல், மரம் வெட்டுதல் ஆகும். வரகு, சோளம், கம்பு, தினை, நெல், சாமை, கேழ்வரகு ஆகியவற்றைப் பயிரிடுகின்றனர். காய்ந்து போன சந்தன மரத்தை வெட்டி வனத்துறையினருக்குக் கொடுத்துக் கூலி பெறுகின்றனர்.

பணப்பயிர்களான வெற்றிலை, மிளகு போன்றவற்றையும், தங்கள் உணவிற்காக எள், கீரை போன்றவற்றையும் பயிர் செய்கின்றனர். குச்சிக்(மரவள்ளி)கிழங்குப் பயிரிட்டு அதிக

வருவாய் ஈட்டுகின்றனர். தேன் போன்ற உணவுப் பொருட்களைச் சேகரிப்பது இவர்களின் மரபுத் தொழிலாகும்.

தங்கள் நிலங்களில் விவசாயம் செய்யும் விவசாயிகளாகவும், கூலி வேலை செய்யும் தொழிலாளர்களாகவும் மலையாளிகள் காணப்படுகின்றனர். மத்திய, மாநில அரசுகள் இவர்களுக்குத் தேவையான அனைத்து வசதிகளையும் செய்து கொடுத்து, வேலைவாய்ப்பினையும் பெற்றுத் தந்துள்ளன.

நூற்றுக்கும் மேற்பட்ட மலையாளிகள் பழத்தோட்டங்களில் வேலைவாய்ப்புப் பெற்றுள்ளனர். மலையாளிகள் காப்பித் தோட்டங்களிலும், பட்டுப்பூச்சி வளர்ப்புப் பண்ணையிலும், பழப்பண்ணையிலும் வேலை செய்து வருகின்றனர்.

மத்திய, மாநில அரசுகள், காட்டில் விளையும் பொருட்களையும், மற்ற விளைபொருட்களையும் பன்னோக்குக் கூட்டுறவுப் பண்டக சாலைகளின் மூலமாகப் பெற்று அவர்களுக்கு வழங்குகின்றன.

விவசாய வளர்ச்சிக்காக உயர்ரக விதைகள், நாற்றுகள் வினியோகிக்கப்படுகின்றன. பழங்குடியினரின் நிலங்களைப் பிற மக்கள் கையப்படுத்துவது தடுக்கப்பட்டுள்ளது. பழங்குடியினர் வாழும் கிராமங்களில் பள்ளிக்கூடங்கள், மருத்துவமனைகள் அமைக்கப்பட்டுள்ளன. நிலமற்ற மலைவாழ் பழங்குடியினராகிய மலையாளிகளுக்கு அரசின் வேலைவாய்ப்புத் திட்டங்களும்

பயனளிக்கின்றன.

இவர்கள் வேட்டைத்தொழில் செய்தாலும், அரசின் கட்டுப்பாட்டிலும், வனத்துறையினரின் தொடர் கண்காணிப்பிலும் தொழில் செய்து வருகின்றனர்.

ஆறலைத்தலும், பிச்சை எடுத்தலும் இந்து மலையாளி இன மக்களிடம் இல்லை. நரிக்குறவர்கள் எவரும் மலைகளில் வசிக்கவில்லை. திருவிழாக் காலங்களில் மலையாளிகளில் சிலர் சிறு வியாபாரம் செய்கின்றனர். மலையடிவாரங்களில் தேநீர்க் கடைகள், சிற்றுண்டிக் கடைகள் வைத்து தொழில் செய்வதையும் அறிய முடிகிறது.

மக்கள் இயற்கையை மனதில் எண்ணி எந்தவொரு செயலையும் செய்தால், தங்களுக்குப் பாதுகாப்பும், தாங்கள் நினைத்த காரியமும் நிறைவேறும் என்ற நம்பிக்கையில் சடங்குகளைச் செய்துள்ளனர்.

சடங்குகளின் போது மது அருந்துதல்; ஆவேசம் அடைதல் போன்ற நிகழ்வுகள் நடக்கின்றன. ஒவ்வொரு சடங்கின் போதும் விதவிதமான உணவுகளைப் படைத்து உண்கின்றனர். உயிர்களைப் பலியிட்டு, குருதி தெளித்தல் தொடர் நிகழ்ச்சியாகச் சடங்குகளில் காணப்படுகிறது. சடங்குகளின் போது பூ, வாசனைத் திரவியம், (சூடம், சாம்பிராணி, ஊதுபத்தி) தேங்காய், பழங்கள் (வாழை, எலும்பிச்சம்) ஆகியவற்றைப் பயன்படுத்துகின்றனர். சடங்குகளில்

ஆடல், பாடல், இசை ஆகிய யாவும் ஒன்றிணைந்துள்ளன.

இந்து மலையாளிகள் தம் வாழ்வியல் சடங்குகளாக, பிறப்புச் சடங்குகள், பூப்புச் சடங்குகள், திருமணச் சடங்குகள், இறப்புச் சடங்குகள் போன்றவற்றைச் செய்கின்றனர். இவர்கள் பிராமணர்களை ஒதுக்கிய நிலையில் சடங்குகளைக் குறைவாகச் செய்கின்றனர். தற்போது அனைத்துச் சடங்குகளும் பிராமணர்களை வைத்து நடத்தப்படுகின்றன. பழங்குடிகளின் திருமணச் சடங்குகள் சங்ககால நடைமுறைகளின் (மணமேடையில் நெல் பரப்பி மணமக்களை அமரச்செய்தல்) எச்சமாக இருப்பது பெறப்படுகிறது.

மலையாளிகளின் வாழ்வியல் சடங்குகள் அனைத்திலும் மாமன் உறவு முக்கியத்துவம் பெறுகிறது.

இந்து மலையாளி இனமக்கள் பெருந்தெய்வ வழிபாட்டையும், சிறுதெய்வ வழிபாட்டையும் கடைபிடிக்கின்றனர். பெருந்தெய்வ வழிபாடு ஆகம விதிப்படி பிராமணர்களைக் கொண்டு நிகழ்த்தப் பெறுகிறது. சிறுதெய்வ வழிபாடு பூசாரிகளால் நடத்தப்பெறுகிறது. மாசி பெரியண்ணன் கோயில் திருவிழா வெகு சிறப்பாக நடைபெற்றதை கள ஆய்வின் வழி அறிய முடிகிறது.

இயற்கையோடு இயைந்து வாழ்ந்துவரும் மலையாளிகள் தங்களுக்கு ஏற்படும் சிறுசிறு நோய்களுக்குத் தாங்களாகவே மருத்துவம் செய்து கொள்கிறார்கள். இம்மக்கள் பிரசவம் மற்றும் அவசரகாலச் சிகிச்சைக்குத் தற்போது அரசு மருத்துவமனைகளை

நாடுகின்றனர். முன்பு மருத்துவச்சிகளை வைத்து பிள்ளைப்பேறு பார்த்தார்கள். தற்போது மகப்பேறு பார்க்கத் தனியாக மருத்துவச்சி கிடையாது.

மலையாளிகள் நீண்ட நாட்கள் குணமாகாத நோய்களைத் தீர்த்து வைக்க பூசாரிகளை நம்புகின்றனர்.

குழந்தைகளுக்கு ஏற்படும் நோய்களுக்குப் பாலூட்டும் தாய்மார்கள் மருந்து உண்கிறார்கள். மருந்து தாய்ப்பாலின் வழியாகக் குழந்தைகளுக்குப் புகட்டப்படுகிறது.

இம்மக்கள் மலையில் உள்ள மூலிகைகள் பற்றியும் அதன் பயன்பாடு பற்றியும் அறிந்து வைத்துள்ளனர். இவர்களுள் சித்த மருத்துவர்களும் இருக்கிறார்கள்.

மன நலத்திற்கான மருத்துவ முறைகள் தேற்றுதல், ஆற்றுப்படுத்துதல், சந்து செய்வித்தல், வெறியாட்டுதல் போன்ற முறைகளில் அமைகின்றன. பழங்குடி மக்கள் உடல் நலத்திற்கான மருத்துவ முறைகள் மட்டுமல்லாமல் வெறியாடுதல் போன்ற முறைகளைப் பயன்படுத்தி மனநோய்களைப் போக்கி வருகின்றனர் என்பது கள ஆய்வில் பெறப்படுகிறது.

பழங்குடி மக்களின் மருத்துவ முறைகள் வாய்மொழியாகவே கடைபிடிக்கப்பட்டு வருகின்றன. அதனை ஆவணப்படுத்தும் விதமாக, அம்மூலிகைகளை பற்றிய செய்திகளைப் பதிப்பித்து, நூல்களாக வெளியிட்டால் எதிர்வரும் தலைமுறையினருக்குப்

பயன்படும்.

நம்பிக்கைகள் அக்காலம் முதல் இக்காலம் வரைக்கும் மக்களிடையே காணப்படுகின்ற உயரிய பண்பாட்டின் சின்னமாகத் திகழ்கின்றன. எந்தவொரு செயலும் வெற்றியோடு முடிய வேண்டும் என்பதில் அனைவருக்கும் விருப்பமும் எதிர்பார்ப்பும் இருப்பதைக் காணமுடிகின்றது.

இந்து மலையாளிகளின் பாடல்கள், திருமணப் பாடல்கள், இறப்புப் பாடல்கள், குறவன் குறத்திப் பாடல்கள், கேளிக்கைப் பாடல்கள், விழாக் காலங்களில் நடைபெறும் தெருக்கூத்து நாடகங்கள், தாலாட்டுப் பாடல்கள் என பல நிலைகளில் உள்ளன. பாடும் போது அவர்களின் உடற்மொழி (Body Language) உணர்ச்சி பாவத்துடன் காணப்படுகிறது.

சங்க காலத்தில் காணப்படுவதைப் போல, மலையின மக்கள் வாழிடத்தில் பாறைகளில் காணப்படும் பள்ளப் (குழி) பகுதிகளை உரலாகப் பாவித்து உலக்கை கொண்டு தானியங்களைப் பதப்படுத்துகின்றனர். மலையினப் பெண்கள் இத்தகைய பாறைகளில் உள்ள குழிகளைப் பயன்படுத்தி, தானியங்களை உலக்கை கொண்டு குத்துவதும், ஊற வைத்த பருப்பு வகைகளை உரல் கொண்டும் அரைப்பதும் கள ஆய்வின் வழி அறியமுடிகிறது.

மலைவாழ் மக்களின் பழக்க வழக்கங்கள் தற்போது மாற்றம் பெற்று வருகின்றன. மற்றவர்களோடு காதல் திருமணம் செய்து

கொள்கின்றனர். முன்பு பிறரோடு காதல் திருமணம் செய்தால் ஊரைவிட்டு ஒதுக்கி வைப்பர். இதற்குத் தண்டனையாக ஊருக்கு உணவிடுதல், கோயிலுக்குப் பொருள் செலுத்துதல் முதலானவை உள்ளன.

மலையாளிகளில் ஒருவர் இறந்துவிட்டால் அவர்கள் மேல் பணம் போடுவது அவர்களின் பழக்கவழக்கங்களில் ஒன்றாகக் கருதப்பெறுகிறது. சேட்டூரிலிருந்து ஒடுக்கப்பட்டவர்களை (பறையர்) வரவழைத்துத் தப்படிக்கின்றனர். பிணத்தை மேளத்தோடு பாடைகட்டித் தூக்கிச் சென்று புதைக்கின்றனர். தங்களை உயர்வகுப்பினராக; குறிப்பாகத் தங்களைக் கவுண்டர்கள் என்று கூறிக்கொள்ளும் இவர்கள், ஒடுக்கப்பட்டவர்களை வீட்டின் உள்ளே அனுமதிப்பதில்லை. இவர்களும் அவர்கள் வீட்டில் தண்ணீர் அருந்துவதுமில்லை.

கொல்லிமலையில் மாசி பெரியண்ணன் திருவிழாவில் முதல்நாளில், 'மாடு மாலை தாண்டும்' நிகழ்ச்சி நடைபெறுகிறது. எல்லைக்கோட்டைத் தாண்டும் மாட்டின் உரிமையாளருக்கு 'மணியக்காரர்' என்ற பட்டம் சூட்டுவதைப் பழக்கமாகவே வைத்துள்ளனர்.

மலையாளிகள் இந்துக்களாகவே காணப்படுகின்றனர். சில இடங்களில் கிருத்துவ அமைப்புகள் இவர்களுக்கு உதவுகின்றன. முன்பு பிராமணர்களைப் புறக்கணித்த இவர்கள் தற்போது அனைத்துத் தேவைகளுக்கும், சடங்குகளுக்கும் பிராமணர்களைப்

பயன்படுத்துகின்றனர் என்பது பெறப்படுகிறது.

மலையாளிகள் ஆடு, மாடு, கோழி வளர்க்கின்றனர். மாட்டின் இறைச்சியை உண்பதில்லை; ஆனால் பன்றியின் இறைச்சியை உண்கின்றனர்.

கற்கடவுள் தங்களை மின்னல், இடி ஆகிய அபாயங்களிலிருந்து காப்பாற்றும் என மலையாளிகள் நம்புகின்றனர். பேய், பிசாசுகளைத் திருப்திப்படுத்தக் கோழி, ஆடு, பன்றி ஆகியவற்றைப் பலி கொடுக்கின்றார்கள். பேயோட்டும் நிகழ்ச்சியும் நடைபெறுகிறது. பெரும்பாலும் பெண்களையே பேய் (அணங்கு) பிடித்தாட்டுகிறது. குழந்தையின் பிறப்பு, திருமணம் ஆகியவற்றின் போது மூதாதையரை வழிபடுகின்றனர்.

கொல்லிமலையில் மாசி மாதம் பௌர்ணமியன்று மட்டும் கொண்டாடப்படும் மாசிபெரியண்ணசாமி கோயிலின் திருவிழா வேலன் வெறியாட்டு நிகழ்ச்சியோடு தொடர்புடையதாக இருக்கிறது. தங்கள் வாழ்க்கையில் வளம் பெறுவதற்காக சாமியாடியிடம் குறி கேட்டு, வேண்டியது நிறைவேறி விட்டால் கோயிலுக்குத் தேவையானவற்றை செய்கிறார்கள்.

கோயிலில் நினைத்த காரியம் நிறைவேறுவதற்கும், நிறைவேறிய காரியத்திற்கும் கற்களை அடுக்கி வைக்கின்றனர். இத்தகைய நம்பிக்கைகளில் அவர்கள் உறுதியாகவும் உள்ளனர். கோயிலைச் சுற்றி இரும்பாலான வேல் நட்டு வைப்பதும்,

கோயிலைச் சுற்றி மணி கட்டுவதும் அவர்களின் நம்பிக்கையைப் பிரதிபலிக்கின்றது.

**இந்து மலையாளி இனமக்களின் வாழ்வியல் முறைகள்** என்ற இவ்வாய்வு கீழ்வரும் சில பொருண்மைகளைத் தந்து மேலாய்வு செய்வதற்குக் களம் அமைத்துக் கொடுக்கிறது.

♦ *பழங்குடிகளின் வாழ்க்கையைத் தாங்கள் உணரக்கூடிய வகையில் அவர்களுக்குக் கல்வி போதிக்கப்பட வேண்டும். அப்போது தான் அவர்கள் வாழ்வில் உயர்வு ஏற்படும் என்பதை மேலாய்வு செய்து அவர்களுக்கு வழிகாட்டலாம்.*

♦ *நவீன பொருள் உற்பத்திமுறையை அவர்களுக்குக் கற்பித்து, மற்ற மக்களோடு அவர்களை ஒன்றுபடுத்த வேண்டும். அடுத்த நூற்றாண்டிற்கு அவர்களை அழைத்துச் செல்வதும், அரவணைத்துச் செல்வதும் தான் அவர்களின் சிக்கல்களுக்குத் தீர்வாகும் என்பது கவனத்திற் கொள்ளப்பட்டு ஆய்வு மேற்கொள்ளலாம்.*

♦ *புதிய புதிய நோய்களின் வருகையால் புதிய மருந்துகள் கண்டுபிடிப்பது மிக அவசியமாகக் காணப்படுகிறது. பழங்குடி மக்கள் பயன்படுத்தும் மூலிகைகளை ஆராய்ந்து, புதிய நோய்களுக்கு மருந்து கண்டுபிடிக்க அம்மூலிகைகள் உதவியுடன் ஆய்வு செய்வதற்கு இவ்வாய்வு, களம் அமைத்துக் கொடுத்துள்ளது.*

♦ *பிற மலையின மக்களின் வாழ்வியலை ஆராய்வதற்கு இவ்வாய்வு முன்னுதாரணமாக அமையும்.*

# துணைநூற்பட்டியல்


1. அறவாணன், க.ப., — அற்றைநாட் காதலும் வீரமும், மெய்யப்பன் தமிழாய்வகம், 53, புதுத்தெரு, சிதம்பரம் 608 001, முதற்பதிப்பு: டிசம்பர் 2002.

2. இளங்கோ,நா,. (தெளிவுரை) — பொருநராற்றுப்படை, கங்கை புத்தக நிலையம், 13, தீனதயாளு தெரு, தியாகராய நகர், சென்னை 600 017. முதற்பதிப்பு ஜுன்: 2010.

3. கரிகாலன், நைசி,. (தொ) — பத்துப்பாட்டு ஆய்வுகள், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., 41பி, சிட்கோ இண்டஸ்ரியல் எஸ்டேட், சென்னை, 1989.

4. காந்தி, க. — தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சி.ஐ.டி. வளாகம், தரமணி, சென்னை, இரண்டாம் பதிப்பு 2003.

5. குணசேகரன், கே.ஏ., — நாட்டுப்புற நடனங்களும் பாடல்களும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., 41பி, சிட்கோ இண்டஸ்ரியல் எஸ்டேட், சென்னை, 1989.

6. கைலாசபதி, க., — பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும், மக்கள் வெளியீடு, சென்னை, 1978.

*7. சக்திவேல், சு,.* — *நாட்டுப்புறவியல் ஆய்வு,*
*மணிவாசகர் பதிப்பகம்,*
*31, சிங்கர்தெரு, பாரிமுனை,*
*சென்னை,*
*முதற்பதிப்பு 1983.*

*8. சசிவல்லி, சி.,* — *பண்டைத் தமிழர் தொழில்கள்,*
*உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,*
*சென்னை 600 113,*
*1989.*

*9. சஞ்சீவி, ந.,* — *அ.மு.ப.வின் பழங்குடி மக்கள் ஆராய்ச்சி,*
*பேரா.மு.வ., பேரா.அ.மு.ப கருத்தரங்கக் கட்டுரைகள்,*
*பச்சையப்பர் கல்லூரித் தமிழ் முதுகலை பழைய மாணவர் மன்றம்,*
*சென்னை 30,*
*முதற்பதிப்பு: மார்ச் 1972.*

*10. சண்முகசுந்தரம், சு.,* — *நாட்டுப்புறவியல்,*
*16, இரண்டாம் குறுக்குத்தெரு,*
*டிரஸ்ட்புரம், கோடம்பாக்கம்,*
*சென்னை - 600 024,*
*இரண்டாம் பதிப்பு: ஏப்ரல், 2007.*

*11. சுப்பிரமணியன், கா.,* — *சங்ககாலச் சமுதாயம்*
*(ஆய்வுக் கட்டுரைகள்),*
*நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,*
*41, பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,*
*சென்னை 600 098,*
*இரண்டாம் பதிப்பு: ஆகஸ்ட் 1987.*

*12. சுப்பிரமணியன், ச.வே.,(உ.ஆ)* *சிலப்பதிகாரம்,*
*கங்கை புத்தக நிலையம்,*
*13, தீனதயாளு தெரு, தியாகராய நகர்,*
*சென்னை 600 017.*
*முதற்பதிப்பு மார்ச்: 1998.*

*13. செயபால், இரா.,* *அகநானூறு,*
*நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,*
*41பி, சிட்கோ இண்டஸ்ரியல் எஸ்டேட்,*
*சென்னை,*
*முதற்பதிப்பு ஏப்ரல் 2004.*

*14. செல்வராசு, சிலம்பு, நா.,* *சங்க இலக்கிய மறுவாசிப்பு,*
*சமூகவியல், மானுடவியல் ஆய்வுகள்,*
*காவ்யா,*
*16, இரண்டாம் குறுக்குத்தெரு,*
*டிரஸ்ட்புரம், கோடம்பாக்கம்,*
*சென்னை 600 024,*
*முதற்பதிப்பு: 2005.*

*15. செல்லப்பெருமாள், ஆ,.(தொ)* *தென்தமிழ்நாட்டுப் பழங்குடிகள்,*
*(ஆய்வுக் கட்டுரைகளின் தொகுப்பு)*
*ஆய்வுத்திட்டம்,*
*பாவினப்பாகுபாடு: நாட்டுப்புறவியலும்*
*பழங்குடிகளும்,*
*டோக் பெருமாட்டி கல்லூரி வளாகம்,*
*மதுரை 625 002.*

*16. பக்தவத்சல பாரதி, சீ.,* *பண்பாட்டு மானிடவியல்,*
*மணிவாசகர் பதிப்பகம்,*
*சென்னை,*
*1990.*

*17. பாலசுப்பிரமணியன், கு.வெ., குறுந்தொகை, (பகுதி - I)*
*பாவை பிரிண்டர்ஸ்,*
*142, ஜானி ஜான் கான் ரோடு,*
*ராயப்பேட்டை, சென்னை,*
*முதற்பதிப்பு ஏப்ரல் 2004.*

*18. பாலசுப்பிரமணியன், இரா., நாட்டுப்புற வாழ்வியல்,*
*சத்யா பப்ளிகேஷன்ஸ்,*
*மதுரை,*
*முதற்பதிப்பு 1990.*

*19. பிலோ இருதயநாத், கொங்கு மலைவாசிகள்,*
*தென்றல் நிலையம்,*
*சென்னை.*

*20. முத்தையா, இ,. நாட்டுப்புற மருத்துவ மந்திரச்*
*சடங்குகள்,*
*அன்னம் பதிப்பகம்,*
*சிவகங்கை,*
*1986,*

*21. தமிழ்நாடன் (தொ.ஆ), தமிழ்நாட்டு மலைவாழ் பழங்குடி மக்கள்,*
*(ஆய்வுக் கட்டுரைகளின் தொகுப்பு)*
*செய்தி மக்கள் தொடர்புத்துறை,*
*சேலம்,*
*1988.*

*22. தமிழ்முடி, புலவர், (தெளிவுரை) சிறுபாணாற்றுப்படை,*
*கங்கை புத்தக நிலையம்,*
*13, தீனதயாளு தெரு, தியாகராய நகர்,*
*சென்னை 600 017.*
*முதற்பதிப்பு ஜுன்: 2010.*

23. தட்சிணாமூர்த்தி, அ., (உ.ஆ), ஐங்குறுநூறு மூலமும் உரையும், நியூசெஞ்சுரி புக்ஹவுஸ்(பி)லிட். 41பி, சிட்கோ இன்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை 600 098.

24. தாமோதரம்பிள்ளை, சி.வை., கலித்தொகை, பாரி நிலையம், 184, பிராட்வே, சென்னை-106, முதற்பதிப்பு 2006.

25. வெள்ளை வாரணன், க., தொல்காப்பியம் தமிழிலக்கிய வரலாறு, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை நகர், சிதம்பரம், 1970.

26. பிறைமதி. அ., முனைவர், கொல்லிமலை மக்களின் நாட்டுப்புற இலக்கியங்கள், பாவை பப்ளிகேஷன்ஸ், 142, ஜானி ஜான் கான் சாலை, இராயப்பேட்டை, சென்னை 600 104, முதற்பதிப்பு: டிசம்பர் 2007.

27. இராசேந்திரன், ம. முனைவர், மெக்கன்சி சுவடிகளில் தமிழகப் பழங்குடி மக்கள், பிற விபரங்கள் இல்லை.

28. இராபர்ட் சத்திய சோசப், தா., குறும்பர்களின் உறவுமுறை, தஞ்சைப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், முதற்பதிப்பு: பிப்ரவரி 2001.

*29.* ஓூர்து, தே,. நாட்டார் வழக்காற்றியல்,
பாரிவேள் பதிப்பகம்,
பாளையங்கோட்டை,
*1984.*

**இலக்கண நூல்கள்**

*1.* ................. தொல்காப்பியம் பொருளதிகாரம்,
இளம்பூரணர் உரையுடன்,
திருநெல்வேலி சைவ
சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை,
*1953.*

*2.* ................. தொல்காப்பியம் பொருளதிகாரம்,
அகத்திணையியல் புறத்திணையியல்
களவியல், கற்பியல், பொருளியல்,
நச்சினார்க்கினியர் உரை,
திருநெல்வேலி சைவ சித்தாந்த
நூற்பதிப்புக் கழகம்,
சென்னை,
*1953.*

*3.* ................. தொல்காப்பியம் பொருளதிகாரம்,
பேராசிரியர் உரை,
திருநெல்வேலி சைவ சித்தாந்த
நூற்பதிப்புக் கழகம்,
சென்னை,
*1953.*

*4. இளவழகன், கோ., (ப.ஆ)* *தொல்காப்பியம் - பொருள், இளம்பூரணர் I, இரா.இளங்குமரனாரின் வாழ்வியல் விளக்கம், தமிழ்மண் பதிப்பகம், சென்னை - 17, 2003.*

**அகராதிகள்**

*1. ..............* *க்ரியாவின் தற்காலத் தமிழ்ப் பெயரகராதி, ஏ.268, ராயப்பேட்டை ஹைரோடு, சென்னை -14, 1994.*

*2. ..............* *தமிழ்ப் பேரகராதி, தொகுதி 4, சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, 1938.*

*3.* *வாழ்வியற் களஞ்சியம் தொகுதி* (II, V, X), *தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 2001.*

*4.* *கலைக்களஞ்சியம், தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை, 1958-59.*

**இதழ்கள் & ஆய்வுக்கோவை**

*1. .............* *தமிழியல்,*
*உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,*
*சென்னை,*
*ஜூன் 2009, ஜூன்- டிசம்பர் 2011.*

*2. .............* *இந்தியப் பல்கலைக்கழக*
*ஆய்வுக் கோவைகள்.*

**இணையம்**

1.www.scheduled tribes in tamilnadu

2. http/: palangudikal - Indu malayalikal

## பின்னிணைப்புகள்

### பேட்டி எண்:1

| பேட்டி கண்டவர் : | பேட்டி கொடுத்தவர்: |
|---|---|
| பெயர்: கலா | பெயர்: சே.முத்துசாமி |
| முனைவர்பட்ட ஆய்வாளர்(ப.நே) | வயது: 58 |
| அழகப்பா பல்கலைக்கழகம், | தொழில்: விவசாயம் |
| காரைக்குடி - 3 | ஊர்:அரியூர், கொல்லிமலை |
| | நாள்: 25.2.2013 |

*1. கொல்லிமலையைச் சுற்றி எத்தனை மலைகள் உள்ளன? அவை யாவை?*

*கொல்லிமலையைச் சுற்றி பத்துக்கும் மேற்பட்ட மலைகள் உள்ளன. மேற்கே பச்சைமலையும், கிழக்கே போதமலையும், ஜெர்குமலையும் உள்ளன.*

*2. செம்மேடு பற்றி கூறுங்களேன்?*

*கொல்லிமலையின் ஊராட்சி ஒன்றியம் செம்மேட்டில் உள்ளது. செம்மேடு ஒரு சுற்றுலாத் தளமாக உள்ளது. இங்கே, வல்வில் ஓரி சிலை, படகுக்குழாம், தங்கும் தனியார் விடுதி போன்றவை உள்ளன.*

*3. எத்தனை ஊராட்சிகள் உள்ளன? எத்தனை நாடுகள் உள்ளன?*

*இவ்வூராட்சி ஒன்றியத்தில் 14 ஊராட்சிகள் உள்ளன. பதினான்கு ஊராட்சிகளும் 14 நாடுகள் என்று அழைக்கப்படுகின்றன. அதில் வாழவந்தி, அரியூர், தென்னாறு, சேலூர், தேவானூர், குண்டூர், ஆலத்தூர், எடப்புளி, திருப்புளி, பாய்ல்* (Bail) *பேரக்கரை, சிட்டூர், வளப்பூர், அடுக்கம்புதூர், கோம்பை முதலியனவாகும்.*

*5. மலையாளிகளின் வீடுகளின் சிறப்பம்சங்கள் யாது?*

*மலையாளிக் குடிசையின் உட்பகுதியில் பரண் அமைத்திருப்பது ஒரு குறிப்பிடத்தக்க அம்சமாகும். கூரையைத் தாங்க அமைக்கப்படும் அடைக்கட்டையின் மீது பரண் அமைக்கப்படுகின்றது. ஏணி வைத்துப் பரணுக்குச் செல்ல வேண்டும். கூரையின் கீழ் நோக்கிய சரிவு முனை ஏறத்தாழ தரையைத் தொடும். வீட்டின் நுழைவாயிலை ஒட்டிச் சிறு திட்டு அமைக்கப்படுகிறது. இது திண்ணையாகவும், கோழிகளை அடைக்கும் கூண்டாகவும் பயன்படுகிறது.*

## பேட்டி எண்:2

| | |
|---|---|
| **பேட்டி கண்டவர் :** | **பேட்டி கொடுத்தவர்:** |
| பெயர்: கலா | பெயர்: சித்தாக்கவுடர் |
| முனைவர்பட்ட ஆய்வாளர்(ப.நே) | வயது: 45 |
| அழகப்பா பல்கலைக்கழகம், | தொழில்: விவசாயம் |
| காரைக்குடி - 3 | ஊர்: கும்மாப்பட்டி |
| | நாள்: 24.4.2008 |

*1. சேர்வராயன்மலையைப் பற்றிக் கூறுங்கள் அய்யா?*

சேலம் மாவட்டத்தில் புகழ்வாய்ந்த மலை சேர்வராயன்மலை. ஏற்காடு சுற்றுலாத் தளமாக உள்ளது. மான்ஃபோர்டு பள்ளிக்கூடம் இங்குதான் உள்ளது.

*2. மலைக் கிராமங்களுக்குச் செல்ல முடியுமா?*

மலைக் கிராமங்களுக்குச் செல்வது மிகுந்த சிரமத்தை உண்டாக்கும். அடர்ந்த காட்டுப்பகுதி அதனால் தங்களின் வாகனம் செல்ல முடியாது.

*3. எத்தனை மலைக் கிராமங்கள் உள்ளன?*

ஏறத்தாழ 67 வருவாய் கிராமங்கள் ஏற்காட்டைச் சுற்றி உள்ளன. அதில் செங்காடு, ஆத்தியூர், கிளியூர், மாவுத்தூர், புதூர், வாழவந்தி, மஞ்சுக்குட்டை, ஓலக்காடு, மந்திரிக்காடு, பிளியூர் போன்றவை குறிப்பிடத்தக்கவைகளாகும்.

*4. மலையாளிகளின் கட்டட அமைப்பைப் பற்றிக் கூறுங்கள் அய்யா?*

சேர்வராயன்மலை மலையாளிகளின் குடிசைகள் மூங்கில் பத்தைகளால் முடைந்த தட்டிகளைக் கொண்டு கட்டப்பட்டவை. காட்டுப்புற்களால் கூரை வேயப்பட்டவை. செங்கல், ஓடு ஆகியவற்றைப் பயன்படுத்த மாட்டோம். அது தேவதைகளுக்குக் கோபத்தை ஏற்படுத்தும் என்பது எங்களது நம்பிக்கை. குடிசைகள் வட்ட சதுர, செவ்வக வடிவங்களில் அமைப்பதுதான் எங்களின் வழக்கமாகும்.

## பேட்டி எண்:3

| | |
|---|---|
| **பேட்டி கண்டவர் :** | **பேட்டி கொடுத்தவர்:** |
| பெயர்: கலா | பெயர்: சி.பெருமாள் |
| முனைவர்பட்ட ஆய்வாளர்(ப.நே) | வயது: 48 |
| அழகப்பா பல்கலைக்கழகம், | தொழில்: விவசாயம் |
| காரைக்குடி - 3 | ஊர்: கருமந்துறை கல்வராயன்மலை |
| | நாள்: 28.04.2008 |

**1.** *கல்வராயன்மலையில் எத்தனை மலைகள் உள்ளன?*

இரண்டு மலைகள் உள்ளன. அவை, பெரிய கல்வராயன்மலை, சின்னக் கல்வராயன்மலை எனப்படும்.

**2.** *அவை ஒரே மாவட்டத்தில் உள்ளனவா?*

இல்லை, பெரிய கல்வராயன்மலை சேலம் மாவட்டத்திற்கு உட்பட்டும், சின்ன கல்வராயன்மலை விழுப்புரம் மாவட்டத்திற்கு உட்பட்டும் உள்ளன.

**3.** *பெரிய கல்வராயன்மலையில் எத்தனை நாடுகள் உள்ளன?*

ஆறு நாடுகள் உள்ளன. அவை: மலையாளப்பட்டி, நெய்யாமலை, சின்னகல்வராயன் வடக்கு, பெரிய கல்வராயன் தெற்கு, பெரிய கல்வராயன் கீழநாடு, பெரிய கல்வராயன் மேல் நாடு ஆகியனவாகும்.

## பேட்டி எண்:4

| | |
|---|---|
| **பேட்டி கண்டவர் :** | **பேட்டி கொடுத்தவர்:** |
| பெயர்: கலா | பெயர்: அ.குள்ளப்பன் |
| முனைவர்பட்ட ஆய்வாளர்(ப.நே) | வயது: 45 |
| அழகப்பா பல்கலைக்கழகம், | தொழில்: விவசாயம் |
| காரைக்குடி - 3 | ஊர்: கல்வராயன்மலை |
| | நாள்: 23.02.2008 |

*1. இந்து மலையாளிகளின் முக்கியத் தொழில்களாக உள்ளவை யாவை?*

விவசாயம், தேனீ வளர்த்தல், மரம் வெட்டுதல் முக்கியத் தொழில்களாக உள்ளன.

*2. எள் வகைப்பாட்டினைக் கூற முடியுமா?*

இதில் நான்கு வகையான எள் உள்ளன. அவை, (1) சித்திரைக்காளி, (2) புரட்டாசிக்காளி, (3) ஐப்பசிக்காளி, (4) உச்சிஎள் என்பவையாகும். அவற்றில் மூன்றும் அந்தந்த மாதங்களில் விதைக்கப்படுவதால் அப்பெயர் பெற்றன.

*3. உச்சி எள்ளின் பயன் என்ன?*

உச்சிஎள்ளில் இருந்து எடுக்கும் எண்ணெய்யை எவரும் விற்பதில்லை. அதை அவர்களே சமையலுக்குப் பயன்படுத்துகின்றனர். இது சுவையாகவும் உடல்நலத்திற்கு உகந்ததாகவும் இருக்கும்.

*4. காலநிலைக்கேற்ப என்னென்ன தொழில்களைச் செய்து வருகிறீர்கள்?*

வாசனைப் பொருட்களைச் சேகரித்தல், காடு திருத்துதல், பாத்தி அமைத்தல், பயிர்களைக் காத்தல், கிழங்கெடுத்தல், நெல்லிக்காய், களாக்காய் சேகரித்தல் போன்ற தொழில்களை காலநிலைக்கேற்ப செய்து வருகிறோம்.

*5. பால் கறந்து விற்கும் தொழிலில் போதிய வருமானம் கிடைக்கிறதா?*

இத்தொழிலில் குடும்பத்திற்குப் போதிய வருமானம் கிடைக்கவில்லை.

## பேட்டி எண்:5

| | |
|---|---|
| **பேட்டி கண்டவர் :** | **பேட்டி கொடுத்தவர்:** |
| பெயர்: கலா | பெயர்: **சி.செல்லதுரை,** |
| முனைவர்பட்ட ஆய்வாளர்(ப.நே) | வயது: 36 |
| அழகப்பா பல்கலைக்கழகம் | **படிப்பு:** M.A., B.Ed., |
| காரைக்குடி - 3 | **தொழில் : அறப்பளீசுவரர் திருக்கோயில் பணியாளர்** |
| | ஊர்: கொல்லிமலை |
| | நாள்: 18.04.2013 |
| | அலைபேசி: 9976109479 |

*1. தங்களைப் பற்றிக் கூறுங்களே?*

நான் ஆசிரியருக்கானப் படிப்பு படித்திருக்கின்றேன். ஆனால் ஆசிரியர் பணி இன்னும் கிடைக்கவில்லை. தற்போது அறப்பளீசுவரர் திருக்கோயில் பணியாளராகப் பணியாற்றுகிறேன்.

*2. விவசாயம் அறிவீர்களா?*

எங்கள் குடும்பம் விவசாயக் குடும்பம். எங்கள் நிலத்தில் குச்சிக்கிழங்கு, மிளகு, மஞ்சள் போன்றவை பயிரிடுவோம்.

*3. குச்சிக்கிழங்கு பயிரிடுவதற்கு எவ்வளவு செலவாகும்? லாபம் எவ்வளவு கிடைக்கும்?*

ரூபாய் 18,000/- லிருந்து 20,000/- வரை செலவாகும். அதிக லாபம் கிடைக்க வாய்ப்பில்லை. சந்தை நிலவரத்தைப் பொறுத்தே லாபம் கிடைக்கும். மழை அளவைப் பொறுத்தே அனைத்து விவசாயத் தொழில்களும் நடைபெறுகின்றன.

*4. மிளகு பயிரிடுவதைப் பற்றிக் கூறுங்களே?*

மிளகு, கொடியாகப் படரவிடுகின்ற தாவரமாகும். சிறு சிறு துண்டுகளாக வெட்டி நடுவோம். சவுக்கு மரத்தில் ஏற்றி விடுவோம். இரண்டு தடவை களை எடுப்போம். சாணி எரு வைப்போம். ஒரு மூடை மிளகுக்கு ரூபாய் 400/- வரை கிடைக்கும். செலவு கிட்டத்தட்ட ரூபாய் 20,000/- ஆகும்.

*5. வெற்றிலை பயிரிடுவீர்களா?*

கொல்லிமலையில் வெற்றிலை பயிரிடுவதில்லை.

***5. நீங்கள் வேறு இனத்தவரோடு திருமண பந்தம் ஏற்படுத்திக் கொள்வீர்களா?***

***மற்றவர்களோடு காதல் திருமணம் செய்து கொள்கின்றனர். முன்பு பிறரோடு காதல் திருமணம் செய்தால் ஊரைவிட்டு ஒதுக்கி வைப்பர். அதற்குக் 'குத்து' என்று பெயர். குற்றம் என்பதே குத்து என்றாகிவிட்டது என்கின்றனர். இக்குற்றத்திற்குக் கூட்டம் போட்டு முடிவு செய்து தண்டனை வழங்குகின்றனர். காவல்நிலையம் செல்வதில்லை. சில வேளைகளில் கட்டப்பஞ்சாயத்து செய்து காவல்நிலையம் செல்வதைத் தவிர்க்கின்றனர். அதற்கு அவர்கள் ஊருக்கு உணவிடுதல் வேண்டும்; கோயிலுக்குப் பொருள் செலுத்துதல் வேண்டும்.***

## பேட்டி எண்:6

**பேட்டி கண்டவர் :**
பெயர்: கலா
முனைவர்பட்ட ஆய்வாளர்(ப.நே)
அழகப்பா பல்கலைக்கழகம்
காரைக்குடி - 3

**பேட்டி கொடுத்தவர்:**
பெயர்: அ. ராசாத்தி
வயது: 35
படிப்பு: இல்லை
தொழில்: வியாபாரம் (வடை, பணியாரம்)
ஊர்: நத்துக்குளிப்பட்டி கொல்லிமலை
நாள்: 25.02.2013

*1. உங்களைப் பற்றிக் கூறுங்களேன்?*

என் பெயர் ராசாத்தி. என் கணவர் பெயர் அப்பாதுரை எங்க ஊர் கொல்லிமலையைச் சேர்ந்த நத்துக்குளிப்பட்டி. நாங்கள் வடை, பணியாரம் வியாபாரம் செய்கிறோம்.

*2. திருமணச் சடங்குகள் பற்றி கூறுங்களேன்?*

திருமணம் மூன்று நாட்கள் நடைபெறும். முதல் நாள் நிச்சயதார்த்தம், இரண்டாம் நாள் தாலிகட்டுதல் (தங்கத்தாலி) நிகழ்ச்சி நடைபெறும். மூன்றாம் நாள் கறிவிருந்து நடைபெறும். பெண் வீட்டில் திருமணம் நடைபெறும். பிராமணர்களை வைத்துதான் திருமணம் நடத்துகிறோம்.

மாப்பிள்ளை தாலி கட்டி முடித்தபின், மணமகள் செம்பில் தண்ணீர் கொண்டு சென்று அருகிலுள்ள கிணற்றுக்குள் அத்தண்ணீரை ஊற்ற வேண்டும். தண்ணீருக்குள் வெற்றிலை இருக்கும். திருமணத்தை ஊர்க் கவுண்டர் அல்லது தண்டார் வைத்து நடத்துகிறார்கள். சில ஊர்களில் கோயிலில் வைத்தும் திருமணம் நடைபெறும். பூப்பெய்திய குறுகிய காலத்திலேயே திருமணம் நிச்சயிக்கப்பட்டுவிடும். பெரும்பாலும், அரசு விதிகள் கடைபிடிப்பதில்லை. திருமணம் முடிந்த ஒரு வாரத்திற்குப் பின் தாலி பெருக்கிப் போடும் நிகழ்ச்சி தற்போது பழக்கத்தில் உள்ளது. வரதட்சணை வாங்குவதும் இல்லை; கொடுப்பதும் இல்லை. அவரவர் வசதிக்குத் தக்கபடி பெண்ணிற்குச் சீர் செய்கின்றனர். முன்பு கால்நடைகள் வழங்கப்பட்டதைப் போன்று தற்போது கொடுப்பது கிடையாது.

*3. பூப்புச் சடங்கு எவ்வாறு நடைபெறுகிறது?*

பெண் ஆளானவுடன் தாய் மாமன் அல்லது மச்சான் வந்து சடங்கு

செய்வான். ஊரில் அதற்கென ஒதுக்கப்பட்ட இடத்தில்தான் பூப்படைந்த பெண் தங்கவேண்டும். பெண் குடிசையில் மூன்று மாதங்கள் தனிமையில் வைக்கப்படுகிறாள். பூப்படைந்த பெண்ணுக்கு உணவு தனியாகக் கொடுக்கப்படுகிறது. அப்பெண் குடிப்பதற்குப் பால், நாட்டுக்கோழி முட்டை ஆகியவற்றைக் கொடுக்கின்றனர். உளுந்துக்கஞ்சி கொடுக்கின்றனர். உளுந்துக்கஞ்சி, பச்சரிசி, உளுந்து, பனைவெல்லம் கலந்த சுவையான உணவாகும்.

தீட்டுக் கழித்த பின் வீட்டிற்கு அழைக்கப்படுவாள். பின்னர் பூப்படைந்த பெண் தங்கியிருந்த குடிசையினைப் பிரித்து அதனைத் தீயிட்டு எரித்து விடுகின்றனர். அவள் அணிந்திருந்த ஆடைகளும் தீயிட்டு எரிக்கப்படுகிறது. பொதுக் கிணற்றில் குளித்தப்பிறகே வீட்டிற்குள் அனுமதிக்கப்படுகிறாள். வீட்டு எல்லையில் அவள் மீண்டும் ஒருமுறை குளித்த பின்னரே வீட்டிற்குள் சேர்த்துக் கொள்ளப்படுவாள். வீட்டிற்கு வந்த பெண்ணை அலங்கரிக்கின்றனர். தற்போது பிராமணர்களை வைத்துச் சடங்கு செய்கின்றனர். சடங்கு நிறைவு பெற்றவுடன் கறி விருந்து நடைபெறும்.

*3. உங்கள் இனத்தில் மகப்பேறு சடங்குகள் எவ்வாறு நிகழ்த்தப் பெறுகின்றன?*

**மகப்பேறு தாய் வீட்டிலேயே நடைபெறுகிறது. பெண்ணை தாய்வீட்டுக்கு அழைக்கச் செல்லும்போது சகுனம் பார்ப்பதுண்டு. மகப்பேறு எளிதாக இல்லாவிட்டால் சாமிகேட்கும் பழக்கம் உண்டு.**

மகப்பேறு பார்க்கத் தனியாக மருத்துவச்சி கிடையாது. பிரசவம் வீட்டில் நடைபெறும். தற்போது, தவிர்க்க முடியாத நிலையில் மருத்துவமனைக்குக் கொண்டு செல்கிறார்கள். நஞ்சுக் கொடி துண்டித்துப் பொதுச் சுடுகாட்டில் புதைத்து மண்சட்டி வைத்து அதனை மூடிவிடுவர். மகப்பேறு திண்ணையில்தான் நடைபெறும்.

*4. இறப்புச் சடங்கு எவ்வாறு செய்கிறீர்கள்?*

இம்மலையாளிகளுக்கு மேளம் (தப்பு) அடிப்பதற்கும், சவச் சடங்கு செய்வதற்கும் சேட்டூர் என்ற ஊரிலிருக்கும் பறையர்கள் வருகிறார்கள். ஒவ்வொருவரின் வசதிக்குத் தக்கவாறு அவர்களுக்குக் கூலி கொடுப்போம்.

***5. உங்கள் இனத்தில் யாரும் இறப்புச் சடங்கு செய்கிறீர்களா?***

***இல்லை, சேட்டூர் பறையர்கள் தான் செய்வார்கள். நாங்கள் கவுண்டர் இனம். பறையர்களை நாங்கள் வீட்டிற்குள் விட மாட்டோம். அவர்கள் வீட்டில் தண்ணீர்கூட வாங்கிக் குடிக்க மாட்டோம்.***

***2 கருப்பு முடிக்குதல் என்றால் என்ன?***

***குழந்தை பிறந்து இறந்துவிட்டாலோ அல்லது இறந்து பிறந்தாலோ 'கருப்பு முடிக்குதல்' என்ற வழக்கம் உண்டு. சாமி அழைத்துப் பேய் ஓட்டுதலே கருப்பு முடிக்குதல் என்று பெயர். ஊர்ப்பொங்கல் முடிந்த பின்னால் கருப்பு முடுக்குவதும் உண்டு. கையில் எருக்கங்கொம்பை எடுத்துக் கொண்டு பெண்கள் சிலர் கருப்பை ஓட்டி வருவர். அப்பொழுது எவரேனும் வெளியில் இருந்தால் கருப்பு அடித்துவிடும்.***

## பேட்டி எண்:7

| | |
|---|---|
| **பேட்டி கண்டவர் :** | **பேட்டி கொடுத்தவர்:** |
| *பெயர்: கலா* | *பெயர்: ரா.முருகேசன்* |
| *முனைவர்பட்ட ஆய்வாளர்(ப.நே)* | *வயது: 48* |
| *அழகப்பா பல்கலைக்கழகம்* | *படிப்பு: ஐந்தாம் வகுப்பு* |
| *காரைக்குடி - 3* | *தொழில் : விவசாயம்* |
| | *ஊர்: பகடுப்பட்டு* |
| | *நாள்: 18.02.2008* |

***1.** இந்து மலையாளி இனத்தில் நடைபெறும் மணமுறிவு எவ்வாறு நடைபெறுகிறது?*

*பெண் தனக்குக் கணவனைப் பிடிக்காவிட்டால் உறவை முறித்துக் கொள்ளலாம். அப்பொழுது அவள் ஊர்த் தீர்வை செலுத்த வேண்டும். ஒரு ஆண், தன் மனைவி பிடிக்கவில்லை என்றால், ஊர் மன்றத்தைக் கட்டி, ஊர்த்தீர்வை செலுத்திப் பிரிந்து கொள்ளலாம். அவனே விலகுவதால், பெண்ணிற்கு அவன் கொடுத்த பரியப்பணம் திரும்பப் பெற முடியாது. குழந்தைகள் இருந்தால் அவர்களை அவன் ஏற்றுக்கொள்ள வேண்டும். மனைவியிடத்து அனுப்பினால் அக்குழந்தைக்குச் சேரவேண்டிய சொத்தை அப்பொழுதே பிரித்துத் தரவேண்டும். சொத்து இல்லாத நிலையில் ஜீவனாம்சம் தரவேண்டும். மணமுறிவைத் 'துரும்பு அறுத்தல்' என்கிறோம்.*

***2.** இறப்புச் சடங்கு எங்ஙனம் நடைபெறுகிறது?*

*பழங்குடிகளில் ஒருவர் இறந்துவிட்டால் ஊர்க்கவுண்டர் வீட்டுக்கு இவ்வளவு என தீர்வை வசூல் செய்வார். அது ஆளுக்கு ஆள் மாறுபடுவதில்லை. அப்பணத்தைக் கொண்டு ஈமச்சடங்குகள் நடத்தப்படும் ஒரு இறப்பு நேர்ந்தால் உடனே, அங்கு ஒரு வெடி வெடிப்பார்கள். அவர்கள் பெரும்பாலும் மலைத் தோட்டங்களில் வேலை செய்பவர்களாக இருப்பதினால், ஆள் ஆளாகச் சென்று சந்தித்துச் செய்தி சொல்வது முடியாத காரியம். எனவே தான் வெடி வெடித்து ஊருக்கு சேதி சொல்கிறார்கள்.*

*இறந்தவர்களைப் புதைப்பர் இறந்த அன்று இரவு கூத்தாடிகள் பாடுவர். தோட்டி மேளம் அடிப்பதும் உண்டு. இறந்தவர்களைத் தேர்கட்டி எடுத்துச் செல்வர்.*

**பேட்டி எண்:8**

| | |
|---|---|
| **பேட்டி கண்டவர் :** | **பேட்டி கொடுத்தவர்:** |
| பெயர்: கலா | பெயர்: **வெள்ளையக்கவுண்டன்** |
| முனைவர்பட்ட ஆய்வாளர்(ப.நே) | வயது: 48 |
| அழகப்பா பல்கலைக்கழகம் | **படிப்பு:** மூன்றாம் வகுப்பு |
| காரைக்குடி - 3 | **தொழில் : விவசாயம்** |
| | ஊர்: மலையாளப்பட்டி கத்திரிமலை |
| | நாள்: 18.02.2008 |

*1. திருமணச் சடங்கில் முக்கிய சடங்காக எதனைக் கருதுகிறீர்கள்?*

மலையாளப்பட்டியில் வாழும் பழங்குடிகள், மகனுக்குத் திருமணம் செய்ய விரும்பினால், ஊர்க்கவுண்டருக்கு அறிவிக்க வேண்டும். எந்த ஊரில், எந்தக் குடியில் பெண் இருக்கிறது என்பதை அறிந்து சொல்ல வேண்டும். ஊர்க்கவுண்டர் ஒரு தடியினை வழங்குவார். பெண் பார்க்கச் செல்லும் போது முன்னால் செல்பவர் அந்தத் தடியை முன்னால் எடுத்துச் செல்ல வேண்டும். ஒரு சுரைக்குடுகையில் நீரை நிறைத்து அதனையும் எடுத்துச் செல்ல வேண்டும். அவை இல்லாமல் சென்றால் செல்லும் ஊருக்குச் செய்வித்த அவமானமாகக் கருதப்படும்.

மணமகன் இல்லத்தில் திருமணம் நடைபெறும். ஊர்த்தலைவர் மங்கலநாணை மணமகன் கையில் கொடுக்க, மணமகன் மணமகளின் கழுத்தில் கட்டுவார்.

*2. நடுகல் நடும் வழக்கம் உண்டா?*

இல்லை, இறந்தவர்களை வணங்குவோம். சிறு சிறு கற்களை நட்டு வைத்து சாமியாக வணங்கி வருகிறோம்.

**பேட்டி எண்:9**

**பேட்டி கண்டவர் :**
*பெயர்: கலா*
*முனைவர்பட்ட ஆய்வாளர்(ப.நே)*
*அழகப்பா பல்கலைக்கழகம்,*
*காரைக்குடி - 3*

**பேட்டி கொடுத்தவர்:**
*பெயர்: மருத்துவர் ஏழுமலை,*
*வயது: 55*
*தொழில்: சித்தமருத்துவம்*
*ஊர்: செம்மேடு (கொல்லிமலை)*
*நாள்: 23.02.2008*

*1. எத்தனை வருடங்களாக இந்தத் தொழில் செய்து கொண்டிருக்கிறீர்கள்?*

*சுமார் 25 ஆண்டுகளாகச் செய்துவருகிறேன்.*

*2. வயிற்று வலிக்கு என்ன மருந்து கொடுக்கிறீர்கள்?*

*வயிற்றுவலிக்கு மணத்தக்காளி இலைகளையும், அதன் பழங்களையும் அரைத்துச் சாறாகத் தருகிறேன்.*

*3. சளித் தொல்லையைப் போக்க என்ன மருந்து தருகிறீர்கள்?*

*கொத்தமல்லியையும் சித்ரத்தையையும் தண்ணீரில் கொதிக்க வைத்து வடிகட்டிக் காலை, மதியம், இரவு என மூன்று வேளையும் இரண்டு சங்களவு கொடுத்து வந்தால் சளி முறியும்.*

## பேட்டி எண்:10

**பேட்டி கண்டவர் :**
*பெயர்: கலா*
*முனைவர்பட்ட ஆய்வாளர்(ப.நே)*
*அழகப்பா பல்கலைக்கழகம்,*
*காரைக்குடி - 3*

**பேட்டி கொடுத்தவர்:**
*பெயர்: வள்ளியம்மாள்*
*வயது: 60*
*தொழில்: சித்த வைத்தியம்*
*ஊர்: திண்டுப்பட்டி (வாழவந்தி)*
*நாள்: 23.02.2008*

***1.*** *கருக்கலைப்புக்கு என்ன வைத்தியம் செய்கிறீர்கள்?*

***காட்டு முருங்கை மரத்தின் முதிர்ந்த பட்டையினை இடித்துச் சாறு பிழிந்து அந்தச் சாற்றுடன் சிறிதளவு மிளகுப்பொடி சேர்த்துக் கருச்சிதைவு மருந்தாகக் கொடுக்கிறேன். கர்ப்பமுற்ற முதல் மூன்று மாதங்களுக்குள் சாப்பிட்டால் இது பயனுள்ளதாக இருக்கும்.***

***2.*** *குழந்தைகள் வாந்தி எடுத்தால் என்ன மருந்து கொடுப்பீர்கள்?*

***வசம்பை அரைத்துத் தாய்ப்பாலில் கலந்து கொடுக்கச் சொல்வேன்.***

***3.*** *தேள்கடிக்கு மருந்து என்ன?*

***'அத்தி குச்சி எவள் சாண் கிரி கிரி சலசல' என்று தேள்கடித்த இடத்தில் விளக்குமாற்றுக் குச்சியை வைத்து அடித்து 108 தடவை சொல்லச் சொல்வேன்.***

**தகவலாளிகளின் பெயர்கள்:**

பாடல் பாடியவர்களும், தகவல் தந்தவர்களும்

1. பெயர்: கே.கொங்கியம்மாள்
   ஊர் : தண்ணிமாத்திப்பட்டி
   படிப்பு: இல்லை
   வாழ்நிலை: திருமணமானவர்
   தொழில் : கூலிவேலை

2. பெயர்: ராமசாமி
   ஊர் : வளக்காப்பட்டு
   படிப்பு: ஐந்தாம் வகுப்பு
   வாழ்நிலை: திருமணமானவர்
   தொழில் : விவசாயம்

3. பெயர்: சின்னசாமி கவுணடர்
   ஊர் : சின்னமாங்கோடு
   படிப்பு: இல்லை
   வாழ்நிலை: திருமணமானவர்
   தொழில் : விவசாயம்

4. பெயர்: பிச்சாக்கவுடர்
   ஊர் : கும்பாப்பாடி
   படிப்பு: நான்காம் வகுப்பு
   வாழ்நிலை: திருமணமானவர்
   தொழில் : விவசாயம்

5. பெயர்: சித்தாக்கவுடர்
   ஊர் : மணியாரகுண்டம்
   படிப்பு: மூன்றாம் வகுப்பு
   வாழ்நிலை: திருமணமானவர்
   தொழில் : விவசாயம்

6. பெயர்: சே.முத்துசாமி
   ஊர் : பனங்காட்டுப்பட்டி (அரியூர் நாடு)
   படிப்பு: ஐந்தாம் வகுப்பு

வாழ்நிலை: திருமணமானவர்
தொழில் : விவசாயம்

7. பெயர்: ராசாத்தி க/பெ.அப்பாதுரை வயது: 35
ஊர் : நத்துக்குளிப்பட்டி (கொல்லிமலை)
படிப்பு: ஐந்தாம் வகுப்பு
வாழ்நிலை: திருமணமானவர்
தொழில் : வியாபாரம் (வடை, பணியாரம்)

8. பெயர்: சி.செல்லதுரை, வயது: 36
ஊர் : கொல்லிமலை
படிப்பு: M.A., B.Ed.,
வாழ்நிலை: திருமணமானவர்
தொழில் : அறப்பளீசுவரர் திருக்கோயில் பணியாளர்

9. பெயர்: முருகேசன் குழுவினர்
ஊர் : ஓடக்காடு (வளப்பூர் நாடு)
படிப்பு: பத்தாம் வகுப்பு
வாழ்நிலை: திருமணமானவர்
தொழில் : விவசாயம்

10. பெயர்: சரோஜா
ஊர் : தண்ணிமாத்திப்பட்டி (வாழவந்திநாடு)
படிப்பு: எட்டாம் வகுப்பு
வாழ்நிலை: திருமணமானவர்
தொழில் : விவசாயம்

11. பெயர்: லதா
ஊர் : தண்ணிமாத்திப்பட்டி (வாழவந்திநாடு)
படிப்பு: பத்தாம் வகுப்பு
வாழ்நிலை: திருமணமானவர்
தொழில் : விவசாயம்

12. பெயர்: சின்னச்சாமி கவுண்டர்
ஊர் : கருமந்துறை (கல்வராயன்மலை)

*படிப்பு: பத்தாம் வகுப்பு*
*வாழ்நிலை: திருமணமானவர்*
*தொழில் : விவசாயம்*

***13.** பெயர்: வெள்ளையக்கவுண்டன்*
*ஊர் : மலையாளப்பட்டி (கத்திரிமலை)*
*படிப்பு: மூன்றாம் வகுப்பு*
*வாழ்நிலை: திருமணமானவர்*
*தொழில் : விவசாயம்*

***14.** பெயர்: மருத்துவர் ஏழுமலை*
*ஊர் : கொல்லிமலை*
*படிப்பு: சித்தமருத்துவம்*
*வாழ்நிலை: திருமணமானவர்*
*தொழில் : மருத்துவம்*

***15.** பெயர்: நெய்யாமணி*
*ஊர் : அக்கரைப்பட்டி*
*படிப்பு: இல்லை*
*வாழ்நிலை: திருமணமானவர்*
*தொழில் : விவசாயம்*

***16.** பெயர்: சி.பெருமாள்*
*ஊர் : கருமந்துறை*
*படிப்பு: ஏழாம் வகுப்பு*
*வாழ்நிலை: திருமணமானவர்*
*தொழில் : விவசாயம்*

***17.** பெயர்: வள்ளியம்மாள்*
*ஊர் : திண்டுப்பட்டி (வாழவந்தி நாடு)*
*படிப்பு: ஐந்தாம் வகுப்பு*
*வாழ்நிலை: திருமணமானவர்*
*தொழில் : கூலிவேலை*



**அறம் வளர்த்த நாயகி உடனுறை அறப்பளீஸ்வரர் திருக்கோயில் - கொல்லிமலை**









***சங்க காலத்தில் காணப்படுவதைப் போல, மலையின மக்கள் பாறைகளில்***

***காணப்படும் குழிகளை உரலாகப் பாவித்தல்***







**இந்து மலையாளிகளின் தாலி**







**மாசி பெரியண்ணன் கோயில்**







**நேர்த்திக்கடனுக்காக நடப்பட்ட வேல்கம்பிகள்**




**வல்வில் ஓரி சிலை**



**கால்நடைகள் அடைத்து வைக்கப்படும் குடிசை**




**தமிழ்நாடு இந்து மலையாளி விவசாய முன்னேற்ற சமூக சங்கத்தின் கல்வெட்டு**